மும் அனுமதிபெற்று ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளி, உடையவர் ஸத்கரிக்க, அவரிடம் தேவரீருக்குத் திருவாய்மொழி ஓதுவித்தேனென்று அடியேனைத் திருவேங்கடமுடையான் ஆதரித்த விஷயத்தை அடியேனால் சொல்லிவிட முடியாது என்று கூறி, திருமலைநம்பி அனந்தாழ்வான் நியமித்ததையும் அதைத் தாம் அநுசரித்ததையும் விவரமாக அருளிச்செய்தார். (திருமலையொழுகு)

இன்னொரு சமயம் இந்த அரையர் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்தருளும்போது பூர்வவாஸனையாலே கங்குலும் பகலுமென்ற பத்துப்பாட்டையும் தேவகானத்திலேறிட்டுப் பாடாநிற்க, பெருமாளுகந்து வாரீர் அரையரே, ஆழ்வார் நம்பக்கல் மோஹித்து நாயிகாதசையை அடைந்து நம்மையநுபவித்த ப்ரகாரத்தை அநுசரித்துக் காட்டினீர், இது நமக்கு மிகவும் இனியதாயிருந்தது, கலியன் நாயிகாதசாபந்நராய் நம்மையநுபவித்த சொல்லிலே ஒன்றைச் சொல்லீர் என்ன, அரையர் கலியன் மடலூர்ந்து பகவதநுபவம் பண்ணின சிறிய திருமடலைப் பரவசராய் ஈடுபட்டருளிச் செய்யக் கேட்ட திருவேங்கடமுடையான் அரையருக்கு வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருளினான். (திருமலையொழுகு)

எம்பெருமானார்

திருமலையிலும் திருப்பதியிலும் ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் செய்தருளிய அமாநுஷக்ருத்யங்கள் கணக்கிலடங்கா. திருமலையொழுகு இதிஹாஸமாலை முதலிய சரித்திர நூல்களில் அவற்றையெல்லாம் காண்க. முக்கியமென்று கருதிய சில சரித்திரங்கள் மட்டும் இங்கு விண்ணப்பிக்கப்படுகின்றன.

இக்கலியுகாதியில் திருவேங்கடமுடையான் தன் பரமபக்தனாகிய தொண்டைமான் சக்ரவர்த்திக்குச் சத்ருஸம்ஹாரார்த்தமாகத் திருவாழி திருச்சங்குகளைத் தாம் கொடுத்தருளிய பெருமையை உலகோர்க்கு அறிவித்தற்பொருட்டுத் திருக்கைகளில் திருவாழி திருச்சங்குகளில்லாமல் ஸேவை ஸாதிப்பதைக் கண்ட காளஹஸ்திச்சைவர் சிலர், யாதவராஜன் திருமலையப்பனுக்குத் திருவாராதனம் செய்யும் ஸ்ரீவைகாநஸார்ச்சகர்களிடம் ஏதோ காரணமாகச் சிறிது கோபமுற்றிருந்த ஒரு சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு, திருமலையப்பனைப்பற்றி இவன் கந்தனென்றும் சிவனென்றும் ஹரிஹரமூர்த்தியென்றும் தம் மனம்போனபடியெல்லாம் அரசனிடம் கூறி இத்திவ்ய தேசத்தை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள முயன்றபோது, திருமலையிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களால் அழைக்கப்பெற்ற எம்பெருமானார் ஸ்ரீரங்கத்திலிருந்து எழுந்தருளி அரசனது சபையில் சைவர்களுடன் வாதம்புரிந்து ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராண திவ்யப்ரபந்தாதி ப்ரமாணங்களை உபந்யஸித்துத் திருவேங்கடமுடையான் ஸ்ரீமஹாவிஷ்ணுவே என்று நிலைநாட்டியருளியதோடல்லாமல், இனி யாருக்கும் எவ்வித ஸந்தேகமும் உண்டாகாதபடி ஸ்வர்ணத்தில் சங்குசக்கரங்களை நிருமாணம் செய்வித்துப் பெருமாளது அநுமதிபெற்று அவற்றை அவர் திருக்கைகளில் சாத்தினார். இதனால் யாதவராஜன் மகிழ்ந்து எம்பெருமானார்க்குச் சிஷ்யனானான். சைவர்களை தேசப்ரஷ்டர்களாக்கினான். இது அவர் செய்தருளிய கார்யங்களில் சிகரமானதாகும். மேலும் கேண்மின்.

திருவேங்கடமுடையான் திருமார்பில் (சிலையுருவத்திலேயே) அகலகில்லேனிற்படியே பிராட்டி எழுந்தருளியிருக்கச் செய்தே, ஸந்நிதியில் திவ்யைச்வர்யம்

உண்டாகும் படிக்கு ஸ்வர்ணத்தினுல் த்வி புஜையான திருமார்புநாச்சியாரை ஏறி யருளப்பண்ணிப் பெருமாள் திருமார்பில் சாத்துவித்தார். நாஸிகாமூலம் தொடங் கிக் கேசாந்தமாகப் பெருமாளுக்குத் திருமண்காப்பு அணிவித்தார். செங்கனி வாயன் திருவம்சத்தில் பிறந்த பரமபாக வதர்களான ஸ்ரீவைகாநஸர்களின் திருக் கைகளாலேயே முன்புபோல் திருவாரா தனம்கண்டருளும்படி கட்டளையிட்டார். மார்கழிமாதத்தில் க்ருஷ்ணனே சயனபேர மாக இருக்கும்படி நியமித்தார் பெருமா ளுடைய திவ்யவிமானத்தில் ஸ்ரீவைகா நஸசாஸ்திரத்திற் கூறியபடியே நான்கு பக்கங்களிலும் வராஹ நாரஸிம்ஹ வைகுண்டநாத ஸ்ரீவேங்கடேசர்களை ஏறியருளப் பண்ணுவித்தார். திவ்யநகரா பிவிருத்திக்காகவும் ஸந்நிதியில் திவ்யைச் வர்யம் உத்தரோத்தரம் அபிவிருத்தமாம் படிக்கும், கௌதுகபேரமானமலை குனிய நின்ற பெருமாளை உத்ஸவமூர்த்தி யாகவும் உத்ஸவபேரமான வேங்கடத் துறைவாரைக் கௌதுகபேரமாகவும் மாற்றியமைத்தார் திருவேங்கடமுடை யானுக்கு முன்னமே வராகப்பெருமாள் திருவாராதனமாகி அமுதுசெய்தருளும்படி நியமித்தார். சிவபெருமானுக்கு ஸேவை ஸாதிப்பதற்காகத் தோன்றியதாக ப்ரஹ் மாண்டாதி புராணங்களில் சொல்லப் பட்ட அழகியசிங்கர்பக்கத்திலே அவ ருடைய பக்தனை எங்கள்சிவபிரானையும் ப்ரதிஷ்டைசெய்து கொள்ளுகிறோமென்று ஒருகால் சைவர்கள் சண்டையிட, வைஷ்ணவர்கள் அரசன் மூலமாக அதைத் தடுத்து நிறுத்தி, கலஹத்துக்குக் காரண மான இந்த அழகிய சிங்கருக்குத் திருவா ராதனம் வேண்டாமென்று நிறுத்தி விட்டதாகக் கேள்விப்பட்ட எம்பெரு மானுர், இனிச் கலஹத்திற்கு இடமில்லாத படி திருமலை விஷ்ணு ஸ்தலமென்று ஸ்தாபிக்கப்பட்டுவிட்டபடியினுல், அழ கியசிங்கருக்குத் திருவாராதனலோபம் உண்டானுல் ஸ்தலத்துக்கு அநிஷ்ட மென்று நினைந்தருளி அவரைத் திருவேங் கடமுடையானுக்கு எதிரே ப்ரதிஷ்டை செய்வித்துத் திருவாராதனமும் நடக்கும் படி நியமித்தார். சோழவரசனது உபத் திரவத்தினுல் திருச்சித்ர கூடத்திலிருந்து உபயநாச்சியாருடன் எழுந்தருளிய தேவாதி தேவனென்னும் கோவிந்தராஜ வுத்ஸவமூர்த்தியை ஒரு மூலவரையேறி யருளப்பண்ணி அவருடன் கீழ்த்திருப் பதியில் ப்ரதிஷ்டைசெய்வித்தார். அவ ருடைய இடது பக்கத்தில் ஆண்டாளையும் ப்ரதிஷ்டை செய்வித்தார். திருமலை நம்பியை வழியில் தடுத்து அவர் கொண்டு செல்லும் திருமஞ்சனதீர்த்தத்தைத் திரு வேங்கடமுடையான் அமுதுசெய்தருளிய ஐதிஹ்யத்தை அது நடைபெற்ற-அத்ய யனுேத்ஸவம்முடிந்த மறுநாளிலேயே, திருமலைநம்பி வம்சத்தில் பிறந்த ஸ்ரீவைஷ் ணவர் பாபநாசத்திலிருந்து தீர்த்தம் கொண்டு வரும்போது திருமலையப்பனை எழுந்தருளப்பண்ணிக் கொண்டுசென்று, அவர் அத்தீர்த்தத்தைப் பானம்செய் தருளும் பாவனையில் ஒருத்ஸவமாக நடத்திவைத்தார். அனந்தாழ்வான் தமது தோட்டத்தில் புஷ்பம் களவுபோவதைக் கண்டுபிடிக்கவேணுமென்று இரவில் தூங்காமல் தோட்டத்தில் சுற்றிவர, பெருமாளும் பிராட்டியுமாக ராஜதம்பதி கள் வேஷத்தில் எழுந்தருளி ஒருவருக்கும் தெரியாமல் புஷ்பங்களைக் கொய்துசெல்ல, ஒருநாள் அவருக்குக் கையும் களவுமாகப் பிடிபட்ட திவ்யதம்பதிகளில் பெருமாள் மட்டும் தப்புவித்துக்கொண்டு ஓடி அப்ரதக்ஷிணமாகக் கோவிலுக்குள்ளே புகுந்தாரென்றும், பிராட்டிபிடிபட்டு அனந்தாழ்வானுல் செண்பக மரத்தில் கட்டுண்டு, 'என்னிடம் தவறேதுமில்லை, என்கணவன்தான் புஷ்பத்தைக் களவு

கண்டவன், தயைசெய்து என்னை விட்டு விடுவீராஞல் உமக்கு நான் பெண்ணுக ஆவேன்' என்று கூறிக்கொண்டிருக்க, அப்போது பொழுது விடிந்து அர்ச்சகர் முதலியோர் திருமார்பில் நாச்சியாரைக் காணமல் வருந்திநிற்க, பெருமாள் ஒரு வனை ஆவேசித்து நடந்ததைச் சொல்லிப் பிராட்டியையும் அனந்தாழ்வானையும் அழைத்துவரும்படி கட்டளையிட, பரி ஜனங்கள் தோட்டத்திற்கு வந்து விண் ணப்பிக்க, மணத்திற்குரிய பருவத்திலிருக் கும் கந்யையாக ஸேவைஸாதிக்கிற பிராட் டியைக் கட்டவிழ்த்துப்போர வேண்டி, அவள் கூறியபடியே தன் பெண்ணுக அவளையெண்ணி இடுப்பில் எடுத்துக் கொண்டு சென்று, பெருமாளை க்ஷமிக்கும் படி ப்ரார்த்தித்து அப்பிராட்டியைப் பெருமாளிடம் ஸமர்ப்பிக்க, அவள் சிலம் பார்க்கச் சென்று திருமார்பில் ஸ்வர்ண மயமான கண்டிகையில் சேர்ந்து முன் போல் விளங்கிஞள் என்றும் சரிதத்தைக் கேட்ட எம்பெருமாஞர் ப்ரஹ்மோத் ஸவத்தின் ஏழாந்திருநாள் மாலை நடக்கும் தோட்டவுத்ஸவத்தில் பெருமாளை அப்ரதக்ஷிணமாக எழுந்தருளும்படிக்கும், எட்டாம் திருநாள் காலை நடக்கும் திருத் தேருத்ஸவத்தில் அனந்தாழ்வான் தோட்ட வாசலில் மருமகப்பிள்ளையான பெருமாளுக்கு அனந்தாழ்வான் மாமஞர் செய்யும் ஸம்பாவனையாகத் திருப்பரிவட் டம் ஸமர்ப்பிக்கும்படிக்கும் நியமித்து நடத்தியருளிஞர். (அப்ரதக்ஷிணேத்ஸவம் இப்போது ஏழாம்நாளில் நடவாமல் தீர்த்தவாரி தினத்திற்கு மறுநாளில் நடக் கிறது) இங்ஙனே பல நியமனங்கள் திரு மலை யொழுகில் காணத்தக்கன. இனி அரு ளிச்செயல் ஸேவையில் சில திருத்தங்கள் எம்பெருமாஞரால் செய்தருளப்பட்டவை உள. அவை மேலே காண்க.

முதலாழ்வார்களின் பாசுரத்தைத் திருவேங்கடமுடையான் மிக விரும்பிக் கேட்டாரென்பதை ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் வாயிலாக அறிந்த எம் பெருமாஞர்— "செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவர்" என்ற கலியனருளிச் செயல் துணுக்கைக்கு முதலாழ்வார்கள் வணங்கும் திருவேங்கடமுடையான் என் னும் பொருளைப் பெரிய பெருமாளுடைய சிஷ்ய ஸம்ப்ரதாயத்தில் கேட்டிருந்த தற்கு அரையர் கூறியதை ஸம்வாதமாக நினைத்தருளி, நாதமுனிகளின் திருவம்சய ரான ஓர் அரையரை (ஸ்ரீரங்கத்தில் இருந்தவரை) அழைத்து மலைகுனிய நின்ருரரையரென்று திருநாமம் சாத்தி, திருமலைக்குச் சென்று அத்யயனேத்ஸவத் தில் முதன்முதலாக இயற்பாவை அனு ஸந்தித்துப் பின்பு முதலாயிரம் பெரிய திருமொழிகளை அநுஸந்தித்துத் திருவாய் மொழிசாத்திய மறுநாள், — அனந்தாழ் வான் நாள்தோறும் புஷ்பகைங்கர்யம் செய்துகொண்டும் ஆழ்வார்கள் திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்துகொண் டும் மதுரகவிகளைப்போல் சரமபர்வ நிஷ்டராய் எப்போதும் கண்ணிநுண் சிறுத்தாம்பை அநுஸந்தித்துக்கொண் டிருக்கிறவராய் மதுரகவிதாஸரென்று திருநாமம் பெறுகையாலே அவருகந்த — கண்ணிநுண்சிறுத்தாம்பை ஸந்நிதியில் பெருமாள் திருமுன்பு தனியாக அநுஸந் திக்கும்படி நியமித்து அவரைத் திருமலைக் கனுப்பியருளிஞர். அரையர் திருமலைக் கெழுந்தருளித் திருமலைநம்பி அனந்தாழ் வான் ஆகியவர்களோடு ஸந்நிதிக்குச் செல்ல, அனந்தாழ்வான் உடையவர் நிய மனத்தைப் பெருமாளுக்கு விண்ணப்பிக் கத் திருமலையப்பனும் நம்மிராமாநுசன் நியமனத்தைப் பரிபாலனம் பண்ணு கிறேம் என்று உகப்புடன் அருளிச் செய்து அப்படியே நடத்தும்படி அனந் தாழ்வானுக்குக் கட்டளைபண்ணிஞன். அதுமுதல் இதுவரையில் அப்படியே

நடந்து வருகிறது. ஆழ்வார் திருவரங்கப்
பெருமாளரையர் கங்குலும் பகலும்
திருவாய்மொழியையும் சிறிய திருமடலை
யும் தேவகானத்திலேறிட்டுப் பாடத்
திருமலையப்பன் மிகவுமுகந்தானென்
பதைக் கேட்ட எம்பெருமானார் பகலில்
திருமாலை சாத்தும்போது சிறியதிருமடலை
யும் மாலையில் நித்யாநுஸந்தானத்தில்
கங்குலும் பகலும் பதிகத்தையும் அநுஸந்
திக்கும்படி நியமித்தார். (சிறியதிருமடல்
இப்போது வெள்ளிக்கிழமையில் மட்டுமே
அனுஸந்தானத்தில் உள்ளது.) வெள்ளிக்
கிழமைகளில் மூலவருக்குத் திருமஞ்சன
மானவுடன் திருமார்பிலுள்ள பிராட்
டியை இறக்கித் திருமஞ்சனம் கண்டரு
ளச் செய்யும்போது, பிராட்டியின் பிரி
வைப் பொறுக்கமாட்டாத திருவேங்கட
முடையானுடைய விச்லேஷவ்யஸனத்தை
ஒருவாறு பரிஹரிக்க நினைத்த எம்பெரு
மானார், பிராட்டியின் அபராவதாரமாய்
பூதேவியின் அம்சமான ஆண்டாள் பெரு
மாளைப் பிரிந்து ஆற்றாமையில் அநுஸந்
தித்த நாச்சியார் திருமொழியைத்
திருவேங்கடமுடையான் கேட்டுத் தரிக்
கட்டுமென்று நினைத்து நாச்சியார்
திருமொழியை அப்போது அநுஸந்திக்கு
மாறு ஆணையிட்டார். காசிராஜாவின்
மனைவியினுடைய கனவில் திருவேங்கட
முடையான் தோன்ற, அவள் ஸந்தானம்
வேண்டுமென்று அபேக்ஷிக்க, உன்
நாஸாமணியை (மூக்குத்திருகு அல்லது
புலாக்கு) எனக்குத் தந்தால் நான் உனக்கு
ஸந்தானம் அருளுகிறேனென்று பெரு
மாள் அருளிச்செய்ய, என் கணவரின்
ஸம்மதி வேணுமே என்று அவள் கூற,
அப்படியானால் உனக்கு நான் பிள்ளைப்
பேறு அருளுவதற்கும் என் அண்ணரான
கோவிந்தராஜன் அனுமதி வேணுமென்று
வேங்கடவன் அருளிச்செய்தான் என்ற
ஐதிஹ்யத்தைக் கேட்டிருந்ததனாலும்,
திருவேங்கடமுடையானும் கோவிந்தராஜ
னும் ஸ்ரீவைகாநஸாகமத்தில் ஒரே ஸம்
ஹிதையில் கூறியபடியே நித்யாராதன-
மகோத்ஸவாதிகள் கண்டருளுகையாலும்
எம்பெருமானார் இவ்விருவரையும் ஒரு
கோவிலிலுள்ள பஞ்சபேரங்கள்போல்
ஐக்யமுடையவர்களாக நினைத்தருளி,
திருவேங்கடமுடையான் மாலையில்
நித்யாநுஸந்தானம் கேட்டருளும்போது
கோவிந்தராஜனுடைய ஊன்வாட, வாட
மருதிடை என்ற இரு திருமொழிகளையும்
கேட்டருளும்படியாகவும், கோவிந்த
ராஜன் மாலையில் நித்யாநுஸந்தானம்
கேட்டருளும்போது ஒழிவில்காலம், உலக
முண்ட என்ற இரண்டு திருவாய்மொழி
களையும் கேட்டருளும்படியாகவும் நிய
மனம் செய்தருளினார். த்வஜாரோஹணத்
தன்று மாலையில் யாகசாலையில் கலசங்
களிலே தேவதாவாஹநம் பண்ணி ஆரா
தனத்தைச் செய்த பிறகு வேதபாரா
யணம் தொடங்குவது ப்ரமாணஸித்த
மாகையாலே தத்ஸமமான த்ராவிட
வேதத்துக்கும் தொடக்கம் அப்படியே
செய்வது உசிதமாகையாலே இரவுப்புறப்
பாட்டில் இயல் தொடங்கவேண்டுமென்
றும் காலைப்புறப்பாட்டில் வேண்டா
மென்றும் எம்பெருமானார் நியமித்தார்.
பாராங்குசநாயகிக்கும் எம்பெருமானுக்
கும் நடந்ததாக மின்னிடைமடவார் பதி
கத்தில் உள்ள ப்ரணயகலஹத்தை,
'பின்னைகொல் நிலமாமகள்கொல் திரு
மகள்கொல் பிறந்திட்டாள்' என்று திருத்
தாயார் பராங்குசநாயகியைப் பிராட்டி
மாராகவே சங்கிக்கையால் உபயநாச்சி
யார்க்கும் பெருமாளுக்கும் நடப்பதாக
இரண்டு பக்கங்களிலும் இரண்டு
ஸ்ரீவைஷ்ணவர்கள் புராணம் வாசிக்கச்
செய்து, ஒருத்ஸவமாக (அத்யயனோத்
ஸவம் இராப்பத்து ஆறும்நாள் மாலையில்)
நடத்திவைத்தார்.

மேல்நாட்டில் சிறுப்புத்தூரில் அவதரித்த அனந்தாழ்வான், ஆழ்வான் ஆண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலிய சிஷ்யர்களால் ஆச்ரயிக்கப் பெற்ற எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிப்பதற்காகக் கோயிலுக்கு வர, அவரை எம்பெருமானார் அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினார். ஆரம்பமே பிடித்து ஆசார்யபாரதந்த்ர்யத்தை விரும்பிய அனந்தாழ்வான் மிகவும் உகந்திருக்க, அருளாளப் பெருமாளெம்பெருமானார் அனந்தாழ்வானிடம் 'குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே உடையவர் செய்தார், நீர் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்றருளிச் செய்தார். பின்பு உடையவரிடம் திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டுக் கொண்டிருக்கும்போது ஒழிவில்காலம் நடவாநிற்க 'சிந்துபூமகிழும் திருவேங்கடம்' என்ற இடம் ப்ரஸ்துதமாக, 'புஷ்பமண்டபமான பெரிய திருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருநந்தவனம் செய்து திருமாலை கட்டிச் சாத்துவார் இக்கோஷ்டியில் ஆரேனும் உண்டோ?' என்று உடையவர் கேட்டருள, அனந்தாழ்வான் எழுந்திருந்து அடியேன் விடைகொள்ளுகிறேனென்று விண்ணப்பித்து ஆசார்யபரதந்த்ரராய் உடனே திருமலைக்கு எழுந்தருளிப் பெருமாளை ஸேவித்துத் திருநந்தவனம் அமைத்து, முன்பு ஆளவந்தார் குடில் கட்டிக் கொண்டெழுந்தருளியிருந்த இடத்தில் யமுனைத்துறைவர் என்ற பெயரையுடைய ஓர் மண்டபத்தையும் உடையவருத்தரவின்படி ஏற்படுத்தித் தோட்டத்தில் மலரும் மலர்களை அம்மண்டபத்திற்குக் கொண்டுவந்து மாலையாகக் கட்டித் திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பித்து வந்தார். உடையவர் திருவாய்மொழி காலக்ஷேபத்தை முடித்துச் சாற்றுமுறை செய்துவிட்டுப் பெரிய பெருமாளிடம் அநுமதி பெற்றுத் திருமலைக்கெழுந்தருளித் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுது தோட்டத்திற்கு எழுந்தருளிக் கடாக்ஷித்து 'வளர்த்ததனால் பயன்பெற்றேன்' என்று கூறி அனந்தாழ்வானை அணைத்துக்கொண்டார். அனந்தாழ்வான் திருமலையில் ஏரிவெட்டும்போது கர்ப்பவதியான தம் தேவிகளைக்கொண்டு மண் சுமத்தாநிற்க, இதைக்கண்ட திருவேங்கடமுடையான் ஒருப்ரஹ்மசாரியுருவில் சென்று அவளிடமிருந்து நிர்ப்பந்தமாக மண்கூடையை வாங்கிக்கொண்டு சென்று மண்ணை வேறோரிடத்தில் சேர்த்து வருவதைக் கண்டு, அனந்தாழ்வான் நான் செய்யும் கைங்கர்யத்திற்குத் தடைசெய்யாதே, கூடையைத் தொடாதே என்று பிரட்டியும் கேளாது மண்கூடையை வாங்கிக்கொண்டு செல்லும் ப்ரஹ்மசாரியைத் துரத்திச்சென்று கடப்பாரையினால் அவரையடித்தார். மோவாயில் பலமாக அடிபட்ட திருவேங்கடவன் கோயிலுக்குள் புகுந்துகொண்டு, பின்பு அனந்தாழ்வானால் அபசாரக்ஷாமணம் வேண்டப்பெற்றான். அனந்தாழ்வான் அடிபட்ட இடத்தில் புஷ்பதூளிகளை எடுத்து அழுத்தினார். 'பக்தனால் ஏற்படுத்தப்பட்ட இந்த இடத்திற்குத் தினந்தோறும் பச்சைக் கருப்பூரப் பொடியை அழுத்தி, நான் பக்தன் அடித்தாலும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்பவனென்பதை உலகறியச் செய்யுங்கோள்' என்று அர்ச்சகர்களுக்குத் திருமலையப்பன் ஆணையிட்டருளினான். அடித்த கடப்பாரை பெருமாளுத்தரவின்படி பெரிய கோபுரவாசலுக்குள் வடக்குப்பக்கத்தில் தொங்கவிடப்பட்டிருக்கிறது. இன்றும் காணலாம். அனந்தாழ்வான் தோட்டத்தில் புஷ்பம்

பறியாநிற்கத் திருக்கையில் அரவம் தீண்டப் பின்புபோய் நீராடிப் புஷ்பம் பறித்தார். விஷம் தீர்க்க உபாயமேதும் செய்யவில்லை என்பதனையறிந்த திருவேங்கடமுடையான் விஷந்தீர்க்கவேண்டாவோ என்று கேட்டருள, ஸ்வாமீ, கடியுண்ட பாம்பு வலிதாகில் திருக்கோனேரியில் நீராடித் தேவரீருக்குத் தொண்டு செய்கிறேன். கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் தீர்த்தமாடி ஸ்ரீவைகுண்டநாதனுக்குக் கைங்கரியம் செய்கிறேன் என்று கூறி, உடையவர் திருவருளால் தமக்கேதும் அபாயம் நேராதென்பதனை வெளியிட்டருளினார். ஒருநாள் அனந்தாழ்வான் யமுனைத்துறைவர் மண்டபத்தில் திருமாலை கட்டாநிற்க, திருவேங்கடமுடையான் அழைத்தருள, அப்பொழுது செல்லாமல் திருமாலை கட்டிமுடித்து எடுத்துக் கொண்டுசெல்ல, நான் அழைத்தபோது நீர் ஏன் வரவில்லை என்று பெருமாள் கேட்டருள, புஷ்பம் மலருவதற்குள்ளே மாலை கட்டவேணுமென்று உடையவருத்தரவிருக்க, தேவரீரால் எனக்கென்ன காரியம் என்ன, பெருமாள் நான் உம்மை இங்கிருந்து போகச்சொன்னால் நீர் என் செய்வீரென்ன, அனந்தாழ்வான் 'பரன் சென்று (=வந்து) சேர் திருவேங்கடம்' என்கிறபடியே தேவரீர் வந்தேறிகள். இந்த இடம் தேவரீரை ஆச்ரயித்தவர்களதன்றோ? என்று கூறத் திருவேங்கடமுடையான் மிகவும் உகந்தருளினான். எம்பெருமானாருடைய அவதாரஸமாப்தியைக் கேட்ட அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானோடு முசித்து ஒருவருஷ காலம் திருநந்தவன கைங்கர்யத்தையும் உபேக்ஷித்திருக்கத் திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானை அழைப்பித்து, உமக்கென்னவேண்டும், நாமே தலைக்கட்டுகிறோம் என்ற பின்பு, ஒரு காலத்தில் தேவரீர் விட்டருளிய திருவாழி திருச்சங்குகளைத் தேவரீர்க்கு அளித்தும் பாஹ்யகுத்ருஷ்டிகள்மண்ணுண்ணும்படி, தேவரீரே பரதத்வமென்றும் மோக்ஷப்ரதமென்றும் நிரூபித்து ஸ்ரீபாஷ்யம் செய்தருளியும் உபகரித்த எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை, தேவரீர் அத்யயனோத்ஸவத்தின் முடிவில் திருச்செவி சாத்தியருளவேணும், ஏற்கெனவே உடையவரால் அடியேனுக்கு அளிக்கப்பெற்று அடியேன் திருவாராதனம் செய்து வரும் எம்பெருமானாரின் அர்ச்சாவதாரத் திருமேனியைத் தேவரீருடைய திருமுன்பே ஸந்நிதியில் திருப்ரதிஷ்டை கொண்டருள ஸம்மதிக்கவேணுமென்று அனந்தாழ்வான் விண்ணப்பிக்கப் பெருமாளும் மிகவும் உகந்து ஸம்மதிக்க அவ்விரண்டையும் அனந்தாழ்வான் நிறைவேற்றி வைத்தார்.

இப்படி திருவேங்கடமுடையானுக்கு அத்யந்த ப்ரியராய் ஆசார்யநிஷ்டராயெழுந்தருளியிருந்த அனந்தாழ்வானுக்குத் திருப்பதி கோவிந்தராஜன் ஸந்நிதியிலுள்ள மதுரகவி ஸந்நிதியில் அவருக்குப் பக்கத்தில் அர்ச்சைத் திருமேனியைப் பெரியோர் எழுந்தருளப் பண்ணியிருக்கிறார்கள், மதுரகவி சாத்துமுறையன்று கோவிந்தராஜன் மதுரகவிகள் ஸந்நிதிக்கு எழுந்தருளி மதுரகவிகளுடன் மதுர கவி தாஸரான அனந்தாழ்வானுக்கும் ஸகல மரியாதைகளையும் செய்வித்துச் சாத்துமுறை கண்டருளுகிறார். திருமலையில் அனந்தாழ்வான் தோட்டத்தில், அனந்தாழ்வான் உடையவர் திருவடியைச் சார்ந்த பிறகு முளைத்ததோர் மகிழ மரத்தை, 'எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே' என்கிறபடியே திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானாகவே மதித்து, தீர்த்தவாரிக்கு அடுத்ததினத்தில் நடைபெறும் தோட்டவுத்ஸவத்திலும், அனந்தாழ்வான் பரமபதித்ததாகக்

கருதப்படும் நாளான திருவாடிப் பூரத்தினத்தன்றும் மாலையில் தோட்டத்திற்கு எழுந்தருளி அமுது செய்து விநியோகமானவுடன் அம்மரத்திற்குப் புஷ்ப மாலையும் ஸ்ரீ சடகோபனும் ஸாதித்துக் கௌரவிக்கிறார்.

## பெரிய ஜீயர்ஸ்வாமி

திருமலைநம்பி திருநாட்டுக் கெழுந்தருளிய பிறகு அனந்தாழ்வான் ஒருவரால் ஸந்நிதி நிர்வாஹம் செய்வதன் அருமையை எண்ணிய எம்பெருமானார் அனந்தாழ்வானோடு ஆலோசித்து, அனந்தாழ்வானுடைய அந்தேவாஸியாய் இதற்கு முன்பே ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவராக ஸந்நிதியின் நிர்வாஹத்திற்குத் தம்மாலேயே ஏற்படுத்தப்பட்டுள்ள ஸ்ரீ ஸேநாபதி ஜீயருக்கு த்ரிதண்ட காஷாயங்களைத் தந்து பூர்ணஸந்யாஸியாக்கித் திருமலையில் தம்முடைய மடத்தில் ஸ்தாபித்தருளினார். 'வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்' என்று எல்லாவடிமைகளும் செய்யப் பாரித்த ஆழ்வார் வாசிகமாகவன்றிக் காயிகமாக அடிமை செய்யாத குறை தீர்ப்பதற்காக எம்பெருமானார் அந்த ஜீயருக்கு ஸ்ரீசடகோபஜீயர் என்று திருநாமம் சூட்டி அவரிடம் திருவேங்கடமுடையானுடையவும் ஸ்ரீகோவிந்தராஜனுடையவும் ஸமஸ்தைச்வர்ய நிர்வாஹப் பொறுப்பையும் ஒப்புவித்தருளினார். இரண்டு கோவில் சாவிகளும் இரவில் பெட்டியில் வைத்து ஸீல்வைத்து இரண்டிடங்களிலும் இருக்கும் பெரிய ஜீயர்மடத்திற்கு அனுப்பப்பட்டு, மறுபடி காலையில் ஸந்நிதி திறப்பதற்கு முன்னே பெரிய ஜீயர் ஸ்வாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டுசெல்லும் போது எடுத்துச் செல்லப்படுகிறது. இந்த ஜீயருக்குள்ள பெருமைகள் சில முன்னமே விண்ணப்பிக்கப்பட்டுள்ளன.

## மணவாள மாமுனிகள்

ஸ்ரீ ராமாநுஜதர்சனப்ரவர்த்தகராய் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த மணவாள மாமுனிகள் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழவேணுமென்று எழுந்தருளியவர் திருப்பதியில் மதாந்தரஸ்தரால் உபத்ரவம் வாராதபடி, கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர்போலே நிக்ரஹாநுக்ரஹஸமர்த்தரான ஒரு ஜீயரை உண்டாக்கவேணுமென்று நினைத்துத் தம்முடைய சிஷ்யர்களில் (அஷ்டதிக்கஜாசார்யர்களில்) ஒருவராய் ராஜவல்லபராய் பகவத்கைங்கர்ய துரந்தரரான ஒருவருக்குத் திருவேங்கட ஜீயரென்று திருநாமம் சாத்தி அரசனுடைய அனுமதியைப் பெற்று அவரை இளைய கேள்வி ஜீயராக்கித் தனியே திருப்பதியில் மடமும் கட்டிக்கொடுத்து, அவரை எம்பெருமானார் பரம்பரையில் வந்த பெரிய ஜீயருக்குத் துணையாக இருந்து எல்லா நிர்வாஹத்தையும் செய்துகொண்டிருக்கும்படி நியமித்தருளினார். பெரிய ஜீயர்க்கதீனர்களான ஏகாங்கிகள் நால்வரில் யோக்யதையுள்ளவர்கள் சிறிய ஜீயராக எழுந்தருளக் கடவர்கள் என்றும் கட்டளையிட்டருளினார். பெரிய ஜீயர் மடத்தை ஏற்படுத்திய எம்பெருமானாரே அம்மடத்தில் முதல் ஜீயராவர். அவரால் ஏற்படுத்தப்பட்ட சடகோப ஜீயர் இரண்டாமவர். மணவாளமாமுனிகளால் ஏற்படுத்தப்பட்ட சிறிய ஜீயர் பன்னிரண்டாவது பெரிய ஜீயராக ஆனார். இப்போது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸுந்தரராமாநுஜ ஜீயர் ஸ்வாமி நாற்பதாவது பெரிய ஜீயராவர். இந்த ஜீயர்கள் அனைவரும் பட்டாபிஷேகம் செய்து கொண்ட தேதியும் பரமபதித்த தேதியும் மிகமிக விவரமாக மடத்தில் குறித்து வைக்கப்பெற்றிருக்கின்றன. பெரிய ஜீயர் மடத்தில், மணவாளமாமுனிகளும் பதினொன்று பன்னிரண்டாம் ஜீயர்களுக்கு இடையில் பெரிய ஜீயராக இருந்ததாகவும் மடத்தின் குறிப்பில் உள்ளது.

## ப்ரதிவாதிபயங்கரம் அண்ணா

பெருமாள்கோவிலில் அவதரித்து ஹஸ்திகிரிநாதரண்ணாவென்னும் திருநாமத்தையுடைய இவர் தர்சன விரோதிகளான வாதிகளைவென்றவர், லௌகிக வைதிகங்களில் மிக்க நிபுணர், ஸிம்ஹாஸநாதிபதி. இவருக்கு மிக உத்தமியான தேவியும் மூன்று குமாரர்களும் உளர். கைங்கர்யத்துக்கு விரோதியென்று ஐச்வர்யங்களையெல்லாம் பகவத்பாகவத விஷயங்களில் செலவிட்டுப் பரமவிரக்தராய்க் குடும்பத்துடன் திருமலைக்கெழுந்தருளித் திருவேங்கடமுடையானை ஸேவித்திருக்க, திருமலைத்தோழப்பர் உகந்து வெள்ளிக்குடத்தைத் தந்து, 'ஆகாச கங்கையிலிருந்து திருமஞ்சனம் கொண்டு வந்து ஏலாதி வாஸநாத்ரவ்யங்கள் சேர்த்துப் பெருமாளுக்கு நீரே ஸமர்ப்பித்து வாரும்' என்று அண்ணாவுக்கு நியமிக்க அப்படியே அவர் திருமஞ்சனகைங்கர்யத்தை வெகுநாட்கள் நடத்திவந்தார். இப்படியிருக்கையில் கோயிலிலிருந்து ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருமலையப்பனை ஸேவிக்க வந்து நிற்க, அவருக்கு ஸேவையைப் பண்ணுவித்து, மறுநாள்காலை அவர் மணவாளமாமுனிகளின் பெருமைகளை அருளிச்செய்யக் கேட்டுக்கொண்டே ஆகாச கங்கைக்குச் சென்று திருமஞ்சனம் கொண்டு பரிமளம் சேர்க்காமலேயே ஞாபகமில்லாமல் குடத்தைத் திருவாராதனத்துக்கு உபயோகிக்கும்படி கொடுத்த அண்ணா பரிமளம் சேர்க்காததை நினைத்து அபசாரமாயிற்றே என்றார். அர்ச்சகர் அண்ணாவைப் பார்த்து 'இத்தனைநாளை விடப் பரிமளம் விஞ்சித் திருமஞ்சன வாஸனை அதிகமாயிருக்கிறதே, என்ன காரணம்' என்று கேட்க, அண்ணா மணவாளமாமுனிகளின் வைபவத்தைக் கேட்டுக் கொண்டே திருமஞ்சனம் கொண்டுவந்ததனால்தான் இப்படி வாசனை அதிகமாயிருக்கிறதென்றெண்ணி, அந்த ஸ்ரீவைஷ்ணவரை ஸத்கரித்தனுப்பினார். பிறகு சிலநாட்கள் கழித்துத் திருமலையப்பனிடம் அனுமதிபெற்று ஸ்ரீரங்கம் சென்று மணவாளமாமுனிகளை ஆச்ரயித்தார். திருவேங்கடமுடையானுக்கு இவர் செய்த திருமஞ்சன கைங்கர்யம் இவருக்குப் பெரும்பேறான மணவாள முனிகளின் ஸம்பந்தத்தைப் பெறுவித்தது இவர் செய்தருளிய ஸுப்ரபாதம் முதலிய நான்கு துதிகளே இன்றும் திருமலையில் திருக்காப்பு நீக்கும்போது அனுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

### இத்தலத்திய விசேஷாநுஷ்டானங்கள்

(1) அனத்யயனகாலமல்லாத மற்ற காலங்களிலும், திருவாய்மொழி அல்லது கோயில்திருவாய்மொழி ஸேவிக்கும்போது உபதேச ரத்தினமாலையை நியமேந ஸேவித்தல்.

(2) திருவாய்மொழிக்குப் பூர்வோத்தரங்களில் கண்ணிநுண்சிறுத்தாம்பு ஸேவியாமல், தனியாகத் திருவாய்மொழி சாத்துமுறைக்கு மறுநாளில் ஸேவிப்பது.

(3) திருவெழுகூற்றிருக்கையையும் திருநெடுந்தாண்டகத்தில் எல்லாப் பாசுரங்களையும் இரட்டித்து ஸேவிப்பது.

(4) மற்ற ஆழ்வாராசார்யர்களுக்குப் போல் சேனைமுதலியார் தாயார் ஆண்டாள் இம்மூவர்க்கும் கோவிந்தராஜனுடைய பரிவட்டம் கட்டி ஸ்ரீசடகோபன் ஸாதித்து வஸ்த்ர - மாலைகளைப் பஹுமானமாக ஸாதிப்பது (ஸேனைமுதலியாரும் தாயாரும் ஆசார்யகோடியிலுஷ்ம், ஆண்டாள் ஆழ்வார் கோஷ்டியிலும் சேர்ந்திருத்தல் இதற்குக் காரணமென்று பெரியோர் கூறுவர்.)

(5) கோவிந்தராஜன் கனுப்பாரி வேட்டை சித்திராபௌர்ணமி யில் திருவூறலுத்ஸவம் திருமலை நம்பியின் ஐதிஹ்யோத்ஸவமான தண்ணீரமுது உத்ஸவம் இந் நாட்களில் வெகுதூரம் எழுந்தரு ளும்போது ஆண்டாளும் கூடவே எழுந்தருள்வது.

(6) நாச்சியார் திருக்கோலத்தி லென்று பெருமாள் எழுந்தருளும் போது, பெண்ணைத் தனியே விடாமல் புருஷோத்தமனை கண்ணனையும் உடனே எழுந் தருளப்பண்ணுவது.

(7) திருவேங்கடமுடையான் திருத் துழாயைப் பஞ்சமீதீர்த்தத்தின் போது திருச்சானூரில் தாயார் மூலமாகவன்றி நேராக யாருக் கும் விநியோகியாமலிருப்பது.

(8) சாத்துமுறைக் காலங்களில் பெரியஜீயர் திருத்துழாய் கொடுக்க அதைவாங்கி அர்ச்சக கர்கள் சாத்துமுறை முடியும் வரை பெருமாள் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டிருப்பது.

(9) மூலவரிடத்தில் தவிர உத்ஸவர் எங்கு எழுந்தருளித் திருமஞ் சனமோ சாத்துமுறையோ கண்டருளினாலும் கோஷ்டிக்குத் தீர்த்தமில்லாமல் ஸ்ரீசடகோபன் மட்டும் ஸாதிப்பது.

(10) தோட்டத்தில் அனந்தாழ்வானி டம் அஞ்சியோடிய திருவேங்கட முடையான் அப்ரதக்ஷிணமாகக் கோயிலுக்குள்வந்து புகுந்த ஐதிஹ்யத்தைக் காட்டுவதற்காக பாக்ஸவாரி என்னும் தோட்ட வுத்ஸவத்தில் கோவிலிலிருந்து அப்ரதக்ஷிண மாகவே எழுந் தருள்வது.

(11) நம்மாழ்வார்க்கும் பெருமாளுக் கும் நடந்த 'மின்னிடைமடவார்' ப்ரணயகலஹத்தை, உபயநாச்சி யார்க்கும் பெருமாளுக்கும் நடப் தாக உத்ஸவம் செய்விப்பது.

(12) அதியுஷ்ணமான பச்சைக் கருப் பூரப்பொடியை 50 தோலா 100 தோலா என்ற கணக்கில் திருவேங்கடமுடையான் மூல வருக்குத் திருமண் காப்பாக அணிவிப்பது. இங்ஙனே பல உள. விரிவுக்கஞ்சி இதோடு விடைபெறுகிறேன்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

சுபம்.

———

# காஞ்சிபுரம் தேவப்பெருமாள் ஸந்நிதி விஷயம்

ஸ்ரீ உ. வே. திருமணி ஸ்ரீநிவாஸ வரதாசாரியார், நம்மாழ்வார் ஸந்நிதி
ஆதீன பரம்பரை மிராசுதார், தீர்த்த மிராசுதார்.

காஞ்சிபுரம் ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தில் அநாதி காலமாகத் தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர் (தென் கலையார்)கள் அத்யாபக மிராசுக்குப் பாத்யப்பட்டவர்கள். 1711 ஆம் வருஷம் ஆத்தான் திருவேங்கடராமானுஜ ஜீயர் உடையார் பாளையத்திலிருந்து தேவப்பெருமாளை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து' அவர் தர்ம கர்த்ருத்வம் வகித்து, மேற்படி தேவஸ்தானத்தில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன் தொடங்கித் திவ்யப்பிரபந்த ஸேவாகாலம் ஸேவித்தும். தாதாசாரியர் அகங்களிலும் கூட ஸ்ரீசைலேசதயா பாத்ரத் தனியன் துடங்கித்தென்கலையார்களே திவ்யப் பிரபந்தம் சவித்தும் வந்தார்கள். இம்மாதிரி ஸேவித்துக் கொள்ளும்படி அந்தக்காலத்தில் எழுந்தருளியிருந்த லக்ஷ்மீ குமார தாதாசாரியர் என்பவர் தென்கலை ஆத்தான் ஜீயருக்கு ஓர் உடன்படிக்கை எழுதிக்கொடுத்திருக்கிருர்.

சில காலம் கழிந்தவாறே தென்கலையார்கள் இந்தக் கோவிலுக்கு அத்யாபக மிராசுக்கும் ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியன் சொல்வதற்கும் பாத்யதை இல்லை யென்று சில கிளர்ச்சிகள் ஏற்பட்டுத் தென்கலையார்களே இந்தத் தேவஸ்தானத்தில் உள்ள எல்லாச் சந்நிதிகளிலேயும் அத்யர்பக மிராசுக்குப் பாத்யப்பட்டவர்கள் என்றும், சொல்லக்கூடிய உரிமை ஏக போக மென்றும் கோர்ட்டுத் தீர்மானங்கள் அநேகம் ஆகியிருக்கிறது.

பின்னிட்டுச் சில வருஷங்கள் கழித்து, இதே அத்யாபக விஷயமாய் தென்கலையார்கள் இந்தக் கோயிலிலும், இதைச் சேர்ந்த எல்லாச் சந்நிதிகளிலேயும் சொல்லக்கூடிய மிராசு பாத்யதை இல்லை யென்றும், மணவாள மாமுனிகள் தனியன் (ஸ்ரீசைலேச தயாபாத்ரம்)வாழிதிருநாமம், ப்ரபந்தங்கள் சொல்லக்கூடாதென்றும், சிற்சில கிளர்ச்சிகள் அவ்வப்போது ஏற்பட்டும், அவ்வப்போது வியாஜ்யங்கள் ஏற்பட்டும், கோர்ட் தீர்மானங்களிைல் தென்கலையார்களே அத்யாபக மிராசுக்கு ஏக போகபாத்யதை உள்ளவர்கள் என்றும், மணவாள மாமுனிகள் தனியன், ப்ரபந்தம் வாழிதிருநாமம் சொல்லக்கூடியவர்கள் என்றும், நித்யப்படியிலும், விசேஷ உத்ஸவங்களிலும், விசேஷ புறப்பாடு காலங்களிலேயும், எந்தக்காலத்திலும் இந்தத் தேவஸ்தானத்தில் சம்பந்தப்பட்ட எல்லா இடங்களிலும் சொல்லக்கூடிய ஏக போக பாத்யஸ்தர்கள் என்றும் தீர்மானம் ஆகியிருக்கிறது. (vide 1915 Madras Weekly Notes Page 281) 1939 (1. M. L. J. Page 134).

இந்தத் தேவஸ்தானத்தில் தென்கலையார்களுக்கு அத்யாபக மிராசுகள் தவிர மேலும் அனேக தீர்த்த மிராசுகள் தென்கலை என்றும், மல்ஜி மிராசு, அருளப்பாடு ஆசீர்வாதம் தென்கலை என்றும், அனேக தென்கலை திருமணிகள் தென்கலை ஆசாரமென்றும், முக்கியமாக ஆழ்வார் ஆசாரியர்கள் தென்கலை யென்றும் கோர்ட் தீர்மானங்களினல் விளக்கப்பட்டிருக்கிறது (vide 23 M. L. J. Page 134).

காஞ்சிபுரத்தில் உள்ள எல்லாத் திவ்ய தேசங்களிலேயும் தென்கலையார்களே அத்

யாபக மிராசுக்கு ஏகபோகமாக பாத்யதை உடையவர்கள். தூப்புல் வேதாந்த தேசிகன் ஸந்நிதியிலும் தென்கலையார்களே அத்யாபக மிராசுக்குப் பாத்யப்பட்டவர்கள் என்றும், தமிழ் ப்ரபந்தங்கள் சொல்லக்கூடிய உரிமையுடையவர்கள் என்றும் ஹை கோர்ட்டாராலும், சீமை கோர்ட்டாராலும் இந்த மிராசு ஊர்ஜிதப் படுத்தப்பட்டிருக்கிறது. (Vide 1915 M Weekly Notes) நாளைக்கும் தூப்புல் வேதாந்த தேசிகன் புறப்பாடுகாலங்களிலும் வீதியில் தென்கலையார்களே ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியன் தொடங்கித் திவ்யப்ரபந்தம் சேவித்து வருகிறார்கள்.

தென்கலை ஆசாரம்தான் ப்ராசீனம் என்றும், தென்கலையார்கள் மிராசுக்குப் பாத்யப்பட்டவர்கள் என்றும், அநாதியாகத் தென்கலை வழிபாடு நடந்து வருகிறது என்றும், எல்லா இடங்களிலும் தென்கலை வழிபாடு என்றும் விசதமாக விளங்குகிறது. (Vide 1947 (I M L J page 159-P.C. திருப்பதி கேஸ்).

ஸ்ரீ தேவப்பெருமாள் ஸந்நிதியில் பிரதிதினமும் சாயங்காலம் எல்லாதிவ்ய தேசங்கள் போல் நித்யானுசந்தானம் ஸேவை நடந்துவருகிறது.

தேவப்பெருமாள் ஸந்நிதியில் மட்டும், நித்யப்படி காலை திருவாராதன காலத்தில் நாலாயிரக் க்ரமம் ஸேவித்து வருவது வெகு காலமாக வழக்கத்தில் உள்ளது. ஒவ்வொரு நாளும் தனியன் தொடங்கி நாலாயிர திவ்யப் பிரபந்தங்களின் தொடர்ச்சியாக 50 பாசுரம் ஸேவித்து வாழிதிருநாமத்துடன் முடிகிறது. இம்மாதிரியே தொடர்ந்து ஸேவித்து வருவதில் ஒருதரம் பூராவும் நாலாயிரப் ப்ரபந்தம் முடிவு ஆனதும் மறுபடியும் இம்மாதிரியே ஸேவித்து வருவது வழக்கமாகும். இந்தத் தொடர்ச்சி பெருமாள் புறப்பாடு காலங்களிலும் சேர்ந்தது.

பஞ்சபர்வ உத்ஸவாதிகள் பெருமாள் புறப்பாடு, தாயாருடன் சேர்ந்த புறப்பாடுகளிலும் பஞ்சபர்வஉத்ஸவ நீங்கலாக நடக்கும் பெருமாள் தாயார் சேர்ந்து நடக்கும் விசேஷ உத்ஸவ புறப்பாடு காலங்களிலும் மேல்கண்ட ரீதியாகவே நாலாயிரத் திவ்யப்ரபந்த ஸேவை தொடர்ச்சியாக நடந்துவரும். இம்மாதிரி ஸேவாகாலம் நடந்துவருவது இந்தஸந்நிதிக்குத் தனிப்பட்ட சிறப்பாகும், தவிர வெள்ளிக்கிழமை தனிப்பட்டு நடக்கும் பெருந்தேவித் தாயார் புறப்பாடு காலங்களில் சிறிய திருமடல் ஸேவிப்பது வழக்கம்.

வைசாகோத்ஸவத்தில் 2 வேளை புறப்பாடு (சப்ரஹம்ஸ, அம்ஸ, சூர்ய, கருட, வாநர, நாக, சந்திர, மோஹினி, ஆளி, சூர்ண, தந்த, ரத, துரக, ஆளும், புண்ய கோடிவிமானம்) காலங்களிலும், கடைசி நாள் வெட்டிவேர் சப்பரம் உத்ஸவ புறப்பாடு உள்பட பூர்த்தியாக ப்ரம்மோத்ஸவத்தில் நாலாயிரதிவ்ய ப்ரபந்தம் நூற்றந்தாதியுடன் பூர்த்தியாகி அப்போதே திருப்பல்லாண்டு தொடக்கமும் ஆகிறது வழக்கம். இதுவும் தவிர பெரும்பாலும் ஆழ்வார் ஆசாரியர்கள் வருஷோத்ஸவங்களில் ஒருதரம் நாலாயிரம் ஸேவைபூர்த்தியாகும். அத்யயன உத்ஸவத்தில் (பகல் பத்து, ராப் பத்து உத்ஸவம்) ஒருதடவை நாலாயிரம் பூர்த்தியாகும். ஏறக்குறைய ஒருவருஷத்தில் 20 தடவைகள் நாலாயிரம் பூர்த்தியாக ஸேவிக்க நேரிடுகிறது.

ஒவ்வொரு ஆழ்வார் ஆசார்யாள் சாற்றுமுறை காலங்களில் பெருமாள் வீதி புறப்பாடு உத்ஸவம் ஆனதும் ஆஸ்தானத்தில் ஸ்வப்பிரபந்தங்கள் ஸேவித்தும் சாற்றுமுறை காலங்களில் நாலாயிர சாத்துமுறையும் ஸேவித்து வருவது

வழக்கமாகும். எல்லா சாற்றுமுறைகளி லும் பெருமாள் எழுந்தருளிச்சாத்துமுறை நடப்பதும் தவிர ஷெ சாத்துமுறைகள் வெள்ளிக்கிழமைகளில் வருமானல் பெரு மாளுடன் தாயாரும் சேர்ந்து புறப்பாடு கண்டருளி ஸேவை சாத்துமுறை நடந்து வருவது தனிப்பட்ட சிறப்பாகும்.

எல்லா ஸந்நிதிகளிலும் தெப்ப உத்ஸ வம், தவன உத்ஸவம் பெருமாளுக்கு மட் டும் நடப்பதும் நவராத்ரி உத்ஸவம் தாயாருக்கு மட்டும் நடப்பதும் வழக்க மாகும். ஆனல் தேவப்பெருமாள் ஸந்நிதியில் இவ்வுத்ஸவங்களில் பெரு மாள் தாயார் இருவரும் சேர்ந்தே ப்ராசீனமாக நடந்துவருவது தனிச்சிறப்பு. ஆழ்வார் ஆசார்யாள் சாற்றுமுறை காலங்களில் பெருமாள் தனிப்பட்டு எழுந்தருளினுலும், வெள்ளிக் கிழமைகளில் சாத்துமுறை வருமானல் தாயாரும் சேர்ந்து எழுந்தருளினுலும் அந் தந்த ஆழ்வாராசார்யர்கள் (உபதேச ரத்தினமாலையில் வரும்) நாள்பாட்டு ஸேவித்து வருவதும் வழக்கம். பஞ்சபர்வ உத்ஸவங்களிலும், சில விசேஷ உத்ஸவங் களிலும் ஸந்நிதி வீதி திருவடி கோயிலில் ஸேவை ஆரம்பிப்பது வழக்கம். மற்றும் மாடவீதி புறப்பாடு, பிரம்ம உத்ஸவம், இன்னும் சில விசேட உத்ஸவங்களில் வாஹன மண்டபத்தின் அருகே ஸேவை ஆரம்பிப்பது வழக்கம்.

'அருளாழிப் புட்கடவீர் அவர் வீதி ஒருநாள் என்று' என்ற பாசுர அனுகுண மாக வையங்கண்ட வைகாசி திருநாளில் கருடோத்ஸவ தினம் ஆழ்வார் ப்ராகாரம் எழுந்தருளும்போது நம்மாழ்வார் ஸந்நிதி வாசலில் வாஹனத்துடன் பெருமாளை நிறுத்தி 'தொழுதெழு என்மனனே' என் கிற முத்திரையுடன் எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாருக்குப் பெருமாளிடமிருந்து மாலை ஸாதித்து, ஸ்ரீசடகோபம் ஸாதிப் பது தனிப்பட்டு இந்த ஸந்நிதியில் ப்ராசீனமாக நடந்து வருவது விசேஷ மாகும்.

---

# ஸ்ரீ ஆண்டாள் ஸந்நிதி

[அஷ்டகோத்ரம் திருவேங்கடத்தம்மாள்—ஸ்ரீவில்லிபுத்தூர்]

ஸ்ரீவில்லிபுத்தூரின் அருமை பெருமைகளை இங்குச் சிறிது அனுபவிப்போமாக.

ஸ்வாமி ஸ்ரீ மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையில் "மின்னுபுகழ் வில்லிபுத்தூரென்றும்", "சீராரும் வில்லிபுத்தூரென்றும்" இரண்டு விசேஷணம் இட்டுப் பாடியுள்ளார்.

புகழாவது எவ்விடத்திலும் எக்காலத்திலும் எல்லாராலும் போற்றப்படுகையாகும். மின்னுபுகழாவது - அப்படி போற்றப்படும் ஸ்தலங்களுக்குள் முதன்மையாய் ப்ரகாசிக்கையாகும்.

அதாவது திவ்யதேசம் என்று போற்றப்படும் 108னுள் முதலில் வராஹ க்ஷேத்ரமாய், பின் ரிஷிகள் தேவர்கள் வேண்டுகோளுக்கு, இரங்கி, காலநேமி என்ற அஸுரனை ஸம்ஹரித்து, வடபெருங்கோயிலுடையான் என்று அவர்கள் அர்ச்சிக்கத் தோன்றியும், பின்பு பெரியாழ்வாரவதரித்தும், பின்பு ஸ்ரீ ஆண்டாளவதரித்தும், முப்புரியூட்டின திவ்யதேசமாகையாலே மின்னுபுகழையுடையது ஸ்ரீவில்லிபுத்தூர்.

ஸ்ரீ ஆண்டாள் தானே திருப்பாவையில் "அணிபுதுவை" என்ற இடத்தில் "மணியும் முத்தும் பொன்னும் இட்டுச் செய்த ஆபரணம்போலே இவ்வூர்" என்று அருளிச்செய்ததாக, பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்தார்.

மாலே மணிவண்ணனனவர் ஸ்ரீவட பெருங் கோயிலுடையான், முத்துப் போன்றவர் மின்னுநூல் விட்டுசித்தன், பொன்போன்றவள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி.

குறிப்பு:-பொன் இல்லாவிட்டால் மணியும் முத்தும் ப்ரகாசியாது என அறிக.

மற்றைய திவ்யதேசங்களுக்குப் பெருமாள் நாச்சியார் ஆழ்வார் மூவரும் தோன்றினவிடம் என்ற பேர் இல்லை.

இரண்டாவது மின்னுபுகழ் - திவ்ய ப்ரபந்தஸேவை ஆரம்பத்தில் திருப்பல்லாண்டு திருப்பாவை. முடிவிலும் சிற்றஞ்சிறுகாலே பல்லாண்டு பல்லாண்டு என்று பூர்த்தி செய்வதும் அஸாதாரணமான புகழாகும். எங்கும் எக்காலத்திலும் எல்லாராலும் இப்படியே அநுஸந்திக்கப் படுகிறது.

இன்னும் ஆழ்வார்கள் எல்லாரையும் விட பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெரியாழ்வாரென்னும் பெயர் பெற்றார். அதைப்போல் ஸ்ரீ ஆண்டாளும் "பாரில் மதி யாரும் ஆண்டாள்", என்று ஸ்ரீமதுரகவி ஆழ்வாருக்கு முன்னே போற்றப்பட்டாள்.

எதனால் எனின், திரிதந்தாகிலும் என்று ஆதிநாதரைப் பார்க்கக் கூசி கண்ணைச் செம்பளித்ததாகவும், அவர் கண்ணுக்குள்ளே வந்து ப்ரகாசித்ததாகவும், திரும்பிவந்து கண்டதாகவும் அருளிச் செய்கையாலும், ஸ்ரீ ஆண்டாள், "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டும்" என்று ஆசார்யர்உகந்தவிஷயம் என்று அபிமுகமாய் இருக்கையாலும் என அறிக.

"ஆசார்ய பர்யந்தாம்" என்றது இவளிடம் பூர்ணமாயிருக்கையாலும், கோவலர்தம் பொற்கொடி, நற்செல்வன் தங்காய் என்று சம்பந்த சம்பந்திகளை விரும்புகையாலும், "பாரில் மதியாரும் ஆண்டாள்" எனப் போற்றப்பெற்ருள்.

ஸ்ரீ ஆண்டாளுக்கு, ஸ்ரீ "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனாள் வாழியே" என்ற ஏற்றமும் உண்டு.

ஸ்வாமி எம்பெருமானருக்காக மூலஸ்தானத்திலிருந்து வெளிவந்து எதிர்கொண்டது இன்று எல்லாரும் காணும்படி கர்ப்பக்ருஹ முன் மண்டபத்தில் எழுந்தருளியிருக்கிருள். ஏதோ முன் ஒருசமயம் நடந்தது என்று போகாதபடி மார்கழி நீராடி வந்து, ப்ரதிதினமும், "அருளப்பாடு கோயிலண்ணன்" என்று மன மகிழ்ந்து அழைத்து, தான் அங்குப் பெருமாளிடம் ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாளரையர் மூலம் ஸேவித்தநாள் பாட்டுக்களைத் திரும்பவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாரும் சேர்ந்து ஸேவிக்கும்படி நியமிக்கிருள்,

இதனுல், ஆண்டாள் திருவுள்ளம், தனக்குப் பின்தோன்றியவர்க்கும் பின் பிறந்தவளாயிருக்கை என்றும், இவள் அத்யவஸாயத்தைக் கருதி, "பாரில் மதியாரும் ஆண்டாள்" என்று ஸ்ரீமதுரகவிகளுக்கு முன்னே அத்யாதரத்துடன் ஸ்ரீ மணவாளமாமுனிகளால் போற்றப்பட்டாள் என்றும் தெளிக.

க்ஷேத்ராதிபதியான வராஹப் பெருமாளாலும், கோபிகா பாவனையில் கண்ணுக எழுந்தருளிய வடபெருங்கோயிலுடையானுலும் "ஒரு மகள் தன்னையுடைய" பெரியாழ்வாராலும் ஸ்ரீ ஆண்டாளுக்கு ஸ்ரீதனமாகக் கொடுக்கப்பட்ட ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர்.

இன்றைக்கும், பெரியவர்கள் நாச்சியார் மாளிகை, என்றே வழங்குவர்.

ஆதிநாதர் ஆழ்வார் தேவஸ்தானம் என்பதுபோலன்றிக்கே நாச்சியார் தேவஸ்தானம் என்றே எழுதுவர்கள். ஸ்ரீவடபெருங்கோயில், பெரியாழ்வார் ஸன்னிதி எல்லாம் நாச்சியார் தேவஸ்தான வகையரு என்று பேர்பெற்றதாகும். பேர் மட்டுமன்று நடைமுறையும் அப்படியே தான்.

திருமுக்குளத்திலிருந்து திருமஞ்சனம் கொண்டுவந்து ஸ்ரீஆண்டாளுக்கு முதலில் விச்வரூபஸேவை. அதற்குப் பின் இவள் சூடிக்களைந்த மாலையை மேளதாளத்துடன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய் ஸ்ரீ வடபெருங்கோயிலுடையானுக்குச்சாத்தி, அவர் விச்வரூபஸேவைக்குப் பின் பெரியாழ்வாருக்கு அதே மாலை வடபெருங் கோயிலுடையான் ப்ரஸாதமாய்ச் சாத்தப்படும். இப்படியே இன்றும் நடந்து வருகிறது. ஸாயரக்ஷை திருவாராதனமும் அப்படியே வரிசை. மாலை சூடிக்கொடுத்தாள் என்பது அஸாதாரணம்.

மற்றைய நாச்சிமார்களைப்போலே பிறந்தது ஒரு இடம் புகுந்தது ஒரு இடம் என்பதில்லாமல் இரண்டும் ஒரிடத்திலேயான ஏற்றமும் இவளுக்கே.

தன்னை அடைந்தவர்களை ஸமஆசனத்தில் வைத்து, தங்களுடனே சேர, திருவாராதனம், அமுதுசெய்தல் முதலியன கொள்ளும்படி கருடாழ்வாரைப் பரிபாலிக்கிருர். இதனுல் தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே ஒக்க அருள்செய்யும் தன்மையை எல்லார்க்கும் தெரிவிக்கிருர்.

எழுந்தருளியிருக்கும்படி, ப்ரணவம் இருந்தால் போலவும், அவதாரத்தால்

ப்ரணவம் பிறந்தாற்போலவும் நினைக்கத் தோன்றும்.

ஸ்ரீபராசரபட்டர் ஸ்ரீ ரங்கநாச்சியாரே! எங்களை உம் பிறந்தகமான மிதிலாதேச ஜநங்களாக, நினைக்கவேணும் என்றார் அப்படியானால்; ஸ்ரீவில்லிபுத்தூர் வாஸிகளைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ.

வில்லிபுத்தூர் என்று ஒருகால் சொன்னார் கழற் கமலம் சூடினோம் என்றார்கள் மஹான்கள், இவ்வளவும் மின்னுபுகழ்.

சீராரும் வில்லிபுத்தூர் என்பதை அனுபவிப்போம். நகருக்குச் சீர்மை யாவது செழிப்பு.

கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற நதிகள் மூன்றும் ஸ்ரீ வடபெருங்கோயிலுடையானால் அழைக்கப்பட்டு, அங்கு வந்து உபத்ரவம் செய்த காலநேமியை ஸம்ஹரித்த திருவாழியாழ்வானுக்குத் திருமஞ்சனம் செய்து பகவான் நியமனத்தினால் தடாகரூபத்தோடு தங்கியிருந்த நீர்மையாலும் மண்டுகபர்வதத்திலிருந்து பெருகிவருகிற நதிகளாலும் வளர்க்கப்பட்ட நாட்கமழ் பூம்பொழில் என்ற சோலைகளையும், மின்னனைய நுண் இடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டுகளின் இன் இசையையும், செவிகளடைய மயிர்க் கூச்சிடும்படி இனிய பேச்சுக்களையுடைய பாடும் குயில்கள், நடமாடித் தோகை விரிக்கின்ற மாமயில்கள், அன்னங்கள், கோலக்கிளிகள் இவைகளுடைய செவிக்கினிய பேச்சுக்களையும், புரவிமுகம்செய்து செந்நெல் ஓங்கிவிளைகழனிகளையும், விண்தோய் மதிள் கோபுரங்களையும், வெங்கவி நலியாமல் சேமநன்கமரும் பொன்திகழ் மாடங்களையும், மச்சணி மாடத்தோடு பெண்விளக்கும் திருப்பூர நந்தவனத்தையும் கொண்டு செற்றமிலாதவர் வேதவாய்த் தொழிலோடு நித்யகைங்கர்யம் செய்து வாழ்ந்திருக்கும் சீராரும் வில்லிபுத்தூரைக்கண்டு ஸ்ரீரெங்கமன்னார் காவேரியையும், வண்டினமுரலும் சோலையையும் மறந்து இங்கேயே தங்கிவிட்டார், இதுவே ஊருக்குச் சீர்மை.

இன்றைக்கும் திருமஞ்சன காலத்தில் அருளப்பாடு வேதவாய்த் தொழிலார் என்றே அழைக்கப்படுகிறார்கள்.

### இவ்வூர் திருநாள் வைபவம்

**சித்திரை:** 10 நாள் எம்பெருமானாருக்குத் தீர்த்தவாரியுடன் மங்களாசாசனமும் வீதிப்புறப்பாடும், ஸ்ரீ ஆண்டாள் மன்னாருக்கு நீர்வாவி கோடை உத்ஸவம் 10 நாள்.

**வைகாசி:** நம்மாழ்வாருக்கு 10 திருநாள்: நாலாயிர திவ்ய ப்ரபந்த ஸேவையுடன் தீர்த்தவாரி ஸ்ரீ ஆண்டாள் மன்னாருக்கு வஸந்தோத்ஸவம் 10 நாள்.

**ஆனி:** பெரியாழ்வார் த்வஜாரோஹண உற்ஸவம்.

**ஆடி:** திருவாடிப்பூர உத்ஸவம், த்வஜாரோஹணத்துடன்.

**ஆவணி:** கண்ணனுக்கு த்வஜாரோஹணம்: திருப்பவித்ரம் ஸ்ரீ வடபெருங்கோயிலுடையானுக்கு.

**புரட்டாசி:** ஸ்ரீ வடபெருங்கோயிலுடையானுக்கு த்வஜாரோஹணம் (ஸ்ரீ ஆண்டாளுக்கு நவராத்ரி உற்ஸவம் நடக்கும்).

**ஐப்பசி:** ஊஞ்சல் ஸ்ரீ ஆண்டாளுக்கு 7 நாள்,-பெருமாளுக்கு 1 நாள்.

**கார்த்திகை:** திருமங்கை மன்னனுக்கு 10 நாள் நாலாயிர ஸேவை.

**மார்கழி:** நீராட்ட உத்ஸவம் 8 நாள். 20 நாள் திருவத்யயன உத்ஸவம்.

**தை:** வெள்ளிக்கிழமைக்குச் சிறப்புண்டு.

**மாசி:** தெப்போத்ஸவம் 3 நாள் திருமுக்குளத்தில்.

**பங்குனி:** திருக்கல்யாண த்வஜாரோஹண உத்ஸவம்.

## மாதப் புறப்பாடுகள்

ஏகாதசிப் புறப்பாடு ஸ்ரீ ஆண்டாளுக்கும், மாதப்பிறப்பு, அமாவாசை வடபெருங்கோயிலுடையானுக்கும் புறப்பாடு, நடக்கும் ஏகாதசிக்குத் திருவாசிரியம்; ரேவதிக்குச் சிறியதிருமடல்; அமாவாஸை, திருவோணம், மாதப்பிறப்புக்குத் திருவெழுகூற்றிருக்கை; ஸ்வாதிக்குத் திருமடல்.

அனத்யயனத்தில் எல்லாப் புறப்பாட்டிற்கும் உபதேசரத்தினமாலை ஸேவிப்பது வழக்கமாகும்.

எல்லாவற்றிலும் மார்கழியில் பிரியாவிடை உத்ஸவம் தனிச்சிறப்பு வாய்ந்தது

மார்கழி 22ந் தேதி இரவு பெரிய பெருமாளிடம் விடைகேட்க எழுந்தருளுமழகு அத்யாச்சர்யமானது.

அங்குச் சென்று திருமஞ்சனம் கண்டருளி, கைத்தலத்தில் சத்ரசாமராதிகளுடன் மூலஸ்தானத்துக்கு எழுந்தருளும்போது விபவம்போலவே தோற்றமளிப்பர்.

ஸ்ரீ அரையர் ஸ்வாமிக்கு அருளப்பாடு ஸாதித்து திருப்பாவை 30 பாசுரங்களும் தேவகானத்தில் அமுதமொழுகப்பாடி முதல் பாட்டுக்கு வ்யாக்யானமும் ஸாதிக்கும்படி நியமித்தலும் அவர் அப்படியே ஸாதித்தலும் அத்யத்புதமானது.

எத்தனையோ வித்வான்கள் அர்த்த புஷ்டியுடன் வ்யாக்யானம் செய்தாலும் ஸ்ரீ ஆண்டாள் பெருமாள் முன்னிலையில் அங்கு நடக்கும் திருப்பாவைக்கு ஈடாகமாட்டாது.

எங்கும் ஸ்ரீ ஆண்டாள் சன்னிதி உண்டானாலும் அவதாரஸ்தலத்தில் ஸ்ரீ பெரியாழ்வாரால் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீ ஆண்டாள் திருமேனிக்கு உண்டான ஏற்றம் எல்லாராலும் அறியப்பட்ட விஷயம்.

மறுநாள் விடியலில் ஸ்ரீ ஆண்டாள் மாடத்தெரு வழியாய்ப் புறப்பட்டு பஞ்சலக்ஷம் பெண்களை எழுப்பிக்கொண்டு ஸ்ரீவடபெருங்கோயிலுடையான் கோபுர வாசலில் நின்று 'மாலே மணி வண்ணா', என்று ஸேவித்து நிற்கும்போது மரங்களும் இரங்கும்.

அங்கு அவரால் அளிக்கப்படும் சங்கு பறை விளக்கு கொடி விதானம் பல்லாண்டிசைப்பாரான வேதவாய்த் தொழிலார் இவர்களுடனும் சுற்றத்துத் தோழிமாரான பெண்களுடைய கூட்டத்துடனும் திருமுக்குளம் சென்று நீராடி வருமழகு வாசாமகோசரம்.

6 திருநாள் தண்டியல் ஸேவையன்று ஸ்ரீ ஆண்டாள் வில்லிபுத்தூருறைவான் தன் பக்கத்தில் எழுந்தருளி—'ஏற்றகலம்' 'அங்கண் மாஞாலம்', 'மாரிமலை' என்ற பாசுரங்கள் நாள்பாட்டாக ஸ்ரீ அரையர் ஸேவிக்கும்பொழுது 'வந்து தலைப்பெய்தோம்' 'இங்ஙனே போந்தருளி' 'காரியம் ஆராய்ந்தருள்' என்னும்போது உள்ளம் உருகும்.

ஸ்ரீ மணவாளமாமுனிகள் ஸேவிக்க வந்தபொழுது நீராட்ட உத்ஸவம் முடிந்துவிட்டமையாலே அன்னாருக்காக தை மாதப் பிறப்பன்று நீராடினதாக இன்றும் ஸ்ரீ மணவாளமாமுனிகள் தம் ஸன்னிதி வாசலில் வந்து நிற்கும் ஸ்ரீ ஆண்டாளை, கைத்தலத்தில் எழுந்தருளி வலம் வந்து ஸேவித்து எழுந்தருளுவர். அப்போது ஸ்வாமிகள் "எமக்காகவன்றோ இங்காண்டாளவதரித்தாள்" என்று பலகாலும் ஸேவிப்பர்கள். அப்பொழுது உடலுமுருகும். என் சொல்வேன் உலகத்தீரே!

எல்லாமே நேரில் கண்டுகளிக்கத் தக்கது.

திருக்கல்யாண உத்ஸவமும் அழகானது. ஸ்ரீமன்னர் பரதேசம் புறப்படுதல், ஸ்ரீபெரியாழ்வார் பூர்ணகும்பத்துடன் வரவேற்றுத் தேங்காய் ஸமர்ப்பித்தல். ஸ்ரீதனப்பொருள்களோடு ஸ்ரீ ஆண்டாள் புறப்பாடு, மாலை மாற்றுதல், காப்பணிதல், மதுவர்க்கம் சமர்ப்பித்தல், அக்நிவளர்த்து. ப்ரவரம் சொல்லி, ஸ்ரீ பெரியாழ்வார் கந்நிகாதானம் செய்தல், திருமங்கல்யம் அணிவித்தல், அம்மி மிதித்தல், அங்கிவலம்செய்து பொரியிடல் என்று ஸ்ரீ ஆண்டாள் வாரணமாயிரம் பாசுரத்தில் அருளிச்செய்ததுதப்பாமல் நடக்கும் பரிசு காணத்தகுந்தது.

ஸ்ரீபெரியாழ்வார் தினமும் 10 மணியளவில் திருமஞ்சனம் கண்டருளி, திருமண் காப்பணிந்து, உடுத்துக்களைந்தன உடுத்து, சூடிக் களைந்தன சூடி, திருப்பல்லாண்டு திருப்பாவை ஸ்ரீஅரையர் தொடங்கக்கேட்டருளி, கலத்தது உண்டு, தீர்த்த கோஷ்டியானவுடன் கைத்தலத்தில் வாசலில் வந்து திருப்பல்லாண்டு பாடுகிருர்.

நித்ய திருமஞ்சனம் நம்மாழ்வாருக்கு உண்டேயாகிலும் திருப்பல்லாண்டு பாடுவது இங்கு அஸாதாரணம். ஆகையால் தான் "இவர்க்கு இது நித்யம்" என்ருர் ஸ்ரீபிள்ளைலோகாசார்யர்.

தினப்படியும் உத்ஸவகாலங்களிலும் ஸ்ரீஅரையர் ஸ்வாமிதான் திவ்யப்ரபந்தம் தொடங்கவேண்டும்; முடிவு பாசுரமும் ஸேவிக்கவேணும். மற்றையோர் நடுவுள்ள பாசுரங்கள்தான் ஸேவிக்கலாம், முதலும் முடிவும் தாளத்துடன் ஸ்ரீஅரையர்தான் ஸேவிக்கவேணும். இயற்பாவைத்தவிர 3000 பாசுரங்களுக்கும் இதுவே முறை.

தீர்த்தவரிசை (1) அரையர், (2) பெரியநம்பி, (3) வேதப்பிரான்பட்டர், (4) அப்பன், (5) தாத்துவையங்கார், (6) ஜீயார், (மற்றும் தீர்த்தக்காரர்கள்) அப்புறம் எல்லாரும் வாங்கிக் கொள்ளலாம்.

ஸ்ரீவைகானஸ ஆகம முறைப்படி பஞ்சகால பூஜையுடன் தென்கலை சிஷ்டாசாரப்படி என்றும் நன்ருக நடந்து கொண்டிருப்பது பற்றியேதான் ஸ்வாமி ஸ்ரீமணவாளமாமுனிகள் சீராரும் வில்லிபுத்தூர் என்று மங்களாசாசனம் செய்தார்.

நித்ய ஸ்ரீர் நித்யமங்களம்.

---

# திருக்கண்ணபுரம்

(ஸ்ரீ உ. வே. திருக்கண்ணபுரம் T. S. ராஜகோபால ஐயங்கார், B.A., L.T,

"யாவரும் வந்தடி வணங்க அரங்கநகர்த்
துயின்றவனே!
காவிரிநல் நதிபாயுங் கணபுரத்தென்
கருமணியே!"

என்பதற்கிணங்க ஸ்ரீரங்கம் மேலைவீடு என்றும், திருக்கண்ணபுரம் கீழைவீடு என்றும் பூர்வர்கள் வழங்கிவந்துள்ளனர். ஸ்ரீ மணவாள மாமுனிகள் இந்தத் திவ்ய தேசத்தில் ஒரு வருஷ காலம் எழுந்தருளியிருந்தார் என்று கருதப்படுகிறது; ஏற்கனவே நிலவிவந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா அவர் காலத்தில் மேலும் வளர்ந்துள்ளது. நைமிசாரண்ய வாஸிகளான மஹரிஷிகள் திருக்கண்ணபுரம் அஷ்டாக்ஷர ஸித்தி க்ஷேத்ரம் என்று பெருகும் ஆதரத்தில் இங்குத் தவஞ்செய்து வந்தனர். ஆகையினுல் இருவகையிலும் மேன்மை கொண்டதாயிற்று இந்த ஸ்தலம். ஸ்ரீரங்கத்தில் நடக்கும் அநுஷ்டானமே பெரும்பாலும் இந்தத் திவ்ய தேசத்திலும் இன்றும் நடந்துவருகின்றது.

இந்த ஸந்நிதியில் தீர்த்த மரியாதைக் குரியவர்கள் வரிசைப்படி (1) திருமாலையாண்டார், (2) எச்சான் (வாரிசு இல்லை), (3) கூர குலோத்தம தாஸர், (4) ஜீயர்கள், (5) ஸ்ரீ வைஷ்ணவாள் - சௌந்தரராஜ பட்டர் (சமதீர்த்தம்), (6) நலந்திகழ் நாராயண தாஸர்-இவரது மரபினர். இந்த ஸ்தலத்தில் வாழும் தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர்கள் அத்யாபக கைங்கர்யத்தில் அந்வயிக்கும் அதிகாரம் வாய்ந்தவர்கள்.

**" நீலாத்ரிமிவ திஷ்டந்தம் "**

மூலவர் நீலமேகப் பெருமாள்—"கருவரைபோல் நின்றானை" இவை அநுஸந்தேயம். உத்ஸவமூர்த்தி ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள்; பக்கத்தில் ஸ்ரீ தேவி, பூதேவி இவர்களுடன் பத்மினிப் பிராட்டியும் ஆண்டாளும் எழுந்தருளியிருக்கின்றனர். த்வஜாரோகணத்தன்று இரவு, சூர்ணோத்ஸவம், ரதோத்ஸவம், திருப்பள்ளியோடம் இந்நாட்களில் நான்கு நாச்சிமாருடன் பெருமாளுக்குப் புறப்பாடு. பெரும்பாலும் பெருமாளுக்குத் தனியாகவே புறப்பாடு. காலைப் புறப்பாடுகளில் திருமேனியில் வெய்யில்படாத வண்ணம் திருப்பல்லக்கில் திரைமறைப்பு அமைந்துள்ளது.

**நித்யோத்ஸவங்கள்:**

தினம் காலையில் விச்வரூபம், ஸுப்ரபாதம், காலை ஸந்நிதியில் திருப்பாவை ஸேவை, உச்சிக்காலம்; மாலையில் திருமால் வடை, இரண்டாம் காலம். அர்த்த ஜாமம். சாயங்காலம் நித்யாநுஸந்தான ஸேவாக்ரமம்: (1) திருப்பல்லாண்டு, உன்னையுமொக்கலையில் என்ற பாசுரம், பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு, காட்டில் வேங்கடம் என்ற பாசுரம் மன்னுபுகழ், அமலனுதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, பெரிய திருமொழியில் நாளொன்றுக்கு ஒரு பதிகம் (வரிசைக் கிரமமாக), உலகமுண்ட, கங்குலும் பகலும், ஆழியெழ, மாலைநண்ணி தொடர்ந்தே சாற்றுமறை - "இன்னுமொரு நூற்றாண்டிரும் வரையில்)- ஸேவை நான்கு பாதங்களும். இரவில் அர்த்த ஜாமத்தில் "மன்னுபுகழ்"

**பஞ்சபர்வப் புறப்பாடுகள்:**

ஏகாதசி 2 நாள், மாஸப்பிறப்பு,

அமாவாஸை, ஹஸ்தம் இந்த நாட்களில் ஸ்ரீ சௌரிப் பெருமாளுக்கு ப்ராகாரத்தில் புறப்பாடு. ஆழ்வார்கள் ஸந்நிதிக்கு எதிரில் பெரிய திருமொழிஸேவை தொடக்கம். நித்யாநுஸந்தானத்தில் ஸேவிப்பதைத் தொடர்ந்து ஒவ்வொருநாள் புறப்பாட்டிலும் ஒரு திருமொழி (திருப்பதிகம்), ஜீயர் மண்டபத்தில் பத்தி உலா இந்த ஸேவையுடன் நடக்கும். ஸேவை முடிந்ததும் பத்தி உலா தொடர்ந்து நடக்கும். பத்தி உலா மூன்றுவது சுற்றில் முனையதரையருக்கு ஸ்ரீ சடகோபம் ஸாதிப்பது வழக்கம்.

ஸ்ரீகண்ணபுரத் தாயாருக்கு வெள்ளிக்கிழமை தோறும் புறப்பாடு. ஆழ்வார்கள் ஸந்நிதியில் நாச்சியார் திருமொழி தொடங்கி, ஒவ்வொரு புறப்பாட்டிலும் வரிசையாக ஒரு திருமொழி (திருப்பதிகம்) ஸேவை நடக்கும்.

அமாவாசையன்று நடுப்பகலில் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் திருக் கைத்தலத்தில் ஸ்ரீ ராமன் ஸந்நிதி வரையில் எழுந்தருளி, ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு ஸ்ரீ சடகோபன் மாலை மர்யாதை ப்ரஸாதித்து ஆஸ்தானத்திற்கு எழுந்தருள்வர்.

**விசேஷ உத்ஸவங்கள்:**

(1) மாசி ப்ரஹ்மோத்ஸவம் (மக உத்ஸவம் என்று வ்யவஹாரம்)-த்வஜாரோகணத்துடன், ஒள்பதாம் உத்ஸவம் தீர்த்தவாரி - பௌர்ணமியில் திருமலைராஜன் பட்டினத்தில் ஸமுத்திரத்தில்.

**திருவீதிகளில் ஸேவை :**

முதல் ஆறு நாட்களில் இரண்டு வேளைகளிலும் இயற்பா (பெரிய திருவந்தாதி முடிய). ஏழாவது உத்ஸவம் காலையில் திருத்தேர்; திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஸேவை ஆனபிறகு பெரிய திருமொழி தொடக்கம். இரவு திருச்சந்த விருத்தம், பின்பு தொடர்ந்து பெரிய திருமொழி. எட்டாம் உத்ஸவம் இரவோடு திருமொழி ஸேவை முடியும்.

பெருமாள் ஸமுத்ரத்திற்கு எழுந்தருளும்போது வடக்கு வீதியிலுள்ள சிலம்பொன்னுழி என்ற புஷ்கரிணிக் கரையில், கோஷ்டியினர் சிலையிலங்கு பொன்னுழி என்ற திருப்பதிகம் ஸேவிக்க, பெருமாள் பல்லக்கிலிருந்தவாறே மூன்று முறை குதூகலம் தோன்றச் சுற்றிப் பின்பு திருமலைராஜன் பட்டினம் நோக்கி எழுந்தருள்வர்-ஸமுத்ரக்கரையில் நிலையிடமெங்குமின்றி என்ற திருமொழி முன்பு நெடுங்காலமாக ஸேவித்து வந்துள்ளனர்.

ஸப்தாவரண உத்ஸவத்தில் திருமஞ்சனத்திற்குப் பிறகு திருவாராதனத்தில் கோயில் திருவாய் மொழி, இராமாநுச நூற்றந்தாதி ஸேவை; இரண்டாங் காலத்தில் சாற்றுமறை. திருவீதியில் இராமாநுச நூற்றந்தாதி ஸேவை; தேர்முட்டியிலிருந்து மேள வாத்யமில்லாமல், சிறிய மேளத்துடன் (முகவீணையுடன்) பெருமாள் எழுந்தருள்வர்.

இரண்டு வேளைகளில் புறப்பாட்டின் போது ஸேவை உடையவர் ஸந்நிதியில் தொடங்கி, த்வஜஸ்தம்பத்தடியில் சாற்றுமறை—கடைசிப்பாசுரம் நீங்கலாக. இந்தப் பாசுரம் இயற்சாற்றுடன் பெருமாள் உள்ளே எழுந்தருளியதும் ஆழ்வார்கள் ஸந்நிதியில் ஸேவிக்கப்படும்.

விடாயாற்றி முதல் நாள் உடையவர் ஸந்நிதியில் சிறிய திருமடல் தொடங்கி ஸேவிக்கப்படும்.

**(2) வைகாசி பிரஹ்மோத்ஸவம் :**

ஒன்பதாவது திருநாள் நித்ய புஷ்கரிணியில் தீர்த்தவாரி. ஸேவாக்ரமம் முன்போல். ஒன்பதாம் உத்ஸவம் தீர்த்தவாரி ஆனபிறகு பெரிய திருமொழி சாற்றுமறை.

விசேஷப் புறப்பாடுகள்: ஏழாவது உத்ஸவம் சாயந்திரம் சூர்ணோத்ஸவம் ஆனபிறகு, இரவில் தாமரைத் திருவாசிச் சப்பரத்திற் புறப்பாடு. பெருமாள் 74 சதுர்யுகம் கண்டவர் என்று கருதப்படுவதால்,தாமரைத் திருவாசிக்கு ஆதாரமாகத் தர்ப்பையால் ஆன தரணிகள் 74 திரித்துப் பொருத்துவார்கள். விடியற்காலையில் நெடுங்காலமாக நடந்துவரும் வெள்ளை சாத்திப் புறப்பாடு - சிஷ்யர்கள் ஆதரித்துப் போந்தது. ஸேவை-தனியனில்லாமல் சிறிய திருமடல். எட்டாவது உத்ஸவம் சாயங்காலம் பத்மினித் தாயார் திருக்கல்யாணம்: ஆறுவது உத்ஸவம் யானை வாகனத்திற்குப் பிறகு பெருமாள் நாச்சியார் ஸந்நிதிக்கு எழுந்தருளி மாலை மாற்றிய பிறகு பிரகாரத்திற் புறப்பாடு.

(3) **விசேஷ உத்ஸவங்கள்:**

(1) சித்திரை - வருஷப் பிறப்பு - மாட வீதிப் புறப்பாடு-சிறிய திருமடல் ஸேவை. அக்ஷய த்ருதியை-மாடவீதிப் புறப்பாடு.

(2) சித்திரா பௌர்ணமி - மாட வீதியில் புறப்பாடு - மீன் வேட்டை என்ற கஜேந்த்ர மோக்ஷம்: தேரடியில்

(3) ஆடி-சுக்ல ஏகாதசி-ஜ்யேஷ்டாபிஷேகம் - முடிகொண்டானிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் எழுந்தருள்வித்துவருவர் ஸ்ரீ வைஷ்ணவர்.

(4) பதினெட்டாம் பெருக்கு-திருப்பல்லக்கில் முடிகொண்டான் ஆற்றுக்குப் பெருமாள் எழுந்தருள்வர்-ஆற்றில் ஸ்ரீ சடாரி தீர்த்தம்.

(5) திருவாடிப் பூரம்-ஐந்து நாள் உத்ஸவம் - தினம் சாயந்திரம் ஆண்டாள் புறப்பாடு ப்ராகாரத்தில் - திருவாய்மொழி ஆயிரமும் ஸேவை. திருவாடிப் பூரத்தன்று முடிகொண்டான் ஆற்றிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் எழுந்தருள்விப்பது, மத்யானம் ஆண்டாளுக்கு ப்ராகாரப் புறப்பாடு. பெருமாளுடன் சேர்த்தியில் நாச்சியார் திருமொழி ஸேவை. இரவு பெருமாளுடன் ப்ராகாரத்தில் புறப்பாடு சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியில் திருவாய்மொழி சாற்றுமறை.

(6) ஆவணிமாதம்—ஸ்ரீ ஜயந்தி–இரவு பெரியாழ்வார் திருமொழி ஸேவை – மறுநாட் காலையில் கண்ணன் திருப்பல்லக்கில் வீதிப் புறப்பாடு–"எண்ணெய் சுண்ணம்" என்ற பாசுரப்படி வீதியில் எண்ணெய் வழங்குதல்- அன்று சாயந்திரம் உறியடி.

(7) புரட்டாசி—திருப்பவித்ரோத்ஸவம்–5 நாட்கள். இரவு திருவாய்மொழி ஸேவை. ப்ராகாரத்தில் பெருமாள் புறப்பாடு-ஐந்தாவது நாள் பௌர்ணமி - காலையில் பெருமாள் கருடாரூடராய் திருவீதி வலம்வந்து நித்ய புஷ்கரிணியில் தீர்த்தவாரி.

(8) புரட்டாசி—நவராத்ரி. ஸ்ரீகண்ணபுரத்தாயார் ஸந்நிதியில் ஆஸ்தானம்-கொலு.

விஜயதசமி-பெருமாள் குதிரை வாகனத்தில் திருமஞ்சனக் குளத்தங்கரையில் எழுந்தருளி அம்பு போடுதல்.

(9) ஐப்பசி—தீபாவளி உத்ஸவம்.

(10) கார்த்திகை—தீபாரோபண உத்ஸவம்-மடவிளாப் புறப்பாடு.

(11) கைசிக த்வாதசி-கைசிகபுராண படனம்.

(12) மார்கழி—திருப்பாவை ஸேவை.

முதல்நாள்: பெரியஸந்நிதி, நாச்சியார் ஸந்நிதி இவற்றில் திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை ஸேவை, மற்றைநாட்களில் பெருமாள் ஸந்நிதியில்தான் ஸேவை. திருப்பாவை சாற்றுமறை நாளன்று நான்கு நாச்சிமாரோடு அர்த்தமண்டபத்தில் எழுந்தருளியிருந்து திருச்செவியேற்பது. கூடாரை வெல்லுஞ்சீர் பாசுரத்தன்று பெருமாள் நான்கு நாச்சிமாருடன் அர்த்தமண்டபத்தில் ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருத்தல்.

(13) அத்யயன உத்ஸவம்-முதல்நாள் பெரியாழ்வார் பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளித் திருப்பல்லாண்டு ஸேவித்தல்-பின்பு அர்த்தமண்டபத்தில் பெருமாள் எழுந்தருளிப் பெரியாழ்வார் திருமொழி ஸேவை.

இந்த உத்ஸவ நாட்களில் ஸேவை தொடங்கியதும் திருக்கண்ணபுரத்தரையருக்குத் தீர்த்த மரியாதை நடக்கும்.

ஸேவாக்ரமம் :

முதல் திருநாள் : பெரியாழ்வார் திருமொழி 1, 2 பத்து.

இரண்டாம் திருநாள்: மேற்படி 3, 4, 5 பத்து சாற்றுமறை: பெரியாழ்வார் பெருமாளைத் திருவடிதொழுதல்.

மூன்றும் திருநாள் : பெருமாள் நான்கு நாச்சிமாருடன் எழுந்தருளியிருப்பர்-திருப்பாவை, நாச்சியார் திருமொழி.

நான்காம் திருநாள் : பெருமாள் திருமொழி-குலசேகரப் பெருமாள் பெருமாளைத் திருவடிதொழுதல்.

ஐந்தாம் திருநாள் : முதலாயிரம் சாற்றுமறை - மதுரகவியாழ்வார் பெருமாளைத் திருவடிதொழுதல்.

ஆறும் திருநாள் : பெரிய திருமொழி தொடக்கம். ஸேவை 1, 2 பத்துக்கள்.

ஏழாம் திருநாள் : பெரிய திருமொழி 3, 4 பத்துக்கள்.

எட்டாம் திருநாள்: பெரிய திருமொழி 5, 6 பத்துக்கள்.

ஒன்பதாம் திருநாள்: பெரியதிருமொழி 7, 8 பத்துக்கள்.

சிலேயிலங்கு ஸேவித்ததும், ஸேவை நிறுத்தி, திருமங்கையாழ்வாருக்கு நாயகித் திருக்கோலத்தில் தெள்ளியீர் தொடங்கி எட்டாம்பத்து சாத்துமறை.

பத்தாம் திருநாள்: திருமொழி-சாற்றுமறை: திருமங்கையாழ்வார் பெருமாளைத் திருவடி தொழுதல்.

இந்த அத்யயன உத்ஸவம் 21 நாளும் சாற்றுமறையின்போது தீர்த்தவினியோகத்தின்போது கோஷ்டிக்குத் திருத்துழாய் வினியோகம்—தீர்த்தக்காரர் செய்வது.

இராப்பத்து உத்ஸவம் : ஏகாதசியன்று காலேயில் பெருமாள் ப்ராகாரப் புறப்பாடு. ஸ்ரீவைகுண்ட வாசல் இல்லாததால் நாச்சியார் ஸந்நிதியை நோக்கிய குறடு வழியாக எழுந்தருள வேதவிண்ணப்பம் கண்டருள்வர். பின்பு நம்மாழ்வார் எதிராக எழுந்தருளியிருக்க, அலங்கார ச்லோக படனம் கேட்டருள்வர். இந்தக் கைங்கர்யம் நெடுங்காலமாகப் பெரிய திருமாளிகை ஸ்வாமிசெய்து வருவது தினந்தோறும் புறப்பாட்டில் இதுமாதிரி அலங்கார ச்லோக படனம் நடந்துவரும்.

ஏகாதசியன்று காலேயில் நம்மாழ்வார் பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளி வேதம் ஸ்ரீபாஷ்யம் முதலியவற்றுடன் திருவாய்மொழி தொடக்கம் நடைபெறும். பின்பு பெருமாள் புறப்பாடு.

ப்ராகாரப் புறப்பாட்டிற்குப் பிறகு பத்தியுலா மண்டபத்தில் (ஜீயர் மண்டபத்தில்) ஆழ்வார் - ஆசாரியர்கள் மங்களாசாஸனத்திற்கு எழுந்தருள, அவர்களுக்குத் திருப்பரிவட்டம், திருமாலே, ஸ்ரீசடகோபம் ப்ரஸாதிப்பர் பெருமாள்.

இரவுவரையில் ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியில் எழுந்தருளியிருந்து இரவு திருவாய்மொழி முதல் பத்து திருச்செவி சாற்றுவர்.

அடுத்த ஒன்பது நாள்களிலும் சாயந்திரம் ப்ராகாரப் புறப்பாடு, பனிமுட்டாக்கு அணிந்து எழுந்தருள்வார். இரவு அர்த்த மண்டபத்திய் திருவாய்மொழி ஸேவை-தினம் ஒரு பத்து.

பத்தாம் திருநாள்-பெரியசாற்றுமறை. இரவு பெருமாளுடன் ஆழ்வார்-ஆசாரியர் புறப்பாடு. பத்தியுலா மண்டபத்தில் இவர் களுக்கு மாலை மரியாதைகள்.

இரவு நம்மாழ்வார் பெருமாளைத் திருவடி தொழுதல்.

இருபத்தோராவது திருநாள்: இயற்பா சாற்றுமறை.

**நாச்சியார் அத்யயன உத்ஸவம்**

(14) பெருமாள் அத்யயன உத்ஸவத்தைத் தொடர்ந்து நாச்சியாருக்கு அத்யயன உத்ஸவம். தினம் திருவாய்மொழி ஸேவை, அமாவாசையன்று சாற்றுமறை. இதற்கேற்ப இரவு திருவாய்மொழி ஸேவிக்கப்படுகிறது.

ஏகாதசி முதல் நாச்சியாருக்கு ப்ராகாரத்தில் புறப்பாடு.

அமாவாஸையன்று இரவு பெருமாள் நாச்சியார் திருக்கோலத்துடனும், நாச்சியார் பெருமாள் திருக்கோலத்துடனும் ப்ராகாரப் புறப்பாடு. புறப்பாட்டின் போது அலங்கார ச்லோக படனம்.

தாயார் பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளி ஏகாஸனத்தில் திருவாராதனம். ஒன்பதாம் பத்து மாலை நண்ணி ஸேவையில் சிறப்பு, பின்பு திருவாய்மொழி சாற்றுமறை.

தாயார் பெருமாள் ஸந்நிதியில் சேர்த்தியில் மறுநாள் பகல் முழுதும் எழுந்தருளியிருந்து, பின்பு விடைபெற்றுக்கொண்டு தமது ஸந்நிதிக்கு எழுந்தருள்வர். அன்றிரவு நாச்சியார் ஸந்நிதியில் இயற்பா சாற்றுமறை.

மறுநாள் திருப்பல்லாண்டு தொடக்கம்.

(15) மார்கழி வ்யதிபாதம்: அதிகாலையில் கோஷ்டிக்குத் தீர்த்த விநியோகம் நடக்கும்.

(16) தைமாஸம் - ஸங்க்ரமண உத்ஸவம். இது மிகவும் விசேஷமானது. மாதப்பிறப்பு, முதல், அடுத்த நாள் இவற்றில் புண்ய தீர்த்தங்கள் எல்லாம் நித்ய புஷ்கரிணியில் சேர்ந்து, தங்களிடம் மநுஷ்யர்கழிக்கும் பாவச் சுமை நீங்கப்பெறுகின்றன; மற்றைநாள்களில் அம்சமாக நித்ய புஷ்கரிணியில் அமைந்துள்ளன. ஸங்க்ரமணகாலத்தில் சக்கரத்தாழ்வார் தீர்த்தம் ப்ரஸாதிப்பர்; க்ரஹணகாலங்களிலும் இவ்வாறே, இதற்குக் காரணம் நித்ய புஷ்கரிணியின் தீர்த்த மகிமை.

பகலில் நான்கு நாச்சிமாருடன் ஆஸ்தானம்-திருப்பாவை சாற்றுமறை.

(17) கனு உத்ஸவம் – தைமாதம் இரண்டாம்தேதி நாச்சியார் கனு உத்ஸவம் கண்டருள்வர். இரவு பெருமாள் பாரிவேட்டைப் புறப்பாடு - பல்லக்கில்.

(18) ப்ரணய கலகம் (மட்டையடி)– காலையில் பெருமாள் பல்லக்கில் எழுந்தருள்வர். கோபுர வாசலில் கோஷ்டி தொடக்கம்; தனியன்கள் இல்லாமல்: நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, பெரியதிருமடல், திருமொழி எட்டாம் பத்து – மேளவாத்யமில்லாமல் திருவீதிப் புறப்பாடு-திருமங்கையாழ்வார், ஸந்நிதியில் பெருமாள் திருமண்டபம் கண்டருள்வர். அப்போது ஸேவை முடியும். பின்பு மேளவாத்யத்துடன் ஸந்நிதிக்குப் புறப்பாடு - ஸந்நிதியில் ப்ரணயகலக - ச்ரவணம்.

(19) பங்குனி உத்தரம்: பெருமாள் திருக்கைத்தலத்தில் நாச்சியார் ஸந்நிதிக்கு எழுந்தருளி-ஏகாஸநம். ஸேவை நாச்சியார் திருமொழி.

**ஆழ்வார் ஆசாரியர்கள் அவதார உத்ஸவங்கள்**

**மாஸத்திருநக்ஷத்ரங்கள்.**

(1) நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், எம்பெருமானார், மணவாள மாமுனிகள்

# தென்னாசார்ய சம்பிரதாயத்திற்காக அரும்பணிபுரிந்த வழக்கறிஞர்கள்



ஸ்ரீ V. N. வெங்கடவரதாசார்யர்



ஸ்ரீ K. E. ராஜகோபாலாசார்யர்





காஞ்சி ஸ்ரீ உ.வே. P. B. அண்ணங்கராசார்யரும், G. கிருஷ்ணமாசார்யரும்



ஸ்ரீ P. B. அநந்தாசார்யர்



ஸ்ரீ V. வீரராகவாசார்யர்

ஸ்ரீ T. N. C. ஸ்ரீநிவாச வரதாசார்யர்
(மாஜி ஜில்லா நீதிபதி)

இவர்களுக்கு நாலாயிரம் ஸேவை : ஸேவாக்ரமம் - நம்மாழ்வார் உத்ஸவத்தில் - முதலாயிரம், பெரியதிருமொழி - ஐந்து நாட்கள். பின்பு ஆறுந் திருநாள் முதல் திருவாய்மொழி இரண்டு பத்தும் இயற்பாவில் இரண்டு பத்தும் - சாற்றுமறையன்று திருவாய்மொழியோடு ஸ்வப்ரபந்தங்கள் சாற்றுமறை ஆகும். இதே க்ரமத்தில் மற்றை மூவருக்கும். எம்பெருமானுர் ஸந்நிதியில் எம்பெருமானுர் உத்ஸவம் ஸேவை. திருமங்கையாழ்வார் ஸந்நிதியில் அவதார தினத்தில் ஸேவை சாற்றுமறை.

மற்றை ஆழ்வார்கள் அல்லது ஆசாரியர்கள் அவதார உத்ஸவத்தில் ஸ்வப்ரபந்தமும் கோயில் திருவாய்மொழியும்.

அவதார உத்ஸவத்தன்று திருமங்கையாழ்வார், எம்பெருமானுர், மணவாள மாமுனிகள் இவர்களுக்கு மாடவீதியில் அல்லது பெரியவீதியில் புறப்பாடு. காலையில் மங்களாசாஸனத்திற்கு ஆழ்வார் அல்லது ஆசாரியர் பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளி ஸ்ரீசடகோபன், திருமாலை, பரியட்டம் பெறுவர். குலசேகரப்பெருமாள் அவதார உத்ஸவத்தில் முதலில் மங்களாசாஸநம் பெரிய ஸந்நிதியில் நடக்கும், பின்பு சக்ரவர்த்தித் திருமகன் ஸந்நிதியில் மங்களாசாஸநம் நடந்து அங்கேயே எழுந்தருளி ஸேவை சாற்றுமறை நடக்கும்.

கூரத்தாழ்வான் அவதார உத்ஸவம் ஸ்ரீஎம்பெருமானுர் ஸந்நிதியில் நடக்கும்,

**மாஸத் திருநக்ஷத்திரம் ஸேவாக்ரமம்.**

(1) நம்மாழ்வார் – ஆழ்வார்கள் ஸந்நிதியில் - திருவிருத்தம்.

(2) திருமங்கையாழ்வார் - திருக்குறுந்தாண்டகம். திருநெடுந்தாண்டகம்.

(3) ஆண்டாள்–ஆண்டாள் ஸந்நிதியில் திருப்பாவை, நாச்சியார் திருமொழி.

(4) பெரியாழ்வார்-ஆழ்வார்கள் ஸந்நிதியில் - பெரியாழ்வார் திருமொழி-பாதி-பாதியாக.

(5) குலசேகரப் பெருமாள்-பெருமாள் திருமொழி.

(6) எம்பெருமானுர் - எம்பெருமானுர் ஸந்நிதியில் - இராமாநுச நூற்றந்தாதி.

(7) மணவாள மாமுனிகள்-ஆழ்வார்கள் ஸந்நிதியில் - உபதேசரத்தினமாலை

(8) அநத்யயந காலத்தில் இரண்டு வேளையும் உபதேசரத்தினமாலை ஸேவை - சாற்றுமறை.

**தீர்த்தக்காரர்களது கைங்கர்யங்கள்.**

(1) திவ்யப்ரபந்த ஸேவை - நித்ய நைமித்திக உத்ஸவங்களில்

(2) பெருமாள் ஸந்நிதி, நாச்சியார் ஸந்நிதி இவற்றின் இரவு திருவாராதனத்தின்போது வேதவிண்ணப்பம், அர்ச்சனை படனம்.

(3) திருத்துழாய் க்ரகித்து ஸமர்ப்பிப்பது.

(4) திருமஞ்சனத்தின்போது புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம் முதலியன ஸேவிப்பது.

---

# திருக்குறுங்குடி

ஸ்ரீ உ. வே. N. ஸ்ரீனிவாஸ ஐயங்கார், ஸ்ரீகார்யம், ஜீயர்மடம்

வைஷ்ணவ வாமன க்ஷேத்திரமான திருக்குறுங்குடியில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் "ஸ்ரீ நம்பியை"ப் பராங்குசன், பரகாலன், உறையிலிடாதவர், பட்டர்பிரான் ஆகிய நான்கு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். 108 திவ்ய தேசங்களில் முதன்மையும் பெற்றுள்ளது. திருக்குறுங்குடி ஸந்நிதி பூர்ணமான தென்னுசார்ய ஸம்ப்ரதாய ஸந்நிதி.

### ஸ்ரீ நம்மாழ்வார்

"ஸர்வேச்வரனை நோக்கி அநந்தவிரதம் நோற்றுப் பெற்றவர்களைப் போலன்றிக்கே நம்பியை யாச்ரயித்தாயிற்று, இவரைப் பெற்றது. உடைய நங்கையார் நம்பியை யாச்ரயித்து ஆழ்வாரைத் திருவயிறு வாய்த்தார், என்று ப்ரஸித்தமிறே" என்ற ஈட்டின் ஸ்ரீ ஸூக்திப்படி, குறுங்குடி நம்பியே குருகூர் நம்பியான ஸ்ரீ ஸ்வாமி நம்மாழ்வாராக அவதரித்து, பகவத் விஷயமான அருளிச்செயலைத் திருவாய் மலர்ந்து அருளினுன் என்பதுவும் ப்ரஸித்தம்.

### ஸ்ரீ திருமங்கையாழ்வார்

ஸ்ரீ அரங்கனுக்குத் திருமங்கையாழ்வார் அனேக மண்டபங்கள் முதலியன திருப்பணிகள் செய்தபின் தமக்கு வீடு ஸாதித்தருள வேணும் என்று ப்ரார்த்தித்த பொழுது, "நம் தெற்கு வீட்டுக்குப் போம்" என்று அழகிய மணவாளன் சாதித்தபடியால் தெற்கு வீடான தென்குறுங்குடிக்கு வந்து திருப்பணிகள் செய்து ஸ்ரீ நம்பியை ப்ரார்த்தித்தார். ஆழ்வாருக்கு வீடு சாதித்து நம்பி ஆட்கொண்டார். திருமங்கை ஆழ்வார் அர்ச்சைத் திருமேனியோடு கழனிக்கு மத்தியில் நித்ய திருவாராதனத்துடன் எழுந்தருளியிருக்கிருர். திருவாலி திருநகரியில் அர்ச்சைத் திருமேனியில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வார் உத்ஸவர் திருக்குறுங்குடி ஸ்ரீ நம்பியின் நியமனத்தின் பேரில் திருக்குறுங்குடியிலிருந்து எழுந்தருளியவர்.

### கைசிக புராணம்

ஸ்ரீரங்கம் முதலான எல்லா திவ்ய தேசங்களிலும் பரமபத ஏகாதசி உத்ஸவம் போலே கைசிக உத்ஸவமும், ஸ்ரீரங்கம், திருமலை பெருமாள் கோவில், திருவல்லிக்கேணி, ஆழ்வார் திருநகரி முதலான சகல திவ்ய தேசங்களிலும் புராண படனத்துடன் நடக்கிறது. அப்போது திருக்குறுங்குடி விஷயமான அருளிச்செயல்களைக் கோஷ்டியில் சேவித்தும் வருகிருர்கள்,

ஸ்ரீரங்கம், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குறுங்குடி இவற்றில் அரையர் ஸ்வாமியால் "அக்கும் புலியும்", "எங்ஙனேயோ" பாட்டுக்கு வியாக்யானம் அபிநயம் ஸேவித்து வருவது சகலரும் அறிந்ததே,

திருக்குறுங்குடியில் மட்டும் கைசிக புராணத்தில் சொல்லப்பட்டபடி, நம்பாடுவான், பிரம்மரக்ஷஸ் வேஷங்கள் போட்டு நாடகமாகவே ஸ்ரீ நம்பிமுன் நடித்துகாட்டி வரப்படுவது நெடுநாள் வழக்கமாம். வேஷங்கள் போடுமவர்கள் வ்ரதம் இருந்து பக்தியுடன் நடந்துகொள்கிருர்கள். ஸ்ரீ வராக நாயினுரிடம் பூமி பிராட்டி திருநாம ஸங்கீர்த்தனத்தின்

வைபவம் அருளும்படி கேட்க ஸ்ரீ வராஹ நம்பியும் பூமிப் பிராட்டியைச் சந்தோஷத்துடன் மடியில் வைத்துக்கொண்டு திரு நாம ஸங்கீர்த்தன பல வைபவமான கைசிக மஹாத்மியத்தை அருளக் கேட்டுகந்தாள். பின்னர் பூமிப் பிராட்டியார் சேதனர்களை உஜ்ஜீவிக்கத் திருவுள்ளங் கொண்டு லீலா விபூதியில் சமயம் வாய்த்தவுடன், ஸ்ரீவில்லிபுத்தூரில் பட்டர்பிரான் திருமகளான ஸ்ரீ ஆண்டாளாக அவதரித்து வேதத்துக்கு ஓம் என்பது போலத் திருப்பாவை பாடிப் பாடவல்ல நாச்சியார் என்று பாராட்டப் பெற்றாள்.

ஸ்ரீ நம்பெருமாளுக்கு முன் ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் திருவோலக்கத்தில் ஸ்ரீ பட்டர் கைசிக புராணத்தை வியாக்கியானத்துடன் தெளிவாக வாசிக்கப் பெருமாள் திருச்செவி சாத்தி மிகவும் உகந்து, பட்டருக்கு ப்ரும்ஹரத மரியாதை செய்வித்தார் என்று பிரஸித்தம். இப்பவும் புராணம் வாசிக்கிற பட்டருக்கு இவ்வித மரியாதை நடந்து வருகிறது.

### எம்பெருமானார்

எம்பெருமானார் திவ்ய தேச மங்களா ஸாஸனத்துக்கு எழுந்தருளும்போது திருக்குறுங்குடியில் மட்டும் ஸ்ரீ நம்பி எம்பெருமானாரிடம் ஸச்சிஷ்யனாயிருக்கத் திருவுள்ளங்கொண்டு திருவட்டப் பாறையில் அனுஷ்டானமான சமயத்தில் வடுக நம்பி வடிவில் கைங்கர்யங்கள் செய்து ஸ்வாமி திருக்கையாலே திருமண்காப்பு சாத்தும்படி திருவுள்ள முகந்தான். எம்பெருமானாரிடம் ஸ்ரீ நம்பி, "நாம் ராமகிருஷ்ணாதி அவதாரங்கள் செய்தும் கீதை முதலான உபதேசம் செய்தும், திருத்த முடியாத சேதனர்களை நீர் எவ்விதம் திருத்தினீர்?" என்று கேட்க, ஸ்வாமியும், "கேட்குமளவில் கேட்டால் சொல்லுமளவில் சொல்லுவோம்" என்ன, ஸ்வாமிக்கு ஆசனம் ஸமர்ப்பித்தான், ஸ்ரீ நம்பி. ஸ்ரீ ஸ்வாமியும் ஆசனத்தில் தம் ஆசார்யாள் பெரிய நம்பி எழுந்தருளியிருப்பதாகக் கொண்டு ஸ்ரீ நம்பியின் வலது செவியில் திருமந்திரம், வேதாந்தார்த்தம் இவற்றை ஓதியும் ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்ற தாஸ்ய நாமமும் ஸாதித்தருளினார். நம்பியும், "தன்யோஸ்மி" என்று பூரித்து உகந்து, "நாம் நம் பிராமானுஜனை யுடையோம்" என்று மகிழ்ந்தான்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயினார் அருளிய படி 'வைஷ்ணவ வாமனத்தில் நிறைந்த நீல மேனியின் ருசி ஜனக விபவலாவண்யம் பூர்ணம்'' என்றபடி பூர்ணத்துவத்துடன் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான் ஸ்ரீ நம்பி. பெருமாள் எனப்படும் ராமபிரானுக்கும் பிரானை ரங்க நாதன் பெரிய பெருமாளானான்; இதே போல், எம்பெருமானாரால் வைஷ்ணவ நம்பி என்ற பெருமை ஏற்றான் திருக்குறுங்குடிப் பெருமான். இவ்வளவு பெருமை படைத்ததான திவ்ய தேசத்தில் ஸ்ரீ நம்பியின் நியமனத்தின் பேரில் ஸ்வாமி சில காலம் எழுந்தருளியாயிற்று. தம் ஆசார்யனை பெரிய நம்பி வம்சத்தில் பூர்ணாசாரியரான ஸ்ரீ வைஷ்ணவரைத் தர்சன ப்ரவர்த்தகராக்கினார், ஸ்ரீ நம்பி ஸந்நிதி கைங்கர்யத்துக்கும் நிர்வாகத்திற்குமாகக் காஷயம் திரிதண்டம் கொடுத்து ஆச்ரம ஸ்வீகாரம் செய்வித்து ஸ்ரீ பேரருளாள ராமானுஜ ஜீயர் என்ற திருநாமம் சாத்தி நியமித்தருளினார்.

அப்படிப்பட்ட பரம்பரையிலுள்ள ஜீயர் ஸ்வாமிகளே கைங்கர்யமும் நிர்வாகமும் நடத்தி வருகிறார்கள். இப்போது மேற்படி ஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி இந்தப் பரம்பரையில் நாற்பத்தெட்டாமவர்.

ஸ்வாமி எம்பெருமானார் ஜீயர் அபராவதாரமான விசதவாக்சிகாமணி ஸ்ரீ மணவாளமாமுனிகள் திருக்குறுங்குடி நம்பியை மங்களாஸாஸனம் செய்யும் போது பதினெட்டாவது ஜீயர் ஸ்வாமி எழுந்தருளியிருந்தார்.

ஸ்வாமி அங்குச் சிலகாலம் எழுந்தருளியிருந்து பத்தொன்பதாவது பட்டம் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியை அனுக்ரஹித்துப் பின் திவ்யதேச மங்களாஸாஸனத்துக்கு எழுந்தருளினார்.

இப்படிப் பெருமைவாய்ந்த ஸ்ரீ பேரருளாள ராமானுஜ ஜீயர் ஸ்வாமிக்கு ஸ்ரீ நம்பி ஸந்நிதி, ஆழ்வார்கள் ஆசாரியர்கள் ஸந்நிதி இவற்றிலும் கோஷ்டிகளிலும் ஸர்வகால ஸர்வ அவசரங்களிலும் முதல் மரியாதைகள் ஏற்பட்டு எம்பெருமானார் காலம் முதல் நடந்து வருகிறது.

அருளிச்செயல் கோஷ்டிகள் தொடங்கும்போது, "ஸ்ரீ பேரருளாள ராமானுஜ ஜீயர் பதினெண்பதி ஸ்ரீவைஷ்ணவாள்" என்ற அருளப்பாடு சொன்னவுடன் ஜீயர் ஸ்வாமி மட்டுமே "நாயன்தே, நாயன்தே" என்று ப்ரதி சொல்லி, கோஷ்டியில் தொடங்குவது நெடுநாள் வழக்கம். இதில் வேறு ஒருவருக்கும் பாத்யதையோ அதிகாரமோ கிடையாது. ஜீயர் ஸ்வாமி கோஷ்டிக்கு எழுந்தருளாத காலங்களில் அவர் அனுமதி பெற்றவர் தொடங்குவர்.

இனி, நித்யையிலும், உத்ஸவகாலங்களில் திருவீதிப் புறப்பாடு சமயத்திலும், பஞ்சபர்வப் புறப்பாடுகளிலும் திவ்யப்ப்ரபந்தம் ஸேவிக்கும் க்ரமங்கள்:—

நித்யம்: உதயம் விச்வரூபத்தில் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி எழுந்தருளி "ஸ்ரீ சைலேச" தனியன் ஸேவித்துத் திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருப்பாவை ஸேவித்து சாற்றுமுறை. இந்தத்திவ்ய தேசத்தில்தான் விச்வருபத்தில் ஸேவை சாற்றுமுறை நடக்கிறது. மாலைவேளைகளில் நித்யானுஸந்தானம்.

அனத்யயன காலங்களில் காலையில் நாலாயிர தனியன் ஸேவித்து, உபதேச ரத்தினமாலை ஸேவை சாற்றுமுறை. மாலையில் திருவாய்மொழி நூற்றந்தாதி.

பிரம்ம உத்ஸவத்தில்: திருவீதிப் புறப்பாட்டில் இரண்டு வேளைகளிலும் இயற்பா. 7-ஆம் திருநாள் காலை திருச்சந்த விருத்தம். அன்று மாலை பெரிய திருமொழி தொடங்கி, 10வது உத்ஸவம் திருத்தேர் முன்பு சாற்றுமுறை. பகல் திருமஞ்சனம் ஆனதும் முதல் உத்ஸவம் முதல் பத்தாவது உற்சவம்வரை பிரதி தினம் 100 பாசுரம் வீதம் முதலாயிரமும், இரண்டாவது உத்ஸவம் முதல் 11வது உத்ஸவம்வரை தினம் ஒருபத்து திருவாய்மொழியும் கோவிலுக்குள் உட்கார்ந்து ஸேவிக்கப்படும்.

வஸந்த உத்ஸவம் 10 நாள். சிறிய திருமடல் ஸேவை.

திருப்பவித்ர உத்ஸவம் 7 நாள். வீதிப் புறப்பாட்டில் இயற்பா; கோவிலுக்குள் திருவாய்மொழி.

நவராத்திரி 9 நாள். திருவாராதனம் ஆனதும் திருப்பாவை.

ஊஞ்சல் உத்ஸவம் 10. திருவாய்மொழி தினம் ஒருபத்து.

கைசிக உத்ஸவம்: புறப்பாட்டில் பெரிய திருமடல்.

ஆஸ்தானத்தில் "அக்கும்புலியும், எங்ஙனேயோ" பாசுரம் அரையர் ஸேவித்து அபிநயம், வியாக்யானம் ஆனதும் மற்றப் பாட்டுக்கள் கோஷ்டியார் ஸேவித்து 'எங்ஙனேயோ' சாற்றுமுறை.

அத்யயன உத்ஸவம் (பகல் பத்து)- பெருமாள் ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளி ஆழ்வார் மரியாதை நடந்து ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி மரியாதை நடந்து அர்ச்சகர் அரையர் தாளத்தை ஸேவிக்க ஜீயர்

ஸ்வாமி திருப்பல்லாண்டு முதல் பாட்டு ஸேவிக்க, கோஷ்டியார் மற்றப்பாட்டுகளை ஸேவிப்பர். முதல் ஐந்து நாட்கள் முதலாயிரம். இரண்டாவது ஐந்துநாட்கள் பெரிய திருமொழி. பகல் பத்து சாற்று முறையன்று திருமங்கைமன்னன் திருவடி தொழுதல்.

பெரிய திரு அத்யயன உத்ஸவம் (இராப்பத்து) சயனம் படிகளைந்து வேத விண்ணப்பங்கள் ஆகி, திருமங்கையாழ்வாருக்கு மரியாதை, ஜீயர் ஸ்வாமி மரியாதை ஆகி, அர்ச்சகர் அரையர் தாளம் ஸேவிக்க ஜீயர் ஸ்வாமி "உயர்வற" முதல் பாட்டு ஸேவிக்க கோஷ்டியார் பாக்கி பாட்டை ஸேவிப்பர். திருமாமணிமண்டபத்துக்கு ஆழ்வார் ஆசாரியர்கள் எழுந்தருளிய பின், டவண்டை, செகண்டி அடித்து, பரமபதவாசலுக்குப் பெருமாள் எழுந்தருளி சுருள் அமுது செய்து வேத விண்ணப்பம் நான்கு வேதம், ஸூத்ரம், ஸ்ரீ பாஷ்யம் அருளிச்செயல், கீதாபாஷ்யம், கத்யத்ரயம், ஆளவந்தார் ஸ்தோத்ரம் தொடங்கி வாசல்காரனுக்கு மரியாதை. கர்ஜவாத்யத்துடன் திருக்காப்பு நீக்கி, திருமாமணிமண்டபம் சேர்ந்து ஆழ்வார் ஆசார்யாள் மரியாதையாகி ஜீயர் ஸ்வாமிக்கு மரியாதை அருளப்பாடு திருவந்தாதி கோஷ்டியுடன் பத்தி உலாவி சாத்துமுறை. மண்டப திருவாராதனம் ஆனதும் பிரதி தினமும் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி தொடங்க பிறகு கோஷ்டியார் ஸேவித்து சாத்துமுறை. வாழித் திருநாமம், பராங்குசாஷ்டகம், ஆழ்வார் உடையவர் வாழித் திருநாமம். 10வது நாள் ஆழ்வார் திருவடி தொழுதல். வேதம் சாத்துமுறை.

**11வது நாள்:** பெருமாள் முன் திருமங்கையாழ்வார் வீடு சாதிக்க வேண்டும் என்று மறியல் செய்வதாக ஐதிஹ்யம். வேதவிண்ணப்பம் ஆகி, திருவாசல் திறந்து ஆழ்வார் மறியலாக எழுந்தருளியிருப்பர். அப்போது பரிசாரகர்கள், "வளைத்து வைத்தேன்" என்கிற பாசுரமும், "மாயம் செய்யேல்" என்கிற பாசுரமும் ஸேவித்துப் பெருமாளிடம் நியமனம் வாங்கி ஆழ்வாருக்குப் பட்டயம் வாசித்து அளிப்பார்கள். பட்டயம் வாசிக்கும் போது, "ஸ்ரீ பேரருளாள ராமானுஜ முனிப்ரியர்" என்று அருளப்பாடு. மேற்படி மரியாதைகள் நடந்து ஆழ்வாருக்குத் திருமஞ்சனம் கோஷ்டி முடிந்ததும் திருவாராதனம் ஆகி, கோஷ்டியில் இராமானுச நூற்றந்தாதி ஸேவை சாற்றுமுறை. பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளும்போது ஜீயர் ஸ்வாமியுடன் பரமபத வாசல் வழியாக உள்ளே எழுந்தருளி, ஸேனை முதலியாருக்கு அருளப்பாடுடன் பரமபதவாசல் திருக்காப்பு சேர்க்கப்படும், ஆழ்வார் ஆசாரியர்களுக்கும் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகளுக்கும் விடை ஸாதிக்கப்படும்.

புறப்பாடு முடிந்து ஸ்ரீ நம்பி உள்ளே எழுந்தருளும்போது "நம்பக்கம் நின்றூற்கு யாதொரு குறையும் இல்லையே!" என்று கேட்பது ஸ்ரீ நம்பியின் வாத்ஸல்யத்தை விளக்கும்.

**எண்ணெய்க் காப்பு உத்ஸவம்:** பெருமாளும் இரண்டு தாயாரும் எழுந்தருளித் திருப்பாவை ஸேவை.

**தை மாதப் பிறப்பு:** பெருமாள் புறப்பாட்டில் பெரிய திருமடல்.

**வருஷத் திருநக்ஷத்திரம்:** நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், எம்பெருமானர், மணவாள மாமுனிகள் உத்ஸவங்களில் நாலாயிர கிரமம்.

மற்ற ஆழ்வார் ஆசாரியர்களுக்கு ஸ்வப்பிரபந்தம், கோயில் திருவாய்மொழி, நாள்பாட்டு ஸேவிப்பது வழக்கம்.

**முக்கிய குறிப்பு:—** எந்தப்புறப்பாட்டிலும் தொடங்கும்போது தென்னாசார்ய தனியன் ஸேவிப்பதும் முடிக்கும்போது ஸர்வதேச என்று தொடங்கி மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும் முடிந்த பின் ஸ்ரீ உடையவர் வாழித் திருநாமம் "சீராரும்" அறுசமய ஸேவித்து முடிப்பதும் நெடுங்காலமாக வழக்கம்.

---

# ஆழ்வார் திருநகரியில் அருளிச்செயல்

## கிரமத்தின் அற்புதவைகரியும், மற்ற சிறப்புக்களும்

ஸ்ரீ உ. வே. ஆத்தான் அப்பு சடகோபாசாரியார்-மேலைத் திருமாளிகை, ஆழ்வார் திருநகரி.

"உண்டோ வைகாசி விசாகத்திற்
கொப் பொருநாள்
உண்டோ சடகோபர்க் கொப்
பொருவர் — உண்டோ
திருவாய் மொழிக் கொப்பு
தென் குருகைக்குண்டோ
ஒருபார் தன்னி லொக்குமூர்"

என்பது விசதவாக்சிகாமணியான சுவாமி மணவாள மாமுனிகளின் அருள்வாக்காகும். குருகூர் என்றும், குருகை, குருகாபுரி என்றும் வழங்கப்படும் திருத்தலமே ஆழ்வார்திருநகரியாகும். இத்திருநகரியிலே வேதம் தமிழ் செய்த மெய்யன், எழிற்குருகை நாதனுன நம்மாழ்வார் அவதரித்தார். "ஈரொன்பதாம் பாண்டியிலே" இத்திருப்பதி மிகவும் முக்கியமானதாகும். இத்திவ்விய தேசம் ஆழ்வாராலும் ஏற்றம் பெற்றது. அருளிச்செயலாலும் ஏற்றம் பெற்றது. தமிழ்க் கருவூலமாகவே திகழ்கிறது. எண்ணற்ற இலக்கிய இலக்கண நூல்கள் இவ்வூரில் தோன்றியுள்ளன. அவையாவன - சடகோபர் திவ்விய சரிதம், சடகோபன் சந்திர கலா மாலை, குருகை மான்மியம், குருகை மாலை, மாறன் அலங்காரம், மாறன் அகப்பொருள், மாறன் பவனிக் குறம், குருகூர் பள்ளு, குருகூர்வரி, நம்மாழ்வார் பிள்ளைத் தமிழ், நம்மாழ்வார் தாலாட்டு, முதலியன குறிப்பிடத்தக்கனவாம். இராமாயணத்தைத் தமிழில் இயற்றிய கம்பர் நம் சடகோபனைச்சடகோபரந்தாதி என்ற நூலில் பின்வருமாறு பாடியுள்ளார்.

"வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந்
தோர்விரிஞ் சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்
முன்செல்க குணங்கடந்த
போதக் கடல்எங்கள் தென்குரு
கூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின் முன்செல்லுமே தொல்லை
மூலப் பரஞ்சுடரே"

என்பதாகும்.

கோவில்களில் உத்ஸவங் கண்டருளுகின்ற போது எம்பெருமான் நடுவே எழுந்தருள வடமொழி வேதம் எம்பெருமானுக்குப் பின்னுல் பாராயணம் செய்யப்பட்டு வருவதும், தமிழ் வேதமாகிய திவ்வியப் பிரபந்தம் அவனது சொரூபத்தை யுணர்ந்து முன் செல்லுதல் தோன்ற முன்னே ஓதப்பட்டு வருவதும் திவ்விய தேசங்கள் தோறும் கண்டுவருகின்றோம்: கம்பர் பெருமான் மற்றோரிடத்தில்,

"அந்த மிலாமறை யாயிரத்
தாழ்ந்த வரும்பொருளைச்
செந்தமி ழாகத் திருத்தில
னேல்நிலத் தேவர்களும்
தந்தம் விழாவும் அழகும்
என்னும் தமிழார்கவியின்
பந்தம் விழா ஒழுகும்
குருகூர் வந்தபண்ணவனே"

என்று குறிப்பிட்டிருக்கின்றார். கோவில்களில் நடைபெறுகின்ற நித்திய நைமித்திக விழாக்களில் எல்லாம் தமிழ் வேதங்களான அருளிச்செயல்களை ஓதவேண்டும். குருகூர்ச் சடகோபன் சொன்ன குறிகொள் ஆயிரத்தையும் அறியக் கற்று வல்ல அருளிச்செயல் சேவிப்பதாலேயே ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி உண்டாகும் என்று தெரிய வருகிறது.

நாதனுக்கு நாலாயிரம் உரைத்த நாதனே

"சேமம் குருகையோ செய்யதிருப்பாற் கடலோ
நாமம் பராங்குசனே நாரணனே — தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெருமான் உனக்கு"

என்ற பாடலில் நம்மாழ்வாரைப் பகவானுக்கே கருதிப் போற்றுகின்றார்கள். இத்தகைய நம்மாழ்வார் அவதரித்த திவ்விய தேசத்தில் ஆண்டுதோறும் நடைபெறுகின்ற பெருவிழாக்களிலும், திருவிழாக்களிலும், தினசரியும் நடைமுறையில் இருந்துவருகின்ற அருளிச்செயல் கிரமத்தின் அற்புத வைகரியையும், மற்ற சிறப்புக்களையும் சிறிது காண்போம்.

"செய்ய தமிழ்மாலைகள் நாம் தெரிய
வோதி தெளியாத மறைநலன்கள்
தெளிகின்றோமே"

என்றார் ஸ்ரீமந் நிகமாந்த மகா தேசிகன். ஆழ்வார்திருநகரியில் நம்மாழ்வார் திருமுன்பாக எப்பொழுது ஸ்ரீசைலேசதயாபாத்திரம் தொடங்கினாலும் உடனே "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்கிற பிரபந்தம் சேவித்துத்தான் மற்ற பிரபந்தங்கள் சேவிப்பது வழக்கம். கண்ணிநுண்சிறுத்தாம்பு நாதமுனிகளுக்கு அருளிச்செயல் கிடைக்கக் காரணமாக இருந்தபடியால் அதைச் சேவித்து வருவது வழக்கம். சித்திரையில் சித்திரை நாளான மதுரகவி திருநக்ஷத்திரத்தன்று கூட கண்ணிநுண்சிறுத்தாம்பு என்ற பிரபந்தத்தைச் சேவித்து முடிவில் பயனன்றாகிலும் என்ற சாத்துமறையை அரையர் சுவாமியே சேவித்துவிடுவார். இது போலவே திருவத்யயன உத்ஸவத்தில் ஐந்தாம் திருநாளன்றும் அந்தக் கண்ணிநுண்சிறுத்தாம்பை அரையர் சேவிக்க மதுரகவிகள் நம்மாழ்வாரின் திருவடிகளைத் திருத்துழாயினால் தொழுவர். சித்திரையில் செய்ய திருவாதிரையில் அவதரித்த மாறன் அடிபணிந்து உய்ந்தவரான இராமானுசரின் திருநக்ஷத்திரத்தன்றும், 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற பாசுரங்களின் மூலமே நம்மாழ்வாரின் திருவடிகளைத் தொழுவது வழக்கம். நம்மாழ்வாரும், நம்பி ராமானுசனும் ஒரே ஆசனத்தில் எழுந்தருளித் திருமஞ்சனம் கண்டருளுதல் ஆண்டிற்கு மூன்றுமுறை மட்டுமே நடைபெறுகின்றது. மார்கழித் திருவாதிரை, மாசித் திருநாள் ஏழாம் திருவிழா, வைகாசி ஏழாம் திருவிழாக்களில் இந்த அரிய சேவை. ஐப்பசித் திருமூலத்தன்று மணவாள மாமுனிகள் நம்மாழ்வார் எழுந்தருளும் பல்லக்கில் விசேஷமான விருதுகளுடன் நம்மாழ்வார் சன்னிதிக்கு எழுந்தருளிய பின்பே நம்மாழ்வாருக்குத் திருமண்காப்பு சாத்தப்படும். இது ஓர் தனிச் சிறப்பான வைபவமாகும். இத் திருநகரியிலுள்ள திருக்கோவிலில் அத்யாபக மிராசுதார்கள் எழுவர் உள்ளனர். இவர்களே அருளிப்பாடு ஆன உடன் தனியன் தொடங்குதல், சாத்துமறை தொடங்குதல் முதலியன செய்வார்கள். முதற்பாட்டையும் முடிவுப் பாசுரத்தையும் அரையர் சுவாமிகள் தாளத்துடன் சேவிப்பார். பெரிய நம்பி ஸ்ரீபராங்குச தாஸர், திருவாய்மொழிப் பிள்ளை, கொல்லி காவலதாசர், சடகோபாச்சாரியார் (ஆத்தான் திருமாளிகையார்களுக்குரிய அருளிப்பாடு) மதுரகவி அண்ணவியார்களுக்கு, வகுளாபரணபட்டர், ஆதிநாதபட்டர் என்ற அருளிப்பாடு, சொகுசுதேவராஜ அய்யங்கார் ஆகிய எழுவரே அத்யாபக மிராசுதார்கள். இவர்கள் இன்றும் இந்த சன்னிதியில் அருளிச்செயலைச் சேவித்து வருகின்றார்கள்.

நம்மாழ்வாருக்கு எப்போதெல்லாம் திருமண்காப்பு சாத்தப்படுகிறதோ அப்

போதெல்லாம் திருவாய்மொழிப் பிள்ளைக்கு "ஸ்ரீ சடகோபதாஸர்" என்ற அருளிப்பாடுடன் திருமண் காப்பு பிரசாதம் வழங்கப்பட்டு வருகின்றது. அரையர் சுவாமிகளுக்குத் தனியான ஏற்றம் - எந்த விழா நடைபெறுவதாக இருந்தாலும் அரையர் சுவாமி அருளிப்பாடு இல்லாமல் எதுவும் நடைபெறாது. "குருகாவல் நம்பி" என்ற அருளிப்பாடு சொன்னவுடன் அவர் தாளத்துடன் நின்று இசையோடு சேவித்துக் கோஷ்டியாருக்கு அருளிப்பாடு சாதித்தருள ஏற்பாடு செய்வார். மார்கழி மாதத்தில் அரையர் சுவாமிகளின் கைங்கர்யம் மகத்தானது. அந்த இருபது நாட்களிலும் வியாக்கியானம் சேவித்தல், அபிநயம் பிடித்தல் முதலியவற்றைச் சேவிக்கலாம். எந்தத்திவ்விய தேசத்திலும் இல்லாத நம்மாழ்வார் சயனத் திருக்கோலமும், அருகில் சுவாமி ராமானுஜர் தாயார் திருக்கோலத்தில் ஆழ்வாரின் திருவடிகளை வருடிக் கொண்டிருப்பதுமான சேவையாகும். அன்றியும் திருமுடி சேவை, தத்துவப் போர்வை சாத்திப் படிகளைதல், அப்போது அரையர் வியாக்கியானம் முதலியன தனிச்சிறப்பு வாய்ந்தனவாம். இவைகளைக் காணக் கண் பலகோடி வேண்டும். இது போலவே வீடு விடைத் திருமஞ்சனமும், அப்போது அண்ணாவியார்கள் சேவிக்கும் கவியும் அற்புதமானதாகும்.

இத்திருக்கோவிலில் மாதந்தோறும் முறைப்படி நாலாயிர சேவாகாலம் நக்ஷத்திரக்கிரமமாக இன்றளவும் இடைவிடாமல் நடைபெற்றுவருகின்றது. அந்தந்த ஆழ்வார்களின் திருநக்ஷத்திரத்திற்குத் திருவாய்மொழி ஆயிரமும் உண்டு. ஆனி மாதத்தில் மட்டும் ஐந்து முறைகள் திருவாய்மொழி சேவிக்கப்படுகிறது. காரணம் பெரியாழ்வாருக்காக ஒருமுறை, திருப்புளி ஆழ்வாருக்காக ஒருமுறை, ஞானப்பிரானுக்காக ஒருமுறை, ஜேஷ்டாபிஷேகத்திற்காக ஒருமுறை, மாதக்கிரமப்படி ஒரு முறை. இப்படி அருளிச்செயல் நடைபெற்று வருகின்றது.



**அருளிச்செயல் அனுசந்தானக்கிரமம் பட்டியல்**

| திருநக்ஷத்திரம் | ஆழ்வார் ஆச்சார்யர் | அருளிச்செயல்கள் |
|---|---|---|
| ரோகிணி | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் |
| மிருகசீர்ஷம் | | திருப்பாவை, கண்ணிநுண்சிறுத்தாம்பு |
| திருவாதிரை | எம்பெருமானார் | இராமானுஜ நூற்றந்தாதி |
| புனர்பூசம் | குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி<br>திருவாய்மொழி முதற்பத்து |
| பூசம் | | திருவாய்மொழி இரண்டாம் பத்து |
| ஆயில்யம் | திருமழிசைப்பிரான் | பாடல்களில் நான்முகன் திருவந்தாதி<br>திருவாய்மொழி மூன்றும் பத்து |
| மகம் | திருமழிசையாழ்வார் | திருச்சந்த விருத்தம், திருவாய்மொழி 4ம் பத்து |
| பூரம் | ஆண்டாள் | திருப்பாவை, நாச்சியார் திருமொழி-<br>திருவாய்மொழி 5ம் பத்து. |

| திருநக்ஷத்திரம் | ஆழ்வார் ஆச்சார்யர் | அருளிச்செயல்கள் |
|---|---|---|
| உத்திரம் | பெரியாழ்வாருக்காக | பெரியாழ்வார் திருமொழி முதற் பத்தும் திருவாய்மொழி 6ம் பத்தும் |
| ஹஸ்தம் | பெரியாழ்வார் திருமொழி 2ம் பத்தும் | திருவாய்மொழி 7ம் பத்தும் |
| சித்திரை | மதுரகவி | கண்ணி நுண் சிறுத்தாம்பு பெரியாழ்வார் திருமொழி 3ம் பத்து திருவாய்மொழி 8ம் பத்து |
| சுவாதி | பெரியாழ்வார் | பெரியாழ்வார் திருவாய்மொழி சாத்துமறை. திருவாய்மொழி 9ம் பத்து |
| விசாகம் | நம்மாழ்வார் | திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி 10ம் பத்து |
| அனுஷம் | நாதமுனி | திருப்பாவை, கண்ணி நுண்சிறுத்தாம்பு |
| கேட்டை | தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமாலை, திருப்பள்ளியெழுச்சி |
| மூலம் | மணவாளமாமுனிகள் | உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி. |
| பூராடம் | திருமங்கையாழ்வாருக்காக | பெரிய திருமொழி முதற்பத்து |
| உத்திராடம் | | பெரிய திருமொழி 2ம் பத்து |
| திருவோணம் | பொய்கையார் | பெரிய திருமொழி 3ம் பத்தும், முதல் திருவந்தாதியும். |
| அவிட்டம் | பூதத்தார் | பெரிய திருமொழி 4ம் பத்தும் இரண்டாம் திருவந்தாதியும் |
| சதயம் | பேயார் | பெரிய திருமொழி 5ம் பத்து, மூன்றும் திருவந்தாதியும் |
| பூரட்டாதி | | பெரிய திருமொழி 6ம் பத்து |
| உத்திரட்டாதி | | பெரிய திருமொழி 7ம் பத்து |
| ரேவதி | | பெரிய திருமொழி 8ம் பத்து |
| அச்வதி | | பெரிய திருமொழி 9ம் பத்து, திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல். |
| பரணி | | பெரிய திருமொழி 10ம் பத்து, பெரிய திருமடல் |
| கார்த்திகை | திருமங்கையாழ்வார் | பெரிய திருமொழி 11ம் பத்து, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம். |

இவ்வாருக முறைப்படி நாலாயிர சேவாகாலம் சேவிக்கப்பட்டு வருகின்றது. நம்மாழ்வாரின் அவதார உத்ஸவமான வைகாசித் திருவிழாவின்போது ஐந்தாம் திருநாளன்று நவதிருப்பதி எம்பெருமான்களின் மங்களாசாசனம் தனிச் சிறப்பு வாய்ந்தது. மாசி விசாகத்தன்றும் வைகாசி விசாகத்தன்றும் நம்மாழ்வார் இதே திருமேனியுடன் தாம்பிரபரணியில் தீர்த்தவாரி கண்டருளுகிருர். திருவத்யயன உத்ஸவத்தின் திருவாய்மொழி கேட்டருள நியமனமும், அபூர்வமான சேவையாகும்.

இப்பகுதியில் வாழ்ந்து வந்த கருவூர் சித்தர் என்பவர் வளர்த்து வந்த நாய் ஒன்று ஒருநாள் திருக்குருகூர் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அமுது செய்த எச்சிலை வாரியுண்டு திரும்புகையில் ஆற்று வெள்ளத்தில் மூழ்கி ஆவிபிரிந்து ஆவிசோதிமயமாக ஆகாசத்தில் ஏறிப் பரமபதம் அடைந்தது. அதைக்கண்ட அந்தச் சித்தர் பின் வருமாறு பாடினுர்.

"வாய்க்கும் குருகைத் திருவீதி
எச்சிலை வாரியுண்ட
நாய்க்குப் பரமபதம் அளித்தாய்
அந்த நாயோடிந்தப்
பேய்க்கும் பதமளித்தால் பழுதோ
பெருமாள் மகுடம்
சாய்க்கும் படிக்குக் கவிசொல்லும்
ஞானத் தமிழ்க்கடலே"

என்று நம்மாழ்வாரைக் குறித்துப் பாடினுர். இத்தகைய சிறப்பு வாய்ந்த ஆழ்வார் திருநகரிக்கு மன்னியசீர் மாறன் கலையே உணவாகக்கொண்ட மகான்களே! வருக ! வருக !! மாறன் அருள்பெறுக என அழைக்கின்ருேம்.

---

# வானமாமலை

ஸ்ரீ உ. வே. சுந்தரராஜ ஐயங்கார், வானமாமலை

ரம்யஜாமாத்ரு-யோகீந்த்ர-பாதரேகாமயம் ஸதா ।
ததாயத்தாத்ம ஸத்தாதிம் ராமாநுஜ முநிம் பஜே ॥

ஸ்ரீராமாநுஜரது திவ்யாஜ்ஞை வளர்ந்து வருவது ஸ்ரீரங்கத்தில்; இவ்வாறு ஆழ்வார்திருநகரியில் நிர்வாஹம் ஸ்ரீமணவாளமாமுனிகளது நியமனத்தால், வானமாமலையில் நிர்வாகம் இவரது ப்ரதம சிஷ்யராய் பொன்னடிக்கால் ஜீயர் எனப்படும் ஒன்றான வானமாமலை ராமாநுஜ ஜீயரால். இந்த ஜீயர்ஸ்வாமி, ஸ்ரீமணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களுள் முதல்வர், அவரை விட்டு என்றும் பிரியாதவராதலால், அவர் தம்பாதரேகை என்று பாராட்டப்பட்டார்.

ஒருநாள் இவ்விருவரும் பெரியபெருமாளை மங்களாசாஸநம் செய்யும்போது, பெருமாள் அர்ச்சகர் ஒருவரை ஆவேசித்து, பூபாலராயனில் எழுந்தருளியிருந்த லக்ஷ்மீ நாராயண விக்ரஹத்தை வானமாமலை ஜீயருக்கு அளித்து, "நாம் அரங்கநகரப்பன்; உமது ஆசாரியருக்கும் உமக்கும் திருவாராதனமாக வருகிறோம்" என்றருளினர். வானமாமலைப் பெருமாளது நியமனப்படி ஜீயர் வானமாமலைக்கு எழுந்தருளும்போது மாமுனிகள் தமது விக்ரஹத்தையும் ப்ரஸாதிக்க இவ்விரண்டுடன் ஜீயர் வானமாமலைக்கு எழுந்தருளி, இவற்றைப் பிரதிஷ்டை செய்து ஸந்நிதி நிர்வாகஞ் செய்து வந்தார்.

மணவாள மாமுனிகள் தமது சிஷ்யர்களுக்கு வானமாமலை ஜீயரைக் காட்டியருளி, "இவர் நமக்கு ப்ராண ஸுஹ்ருத்; நமக்கு உண்டான அதிசயங்கள் எல்லாம் இவருக்கும் உண்டாகவேண்டும்" என்றருளி, ஸமாச்ரயணம் செய்ய ஆழ்வார்களை (சங்கு சக்கர இலச்சினைகளை) அளித்தார்.

வடதேசங்களில் எங்கும் திக்விஜயம் செய்து ராமாநுஜ தர்சனத்தை ஸ்தாபனம் செய்யும்படி மணவாள மாமுனிகள் நியமித்துத் தமது திருக்கையில் தரித்திருந்த த்ரிதண்டத்தில் உபதண்டத்தையும், ஓராண்வழி பரம்பராப்ராப்தமான திருவாழி மோதிரத்தையும், ஸ்வாசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் திருவடி நிலைகளையும் கொடுத்தார். ஜீயரும் மாமுனிகளின் ப்ரதிநிதியாக வடதேசங்களில் பதரிகாச்ரமம் வரையிலும் எழுந்தருளி ஆங்காங்கே ராமாநுஜ தர்சனத்தைப் பரப்பி. மடங்கள் பல நிர்மாணம் செய்து, தமக்கு ப்ரதிநிதியாக மடங்களில் மகந்துக்களை நியமித்தார்.

பின்னர் திருமலையில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ வரமங்கை நாச்சியாரை வானமாமலைக்கு எழுந்தருள்வித்து வானமாமலைப்பெருமாளுடன் திருக்கல்யாணம் செய்வித்து, "ச்வசுரம் அமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்" என்ற கணக்கிலே வானமாமலைப் பெருமாளுக்கு மாமனாரானர்.

### ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கும் திவ்ய மூர்த்திகள்

மூலவர் ஸ்ரீ தோதாத்ரி நாதன், பாம்பணையில் ஸ்ரீ பூமி நீளாஸமேதராய்

ஸ்ரீ வைகுண்டத்தில் போல் எழுந்தருளி யிருப்பவர். இவருக்கு நாள்தோறும் எண்ணெய்க்காப்புத் திருமஞ்சனம் நடக்கும். உத்ஸவர்-ஸ்ரீ தெய்வநாயகன், யாக பேரன்-வானநாடன், பலிபேரன்-வர மங்கை வாணன், திருமஞ்சன பேரன்-வானமாமலை. பிராட்டிமார்கள்-ஸ்ரீ தேவி, பூதேவி, ஸ்ரீ வரமங்கைத் தாயார் ஆண்டாள்.

ஆழ்வாராசார்யர்கள் மூலவர் திரு மேனியாகவும், உத்ஸவர் திருமேனியாக வும் எழுந்தருளியிருக்கின்றனர். நம்மாழ் வார் பெருமாளை மங்களாசாஸநம் செய் தருளி, "ஆறெனக்கு நின்பாதமே சரணா கத் தந்தொழிந்தாய்" என்றருளிச் செய்த தால், திருமேனியோடும் பெருமாளது ஸ்ரீ சடகோபனில் எழுந்தருளியிருக்கிறார்.

### ஸந்நிதி ஸ்ரீ கார்ய நிர்வாஹம்

ஸந்நிதியிலும் மடத்திலும் அத்யா பகம் முதலிய கைங்கர்யங்கள் ஜீயருக்கே உரியன; ஆதலால் முதல் மரியாதை ஜீயர் ஸ்வாமிக்கே. மற்ற தீர்த்தக்காரர் கள் இருவர். அழகிய மணவாள பட்டர் என்பவர், ஒன்றுன ஸ்வாமி திருவம்சத் திலிருந்து பரம்பரையாக வந்தவர். இவரது கைங்கர்யங்கள்: மந்த்ர புஷ்பம், ஸ்ரீ ஜயந்தி புராணம், கைசிக புராணம் இவற்றின் படனம். மற்றவர் ஸ்ரீ ரங்கா சாரியார்; நாள்தோறும் பெருமாள் ஸந்நிதி யிலே ஸ்ரீபாஷ்யம் ஸேவிக்கும் கைங்கர்யம் பெற்றவர்.

### பெருமாள் ஸந்நிதியில் திருவாராதன க்ரமம்

காலையில் விச்வரூபம், ஸுப்ரபாதத் துடன்; எண்ணெய்க் காப்புத் திருமஞ் சனம் நடந்ததும் காலஸந்தி, நடுப்பகலில் உச்சிக்காலம். சாயந்திரம் நித்யாநுஸந் தானம், திருமால் வடை, பின்பு இரண் டாங்காலம், இரவு அர்த்த ஜாமம்.

### நித்ய, நைமித்திக உத்ஸவங்கள்

(1) பஞ்சபர்வம்

(2) சித்திரை-ப்ரஹ்மோத்ஸவம்-11 நாள்

(3) வைகாசி-வஸந்தோத்ஸவம் 10 நாள்

(4) ஆனி-ஜ்யேஷ்டாபிஷேகம்

(5) ஆடி-ஆண்டாள் உத்ஸவம்

(6) ஆவணி-ஸ்ரீ ஜயந்தி, பவித்ரோத் ஸவம்

(7) புரட்டாசி-நவராத்ரி

(8) ஐப்பசி-ஊஞ்சல், மணவாள மாமுனிகள் உத்ஸவம்-(தினம் சாயங்காலம் புறப்பாடு)

(9) கார்த்திகை-தீபம்

(10) மார்கழி அத்யயன உத்ஸவம்-21 நாள்

(11) தை-எண்ணெய்க்காப்பு; ஆறு வருஷங்களுக்கு ஒருமுறை லக்ஷ தீபம்

(12) பங்குனி-தாயார் உத்ஸவம்-10 நாள்.

### திவ்யப்ரபந்த ஸேவா க்ரமம்

(1) நித்யாநு ஸந்தானத்தின்போது: திருப்பல்லாண்டு, பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு, அமலனாதிபிரான் கண்ணிநுண் சிறுத்தாம்பு; தாயேதந்தை ஏழையேதலன், எங்ஙனேயோ, நோற்ற நோன்பு, கங்குலும் பகலும், ஆழியெழ.

### 4000, பாசுரங்களும் ஸேவிக்கும் உத்ஸவங்கள்

(1) பங்குனி உத்ஸவம்

(2) சித்திரை உத்ஸவம்,

(3) அத்யயன உத்ஸவம்

(4) எம்பெருமானார் உத்ஸவம்

(5) மணவாள மாமுனிகள் உத்ஸவம்

(6) ஒன்றான ஸ்வாமியின் திருநக்ஷத்ர உத்ஸவம்.

மற்ற ஆழ்வாராசாரியர்களுக்கு அவதார தினத்தில் ஸ்வப்ரபந்தமும் கோயில் திருவாய்மொழியும்.

மாஸத் திருநக்ஷத்ரத்தில் அவரவர்களது ஸ்வப்ரபந்தம் ஸேவை.

**அத்யயன உத்ஸவத்தில் ஸேவாக்ரமம்**

முதல் 4 நாள் : முதலாயிரம்-கண்ணி நுண்சிறுத்தாம்பு சாற்றுமுறை.

பின் 6 நாள் : பெரிய திருமொழி.

இராப்பத்து உத்ஸவம்: 10 நாள்-புறப்பாட்டில் பத்தி உலாத்தலின்போது இயற்பா-பின்பு திருவாய்மொழியில் நாளொன்றுக்கு ஒருபத்து.

இருபத்தொன்றும் நாள்: நம்மாழ்வாருக்கு வீடுபடை உத்ஸவம்-திருமஞ்சனம். மடத்திலே திருப்பல்லாண்டு தொடக்கம்.

இனி ஸ்வாமி மடத்தில் கைங்கர்ய விவரங்கள்.

காலையில் அரங்க நகரப்பன் ஸந்நிதியில் விச்வரூபம், பின்பு ஸ்வாமி ஸந்நிதியில் ஸ்ரீ பாத தீர்த்தம், காலக்ஷேபம், ஸமாச்ரயணம், உச்சிக் காலத்தில் கோஷ்டி சாற்றுமுறை, ததீயாராதனம். சாயங்காலம் திருவாராதனம்.

ஒன்றான ஸ்வாமி அவதார உத்ஸவம் 10 நாள் நடக்கும். 4000 ஸேவை; வித்வத் ஸபை உபந்யாஸங்கள்.

மற்ற ஸ்வாமிகளின் அவதாரத் திருநக்ஷத்ரத்தில் நித்யாநுஸந்தானம்-சாற்றுமுறை, தீர்த்த தினத்தில் திருவாய்மொழி.

பெரிய ஸ்வாமி தீர்த்த உத்ஸவம் 10 நாள், 4000 ஸேவை.

**விசேஷ மரியாதைகள்**

பெரிய ஸ்வாமி திருநக்ஷத்ர உத்ஸவம், தீர்த்த உத்ஸவம் : இக்காலங்களில் பல திவ்ய தேசங்களிலிருந்து மாலைமரியாதை நடக்கும்: குறிப்பாக, ஸ்ரீரங்கம், திருவல்லிக்கேணி, ஸ்ரீ வில்லிபுத்தூர், பெருமாள் கோயில், திருக்குருகூர், நவதிருப்பதி திருக்குறுங்குடி.

வர்த்தமான ஸ்வாமிக்குத் திருவவதார உத்ஸவத்தின்போது மேற்கூறியவாறு விசேஷ மரியாதைகள் நடக்கும்.

**வானமாமலை ஸ்வாமி மடத்திலிருந்து நடந்துள்ள கைங்கர்யங்கள்**

ஒன்றான ஸ்வாமியும் பின்பு எழுந்தருளியிருந்த ஸ்வாமிகளும் திக்விஜயமாக எழுந்தருளுங் காலத்தில் அவ்வவ திவ்ய தேசங்களில் செய்த கைங்கர்யங்கள் பலப்பல. கைங்கர்யங்கள் ஆஸேது ஹிமாசலம் நடந்துவருகின்றன,

ஒன்றான ஸ்வாமி செய்தருளிய சிறந்த கைங்கர்யங்கள் சில:

(1) ஸ்ரீரங்கத்திலே மணவாள மாமுனிகளுக்காகப் பெருமாள் நியமித்தருளிய பல்லவராயன் திருமண்டபத்தில், ஸ்வாசார்யரான பெரிய ஜீயர் (மணவாள மாமுனிகள்) அனுமதிகொண்டு, மடத்தைத் திருப்பணி செய்து, அதிலே திருமலையாழ்வாரிலே கையும் ஞானமுத்ரையுமாய் ஸ்வாசார்யரான பெரிய ஜீயரைச் சித்ர ரூபத்திலே ஏறியருளப் பண்ணி, அவர் திருமுன்பே அஞ்ஜலி ஹஸ்தராய் விநீதராய் ஸேவித்திருக்கும் க்ரமத்தில் ஏறியருளப்பண்ணுவித்தார்.

(2) வானமாமலையில் முதன் முதலாக எதிராஜரது திருமண்டபத்தைக் கட்டிப் பெருமாளது விமானத்தை ஸ்தூபி பர்யந்தம் திருத்தித் திருப்பணி செய்து, ஆழ்வாராசார்யர்கள் ஸந்நிதியும் மண்டபங்களையும் நிர்மாணம் செய்தார்.

**வானமாமலை மடத்தின் கைங்கர்யங்கள்**

(1) ஸ்ரீரங்கத்தில் திருமணத்தூண், சந்தன மண்டபம்.

(2) ஆழ்வார் திருநகரியில் - பெரிய திருத்தேர்; ஆழ்வாருக்குப் பூபாலராயன், திருமஞ்சன ஆஸ்தானத்திற்காகப் பொன்னுங் குறடு, பெரிய திருப்பல்லக்கு, குதிரை வாகனம், ஹம்ஸ வாகனம், திருவாபரணங்கள்.

(3) ஆண்டாள் ஸந்நிதியில் (ஸ்ரீவில்லி புத்தூரில்): பெரிய திருத்தேர், ஹம்ஸ வாகனம், திருப்பல்லக்கு முதலியன.

(4) ராஜமன்னார் ஸந்நிதியில்: திருத்தேர், திருவாபரணங்கள்.

(5) ஸ்ரீ பெரும்பூதூரில் ஹம்ஸ வாகனம், பெரிய மங்களகிரி.

(6) திருநாராயண புரத்தில்: பெரிய திருப்பல்லக்கு.

(7) பத்ரிகாச்ரமத்தில் வெள்ளிப் படிக்கட்டு, வெள்ளிக் கதவு.

(8) பூரி ஜகந்நாத்தில் நாலுகால் மண்டபம், வானமாமலை ஜீயரது திருவுருவம் சித்ரமாக அமைந்துள்ளது.

பணவா ளரவில் துயிலரங் கேசர்
பதம்பணியும்
மணவாள மாமுனி மாமலர்த் தாள்களை
வாழ்த்து நல்ல
குணவாள னெந்தை இராமா நுசமுனி
கோதில்பதம்
தணவா நிதிநமக் கென்றென் றும
நாடோறும் சாற்று நெஞ்சே.

---

## திருப்புட்குழி ஸ்ரீவிஜயராகவப் பெருமாள் ஸன்னிதி அத்யாபக கைங்கர்யச் சுருக்கம்.

ஸ்ரீ உ. வே. P. K. சிங்கராசாரியார்

1- இந்த ஸன்னிதி தென்கலை ஸன்னிதி.

2. பாஞ்சராத்ரமுறைப்படி இங்குத் திருவாராதனம்.

3. தென்கலை பிரபந்தங்கள் மட்டும் தான் ஸேவிக்கலாம்.

4. வேத பாராயணம் உள்பட வேறெதுவும் ஸேவிக்கக்கூடாது என்பது நீதிமன்றத் தீர்ப்பு.

5. ஸேவை தொடங்கும்போது 'ஸ்ரீ சைலேச' என்றுதான் தொடங்க வேண்டும். சாதித்தருளாய் என்று தொடங்குவதில்லை.

6. அனத்யயன காலத்தில் உபதேச ரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதி ஸேவாகாலம்.

7. கூரத்தாழ்வான் சாற்றுமறைக்குப்பிறகே திருப்பல்லாண்டு தொடக்கம்.

8. திருவீதிப் புறப்பாடுகளில் கோஷ்டி தொடங்கும்போதும் முடிக்கும் போதும் ஸ்ரீ சடகோபன் ஸாதிப்பது இல்லை.

9. இராப்பத்து சாற்றுமறையன்று ஆழ்வார்திருவடி தொழுதல் என்றகட்டத்தில் 'ஆழ்வாரை ஸாதித்தருளவேணும்' என்று பிரார்த்திக்கும் உரிமை அத்யாபகர்களுக்கே ஏற்பட்டுள்ளது.

10. திருமஞ்சனகாலங்களில் அத்யாபகருக்குத் திருத்துழாய் சரம் ஸமர்ப்பித்து ஸ்ரீ சடகோபன் சாதிக்கப்படுகிறது.

11. அத்தியாபக சுதந்திரப்ரஸாதத்தை அத்யாபகர்களே பெற்று, கோஷ்டியிலுள்ள மற்றவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பது வழக்கம். - இது நீதிமன்றத் தீர்ப்பு.

12. இந்த ஸன்னிதியில் உள்ள வேதாந்ததேசிகருக்கு மாத திருநக்ஷத்திரங்கள், வருஷ திருநக்ஷத்திர பத்து நாள் மகோத்ஸவம் நடக்கிறது. இக்காலங்களில் ஏகாந்த திருமஞ்சனம்: தீர்த்தம், ஸ்ரீ சடாரி, பிரசாத விநியோகம் எல்லாம் உண்டு. ஆனால், ஸேவாகாலமோ சாற்றுமறையோ கிடையாது; வழக்கமும் இல்லை.

13. ஸன்னிதியில் திரைக்குள் சொல்ல வேண்டிய மந்திரங்களை அர்ச்சகர்களே சொல்லவேண்டும்: திரைக்கு வெளியில் திவ்யப்ரபந்த பாசுரங்களே ஸேவிக்க வேண்டும், தென்கலையாருக்கே அத்யாபக மிராசு பாத்யதை; வேறுயாருக்கும் எந்நாளும் கிடையாது. இது நீதிமன்றத்தின் தீர்ப்பு.

---

# திருநாங்கூர்-செம்பொன் செய்கோயில்

V. R, வரதநாராயண அய்யங்கார்—முதல் தீர்த்த மிராசுதார்.

ஸ்ரீ திருமங்கை யாழ்வாரால் மங்களா ஸாஸனம் செய்யப்பெற்ற திருநாங்கூர் பதினொருதிவ்ய தேசங்களுக்கும், ஒரு ஏகாதச ரத்னமாலைக்கு நடுநாயகக்கல் போல் நடுநாயகமாய் திவ்யதேசங்களின் அமைப்பிலும், ஆழ்வார் பாசுரங்களின் அமைப்பிலும், "நன்னடுவுள்" என்று நடுநாயகமாய்த் திகழ்கிறது. இச் செம் பொன் செய்கோயில்.

மேலும், இத்திவ்யதேசம் ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு முதல் மூன்றாய்த்திகழும் கோயில், திருமலை, பெருமாள்கோயில் என்ற மூன்று திருப்பதிகளின் முக் கூட்டாய் அமைந்துள்ளது. இதுதான் செம்பொன்செய் கோயிலாய், எம்பெரு மானும் செம்பொன் அரங்கனைச் சேவை சாதிப்பதால் கோயில் ஆகவும், "மின் திகழ் குடுமி வேங்கடமலைமேல் மேவிய வேத நல்விளக்கு"! என்று ஆழ்வார் அருளிய படியாலும் "அல்லிமாமலராள் தன்னொ டும் அடியேன் கண்டு கொண்டு அல்லல் தீர்ந்தேனே" என்று "அலர்மேல் மங்கை உறை மார்பா" என்பதற்கு இணையாய், திருவேங்கட முடையானாகவும், முதலில், "பேரணிந்து உலகத்தவர் தொழுதேத் தும் பேரருளாளன்" என்றும் முடிவில் "வானவர் கோனைக்கண்டமை சொல்லும் மங்கையார் வாள் கலிகன்றி" என்றும் ஆழ்வார் அனுபவம் இருப்பதால், "பெருமாள்கோயில்" ஆகவும் திகழ்கிறது.

இந்தத் திவ்யதேசத்தை அனுபவிக் கும் போது ஆழ்வாருடைய திருவுள்ளம் அஹமன்னம்.... அஹமன்னம்." என்ற முக்தாத்மாவினுடைய அந்தமில்பேரின் பத்தில் ஆழ்ந்திருந்த படியை ஆழ்வா ருடைய "கண்டுகொண்டு உய்ந்து ஒழிந் தேன்." வாழ்ந்தொழிந்தேன், அல்லல் தீர்ந்தேன், வணங்கி நான் வாழ்ந்தொழிந் தேன் - எம்பெருமானும் இங்கு "வளங் கொள் பேரின்பம் மன்னி நின்றான்" என்கிற பாசுரங்கள் ஒலிக்கின்றன.

மேலும் இத்திவ்யதேசத்து ஸ்ரீ வைஷ்ணவர்களை, "சிறப்புடை மறை யோர்," திடமொழி மறையோர்," "திசை முகன் அனையோர்", "செல்வநான் மறை யோர்" "செஞ்சொல் நான்மறையோர் தென் திசைத்திலதம் அனையவர்" தெளிந்த நான் மறையோர்" என்று அதிகாரிகளைத் தனித்தனியே விசேஷித்துக் கொண்டாடு கிறார் ஆழ்வார்.

மேற்கூறிய பெருமைகளுடைய இத் திவ்யதேசத்தில் முதல் தீர்த்த மரியாதை கள் பெற்றுள்ள "ஸ்ரீ கோமடம் அழகிய சிங்கர்" என்ற வம்சஸ்தர்களுள் அடியே னும் ஒருவன் என்று பெருமைப்படு கிறேன். இத்திவ்யதேசத்தில் இரண்டா வது தீர்த்த மரியாதைகள் இங்கே நித்ய வாஸிகளான திருக்கோட்டியூர் நம்பி வம்சஸ்தர்கள் அனுபவிக்கிறார்கள்.

**இத்திவ்யதேசத்து உத்ஸவ விவரங்கள் :**

(i) ப்ரஹ்ம உத்ஸவம் : ப்ரதிவருஷம் ஐப்பசி மீ ஸ்வாதியில் தீர்த்த வாரி - அதற்கு முன் 9 நாட்கள் - நாலாயிரம் அருளிச்செயல் வேதபாராயண கோஷ்டியுடன் நடைபெறுகிறது.

(ii) அத்யயன உத்ஸவம் : தை அமா- வாஸைக்கு மறுநாள் திருமங்கை யாழ்வார் எழுந்தருளி மங்களா ஸாஸனம் செய்து, திருப்பல் லாண்டு தொடங்கியவுடன் ஒரே வேளையில் ஸங்க்ரஹமாக நாலா யிரமும் சேவித்து சாத்துமறை ஆஸ்தான உத்ஸவம் நடை பெறுகிறது.

(iii) திருநக்ஷத்ரம் : ப்ரதி மாஸமும் "ஸ்வாதி" திருநக்ஷத்திரத்திற்கு, திருமஞ்சனம் ஆஸ்தானம், திருப்பல்லாண்டு திருப்பாவை, ஸ்தலப்பாசுரங்கள் சேவித்து ஆஸ்தானம் கோஷ்டி நடை பெறும்.







திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் ஸ்ரீ பார்த்தஸாரதியுடன்
Sri Udayavar with Sri Parthasarathy







ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஸ்ரீ பார்த்தஸாரதியுடன்
Sri Manavalamamunigal with Sri Parthasarathy



மண்டயம் திவானபகதூர் M. O. பார்த்தஸாரதி ஐயங்கார்



ஸ்ரீ உ. வே. வை. மு. லக்ஷ்மிநரஸிம்மாசாரியர் ஸ்வாமி
(1923 to 1937 அத்யாபகர், 1938 to 1942 தர்மகர்த்தா)

கோஷ்டியில் அன்வயித்த பழைய அத்யாபகர்கள்





ஸ்ரீ உ. வே. திருநின்றவூர் A. K. அனந்தாசாரியர் ஸ்வாமி
(1923—1930)



ஸ்ரீ உ. வே. சீர்காழி கோபாலாசாரியர் ஸ்வாமி (1923—1928)

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி
1923-ஆம் ஆண்டு புனருத்தாரணம் செய்து நிறுவினவர்கள்



ஸ்ரீ உ. வே. அஷ்டகோத்ரம் அத்தங்கி கவிபூஷணம்
குமாரதாதாசாரியர் ஸ்வாமி



ஸ்ரீ உ. வே. வைத்தமாநிதி முடும்பை
சடகோப ராமானுஜாசாரியர் ஸ்வாமி





ஸ்ரீ உ. வே. மஹா வித்வான் உரையாசிரியச் சக்ரவர்த்தி
வை. மு. கோபால கிருஷ்ண மாசாரியர்.



ஸ்ரீ உ. வே. P. B. ராமானுஜாசாரியர்



ஈக்காட்டுத் தாங்கல் சைதாப்பேட்டையில் மாலை திருவீதி
புறப்பாடு
Ekkattu—Thangal Festi val
(Grand Evening Procession at Saidapet)



உபய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ. வே. நரஸிம்மாசாரியர் ஸ்வாமி
(1923—1945)



ஸ்ரீ உ. வே. தாமல் விஜயராகவாசாரியர் ஸ்வாமி (1923—1930)





ஷ்டகோத்ரம் ஸ்ரீ உ. வே. இ. ந. ச. வரதாசாரியர் ஸ்வாமி
(1923—1938)



அரசாணிபாலை பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி (1923—1950)



அஷ்டகோத்ரம் ஸ்ரீ உ. வே. கோ. மு.
ராகவாசாரியர் ஸ்வாமி (1923-1940)



ஸ்ரீ உ. வே. வாத்தியார் எச்சூர் கோபாலாசாரியர் (1923—1945)





அஷ்டகோத்ரம் ஸ்ரீ உ. வே. தி. ச. அனந்தாசாரியர் ஸ்வாமி (1923-1940)
(தமது இல்லத்தை ஸ்ரீ மணவாளமாமுனி சாத்துமுறைக்கும்
அன்னகூட உத்ஸவத்திற்காகவும் கோவிலுக்கு அர்ப்பணித்தவர்)



அஷ்டகோத்ரம் ஸ்ரீ உ. வே. தங்கப்பா ஸ்வாமி
(தற்கால கோஷ்டி தலைவருடன் 1958)



ஸ்ரீ உ. வே. திருமழிசை ஸ்ரீனிவாஸாசாரியர் ஸ்வாமி (1923–1939)



ஸ்ரீ உ. வே. கீழானூர் ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி (1928—1940)



பலாப்தூர் ஸ்ரீ உ. வே. பார்த்தஸாரதி ஐயங்கார் (1930—1949)



திருக்கண்ணபுரம் பண்டித ரத்னம் ஸ்ரீனிவாஸாசாரியர் ஸ்வாமி
(1923—1972)



அஷ்டகோத்ரம் திருநீர்மலை உ. வே.
பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி (1950—1972)



ஸ்ரீ உ. வே. E. R. ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி (1940—1952)
(இடப்பக்கத்திலிருந்து இரண்டாவது) ஸந்நிதி கோபுர
கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்.





ஸ்ரீ உ. வே. கிடாம்பி நாராயணர் சடகோபாசாரியர் (1945—1980)



ஸ்ரீ உ. வே. V. ஸ்ரீநிவாஸாசாரியர்
(1980 வரை ஸந்நிதி ஆசாரங்களில் ஆழங்கால் பட்டவர்)

திருவல்லிக்கேணியில் பகவத் விஷய காலக்ஷேபம் அருளிய ஸ்வாமிகள்



ஸ்ரீமத் பரமஹம்ஸ அயோத்யா ராமானுஜ ஜீயர் ஸ்வாமி (1941)



காரப்பங்காடு
ஸ்ரீ. உ. வே. சிங்கப்பெருமாள் ஸ்வாமி







வேதாந்த வித்வான் காரப்பங்காடு ஸ்ரீ உ. வே. தேசிகவரதாசார் ஸ்வாமி
வாசிரமம்) : இவர் தான் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி
ஸ்ரீரங்கத்தில் ரங்க விமானம் (பொன்முலாம்) கைங்கர்யம் செய்தவர்



ஸ்ரீ உ. வே. திருமலை அனந்தாண் பிள்ளை
அனந்தாசாரியர் ஸ்வாமி (1950)



உபய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ. வே. புரசை திருமலை
அனந்தாண் பிள்ளை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி (1945)







ஸ்ரீமத் பரமஹம்ஸ மேல்கோட்டை ஜீயர் ஸ்வாமியுடன் காரப்பங்காடு வேங்கடாசாரியர்
ஸ்வாமி (1960)



பஞ்சகுடும்பி ஸ்ரீ உ. வே. வரதசாரியர் ஸ்வாமி (1930)



வித்வான் ஸ்ரீ உ. வே. V. A. கோபால ஐயங்கார் ஸ்வாமி (1970)
(வானமாமலை ஜீயர் ஸ்வாமியாக எழுந்தருளி யிருப்பவர்)





மஹாமஹோபாத்யாய காஞ்சி, பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி (1980)



காஞ்சி ஸ்வாமி அரையர் ஸேவை செய்தது



ஸ்ரீ உ. வே. ஸாது ராமானுஜாசாரியர் ஸ்வாமி
(திருமலை திருப்பதி சின்ன ஜீயர், பெரிய ஜீயர் பட்டம் வகித்தவர்)

வித்வான் ஸ்ரீ உ. வே. V. A. கோபால ஐயங்கார் ஸ்வாமி (1970) (வானமாமலை ஜீயர் ஸ்வாமியாக எழுந்தருளி யிருப்பவர்)



ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஜீயர் சின்ன கலியன் ஸ்வாமிக்கு மரியாதை
(அத்யாபகர் பகுகுடும்பி வரதாசார் ஸ்வாமியுடன்) 1925



காஞ்சி ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி சதாபிஷேக வைபவத்தின் போது பூர்ண கும்ப வரவேற்பு (19

அத்யாபகர்கள்
வெளியூர்களில்
அன்வயித்தல்



திரு வஹீந்திரபுரத்தில் அன்வயித்தல். (1971)



சேராலாவில் வேத அத்யாபக ஸ்வாமிகள் அன்வயித்தல் (1953)



திருக்குறுங்குடி ஸந்நிதியில் அன்வயித்தல்.(1978)



காட்டுமன்னார்குடி சம்ப்ரோக்ஷணையில் அன்வயித்தல் (1968)



# ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானுர் உத்ஸவ வைபவமும் வேத அத்யாபக கோஷ்டிகளின் சிறப்பும்

டாக்டர் ஸ்ரீமான் உ. வே. K. A. மணவாள ஐயங்கார் M.A B.O.L. Ph.D.
(Vidwan, Siromani, Dip. in Hindu Religion)

எம்பெருமானுராகிற ஸ்வாமி இராமாநுஜருக்குத் திவ்விய தேசங்கள் தோறும் அர்ச்சா திருமேனிகள் உள்ளன. அவற்றுள் நான்கு திருமேனிகள் தனிப்பெருமை வாய்ந்தவை. முதலாவது ஆழ்வார் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு எழுந்தருளப் பண்ணிக் கொடுத்துப் பூர்வாசாரியர்களால் போற்றப்பட்டுத் திருவாய்மொழிப்பிள்ளையால் ஆழ்வார் திருநகரியில் ப்ரதிஷ்டை பண்ணப்பட்டுள்ள **பவிஷ்யதாசார்ய விக்ரஹம்.** இரண்டாவது திருநாராயணபுரத்தில் தம்மைப் பிரிந்து வாழமாட்டாத ப்ரிய சிஷ்யர்களான ஐம்பத்திருவர்க்காகத் தம்மாலேயே எழுந்தருளப் பண்ணிக்கொடுக்கப்பட்ட **தானுகந்த திருமேனி.** மூன்றுவது முதலியாண்டான் திருக்குமாரரான கந்தாடையாண்டான் உடையவரைப் பலகால் ப்ரார்த்தித்து அனுமதிபெற்று இராமாநுஜரடியார்களான தமர்கள் பலரையும் சேர்த்துக்கொண்டு ஒரு திருமேனியை ஏறியருளப்பண்ண, அதை உடையவர் கடாக்ஷித்து உகந்து அணைத்துக் கொண்டு தம் சக்தியைப் பிரதிஷ்டிப்பித்துக் கொடுக்கக் கந்தாடையாண்டானும் தமர்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு வந்து ஸ்வாமி ராமாநுஜருடைய அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரதிஷ்டை பண்ணிய **தமருகந்த திருமேனி.** இப்படித் தமருகந்த திருமேனி ப்ரதிஷ்டை செய்யப்பட்ட நாள் தைமாதத்துப் புஷ்ய நக்ஷத்திரமாகையாலே அந்தத் திருநாளைக் குரு புஷ்ய மஹோத்ஸவம் என்று இன்றும் ஸ்ரீபெரும்பூதூரில் தை மாதத்தில் திருவாதிரை தொடங்கிக் குரு புஷ்யம் முடிய மூன்று நாட்கள் கோலாகலமாகக் கொண்டாடி வருகிருர்கள்.

நான்காவதான திருமேனி திருவரங்கத்தில் உடையவர் அவதார கார்யம் முடிந்து திருநாட்டுக் கெழுந்தருளிய காலத்தில் திருவரங்கன் மற்றவர்களுடைய திருமேனிகளைப்போல் இவருடைய திருமேனியை வெளியே அனுப்பாமல் தன் சந்நிதிப்ரகாரத்திலேயே திருப்பள்ளி படுத்தச் செய்தான். திருப்பள்ளி படுத்திய இடத்தில் இன்றும் ஸேவிக்கப் பரம போக்கியமாயிருக்கும் திருமேனி **தானுன திருமேனியாகும்.**

மற்றும் அனந்தாழ்வாராலே திருமலையில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு அப்பனை திருவேங்கடமுடையானுக்கும் சங்காழி அளித்த வைபவத்தால் ஆசார்ய ஸ்தானத்திலே உபதேச முத்திரையோடு திருமலையில் ஸேவை ஸாதிக்கும் உடையவருடைய திருமேனிக்கும் தனி ஏற்றமுண்டு.

இந்த ஐந்து இடங்களிலும் எம்பெருமானுர்க்குத் திருவவதார மஹோத்ஸவங்கள் விசேஷமாக நடைபெறுகின்றன. ஆனுலும் செங்கயல்வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த ஸ்ரீபெரும்பூதூரில் நடப்பது போன்ற சீரும் சிறப்பும் வாய்ந்த உத்ஸவத்தை வேறு எங்கும் காண இயலாது. இவ்விழாவைக்கண்டு களிக்கப் பண்டித பாமர விபாகமின்றி எண்டிசையிலுமிருந்து வந்து குழுமும் கூட்டம் அந்த ஊரே கொள்ளாது.

வேதாத்யயன கோஷ்டியும் திவ்ய பிரபந்தஸேவா கால கோஷ்டியும் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த பெரிய வித்துவான்களுடைய கோஷ்டியும் ஆண்களும் பெண்களுமான பக்தர்களும் பாகவதர்களும் ஒருங்கே கடல்போலே திரண்டு விளங்கும் காட்சி நம்பெருமாளின் பெரிய திருநாள் விழாவையும் விஞ்சியதாயிருக்கும். அவதார காலத்திலே பல கோடி மக்களையும் திருத்தியருளிய எம்பெருமானுர் அர்ச்சையிலும் கோடிக்கணக்கான மக்களை ஆகர்ஷித்துத் தம் திருமேனியில் ஈடுபடுத்தி உய்விக்கும் நீர்மையை நினைக்கும்போது அறிவுடையோர்கள் கண்கள் அருவிசோரும்.

இனி, பல திவ்வியதேச கோஷ்டிகளினின்றும் சிற்சில அனுஷ்டானங்களில் வேறுபட்டுக்காணப்படும் ஸ்ரீபெரும்பூதூர் அத்யாபக கோஷ்டியின் பெருமையை இங்கே சுருக்கமாக விண்ணப்பித்துக் கொள்கிறேன். பெரும்பாலும் எல்லா திவ்விய தேசங்களிலும், திருமஞ்சனமாகித் திருமண்காப்பு ஸேவை தொடங்கும்போது ஸ்ரீ சைலேசேத்யாதி தனியன் தொடங்கித் திருப்பல்லாண்டுதான் ஸேவிப்பார்கள். ஆனல் ஸ்ரீ பெரும்பூதூரில் திருமண்காப்பு காலங்களில் தனியன் ஸேவித்துத் திருப்பாவையையே முதலில் ஸேவித்துப் பின்பு கிரமப்ராப்தமாக உத்ஸவாதிகளுக்குத் தகுந்தபடி உரிய திவ்விய பிரபந்தத்தை ஸேவிப்பார்கள். இதற்குக் காரணம் ஸ்வாமி எம்பெருமானுர் திருப்பாவையாகிற உயர்ந்த சாஸ்திரார்த்தத்தில் கொண்டிருந்த மிக்க ஈடுபாடேயாகும். மேலும் ஸ்வாமியின் திருநாமங்களுள் 'திருப்பாவை ஜீயர்' என்று கொண்டாடப்படும் பெருமைக்கும் இந்த அனுஷ்டானம் பொருந்துவதாக உள்ளது. இப்படிப்பட்ட ஒரு விலக்ஷண அனுஷ்டானம் இன்றைக்கும் ஸ்ரீ பெரும்பூதூரில் பின்பற்றப்பட்டு வருகிறது.

இதைத் தவிர மற்ருெரு தனிச் சிறப்பும் ஸ்ரீ பெரும்பூதூரில் அத்யயன உத்ஸவத்தில் காணப்படுகின்றது. அத்யயன உத்ஸவத்தில் (பகல் பத்து இராப் பத்து) இருபது நாட்களிலும் ஆழ்வார் கோஷ்டியில்தான் ஆண்டாளை ஸேவிக்கலாம். அதிலும் எம்பெருமானுராகிற உடையவருக்கு இடப்பக்கத்தில் முதலில் ஆண்டாள் எழுந்தருளியிருப்பள். பிறகு நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்கள் எழுந்தருளியிருப்பார்கள். மற்ற திவ்விய தேசங்களெங்கும் ஆண்டாளுக்குத் தனி ஸந்நிதியிருப்பதுபோல் இங்கும் உண்டு. ஆனல் எல்லா திவ்விய தேசங்களிலும் அனேகமாக மார்கழி நீராட்டம், திருவாடிப் பூரம் உத்ஸவ காலங்களில் பெருமாளோடுதான் எழுந்தருளியிருப்பள். அந்த வழக்கம் ஸ்ரீ பெரும்பூதூரிலும் உண்டு. ஆனல் திவ்விய பிரபந்தத்திற்கு என்றே திருவிழா நடக்கும் அத்யயன உத்ஸவத்தில் மாத்திரம் ஆழ்வார் கோஷ்டியில் உடையவருக்கு இடப்பக்கத்தில் ஆண்டாள் எழுந்தருளியிருப்பதற்குக் காரணம், ஸ்வாமி எம்பெருமானுர் திருமாலிருஞ்சோலையில், 'நாறு நறும்பொழில்' பாசுரத்தில் ஆண்டாள் பாரித்த மனோரதத்தை 'நூறுதடா வெண்ணெய்-அக்கார அடிசில்' ஸமர்ப்பித்து நிறைவேற்றிவிட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாளை மங்களாசாஸனம் செய்தபொழுது ஆண்டாள் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து எம்பெருமானுரை 'நம் கோயில் அண்ணரோ' என்று அழைத்து வரவேற்ற ஐதிஹ்யத்தைக் கொண்டே இவ்வாறு ஸ்வாமியை அண்ணுவாகவும் ஆண்டாளைத் தங்கையாகவும் கொண்டு ஸ்வாமிக்குப் பக்கத்தில் எழுந்தருளப் பண்ணியிருப்பர்கள் என்று பெரியோர் கூறுவர். இதற்குச் சேர ஆண்டாள் ஸந்நிதியிலிருந்து ஸ்வாமிக்கு பஹுமானம் ஆகும்போது "சுரும்பார் குழல் கோதை என்று தொடங்கி-நம்"

கோயில் அண்ணன் என்ன தேவா! எச்சரிகை" என்று துதிபாடுவதும் இன்று வரை சான்றாக உள்ளது. தவிர கட்டியம் ஸேவிக்கும்போதும் 'ஆண்டாள் தமக்கும் அண்ணலான பெருமான்' என்று சிறப்பித்துச் ஸேவிப்பதையும் மற்றொரு சான்றாகக் கொள்ளலாம். இப்படிப் பல வைபவங்களைக்கொண்ட ஸ்ரீபெரும்பூதூர் ஸ்வாமி ஸந்நிதியில் நடைபெற்றுவரும் கோஷ்டியின் சிறப்புக்களை இனி காண் போம்.

**சித்திரையில் செய்ய திருவாதிரை விழா:**

சித்திரை மாதத்துத் திருவாதிரையை முடிவாகக்கொண்டு பத்துநாட்கள் நடக்கும் இந்தத் திருவவதார உத்ஸவத் திற்காக ஸ்வாமி எம்பெருமானார் உத்ஸ வத்திற்கு முன்னாள் பிற்பகலில் நல்ல வேளையில் மஞ்சத்திற்கு எழுந்தருளுவர். எழுந்தருளியவுடன் பரம்பரை தர்மகர்த்தாவும் முதல் தீர்த்த மரியாதைக்குரிய வருமான ஸ்ரீமத் பரமஹம்ஸ எதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் உபகாரங்களோடு வந்து ஸேவித்து மங்களாசாஸனம் செய்து மரியாதை பெறுவர். பிறகு ஸ்ரீ எம்பார்ஜீயர் ஸ்வாமிகளும் மற்றும் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியார்கள் எல்லோரும் அருகே வந்து ஸேவிப்பர்கள். நிர்விக்னமாக உத்ஸவம் கண்டருளவேணும் என்று மங்களாசாஸனம் செய்வர்.

**உத்ஸவ கிரமங்கள்**

தினமும் பின்மாலை 3 மணிக்கு விச்வரூபமாகித் திருவாராதனம் கண்டருளித் திருப்பாவை ஸேவையாகி, கோஷ்டிக்குத் தீர்த்தமானவுடன் கோடைகால உபசாரார்த்தமாகத் திருமேனியின் பின்புறத்திலும் திருப்புஜங்களிலும் சந்தன காப்புச் சாத்தித் திருவாபரணங்களோடு திருமாலையும் சாத்தப்பெற்று அலங்காரமாக எழுந்தருளியிருக்கும் ஸ்வாமி, ஜீயரும் கோஷ்டியாரும் 'விஜயீபவ ஜய விஜயீபவ என்று முழக்கமிட கைப்பலகையில் ஸ்ரீவைஷ்ணவர்கள் எழுந்தருளப் பண்ணப் புறப்பாடு கண்டருளுவர், இப்படி ஸ்வாமி மிகவும் கம்பீரமாக வாத்யங்கள் முழங்க எழுந்தருளும் காட்சி "ஸ்ரீ ஆண்டாளுடைய" மாரிமலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து" என்னும் திருப்பாசுரத்தை நினைவுபடுத்தும்.

ஸ்வாமி படியிறங்கி நாலடி எழுந்தருளியவுடன் ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் ஸந்நிதிக்கு முன்பே ஊஞ்சல் உபசாரமாகிப் படியமுது செய்வர்: பின்பு கைத்தாளத்திற்கு ஏற்ப அசைந்து நடையிட்டு ஸ்ரீ ஆளவந்தார் திருக்கச்சிநம்பிவாசல்களிலே பலகையிட்டு எழுந்தருளி உபசாரமாகும். உடனே புறப்பட்டு ஸ்ரீ வேதாந்தாசார்யர் ஸந்நிதிக்குச் சற்றே முன்பாக எழுந்தருளும்போது ஸ்ரீமணவாள மாமுனிகள் அருளிச்செய்த எதிராஜவிம்சதி தொடங்கி 'ஜயவிஜயீபவ ஜயவிஜயீபவ' என்று ஒவ்வொரு ச்லோகத்தின் பின்பு ஸேவிக்கப் பெற்றுத் தங்க மண்டபத்துக்கு எழுந்தருளுவர். அங்குப் படியமுது செய்து மீண்டும் புறப்பட்டுத் தாயார் ஸந்நிதிக்கு நேரே படியிறக்கமாகி 32 கால் மண்டபத்தில் (ஸ்ரீரங்க நாராயணஜீயர் பட்டத்தை அலங்கரித்திருந்த ஸ்ரீ உ. வே. தேசூர் வாதாச்சார் ஸ்வாமி கட்டிய மண்டபம்) பத்தி உலாத்தலாகி ஸ்ரீ எதிராஜ நாதவல்லித் தாயாரிடமிருந்து பஹுமானம்பெற்று ஊஞ்சலாகிப் பெருநடையோடு ஸ்ரீ சக்கரவர்த்தித் திருமகன் ஸந்நிதிக் கெழுந்தருளி மங்களாசாஸனமாகும். அங்கு யதிராஜ விம்சதி ஸ்தோத்திர சாற்றுமாகும்.

பிறகு ஊஞ்சலாகி வையம் போற்றும் ஒய்யார நடை கண்டருளுவர். மூன்று முறை தாளங்களுக்கும் மேளங்களுக்கும்

ஏற்ப நடக்கும் இவ்வொய்யார நடையழகைக்காண ஆயிரக்கணக்கில் மக்கள் குழுமியிருப்பர். பின்பு கோபுர வாசலுக்கு எழுந்தருளி வாகன மண்டபம் சேர்ந்து உத்ஸவ முறைப்படி தங்கப் பல்லக்கு அல்லது வாகனங்களில் புறப்பாடு கண்டருளுவர். பெரியவீதிகளிலும் உள்வீதிகளிலும் இடையறாது வேத அத்யாபக கோஷ்டியினர் வேதங்களையும் திவ்விய பிரபந்த ஸேவைகளையும் ஸேவித்து வருவர். நூற்றுக்கால் மண்டபத்தில் இயல் சாற்றும் வேதச் சாற்றும் தினமும் இரண்டு வேளைகளிலும் நடைபெறும்.

### திருமஞ்சன அழகு

தமருகந்த திருமேனி ஸௌந்தர்யங்களையெல்லாம் கொள்ளை கொள்ளலாம்படி காஷாயமணிந்து சிகாயக்ஞோபவீதங்களோடும் த்ரிதண்டத்துடனும் சீரிய தோர் நிதியாய் ஸேவை ஸாதிக்கும் ஸ்வாமியின் ஸ்மிதமான முகாரவிந்தத்தையும் காருண்யமே வடிவெடுத்த திருக்கண்களையும் கோலநீள் கொடிமூக்கின் அழகையும் திவ்ய ஊர்த்துவ புண்டரத்தையும் கண்டுகளிக்கக் கோடிகண்களும் போதா. பெரிய திருமஞ்சனமாகி ஈரவாடையோடும் திருத்துழாயோடும் அடியார்களை வசிகரிக்கும் அழகை வருணிக்க ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனாலும் முடியாது. இப்படித் திருமஞ்சனம் கண்டருளி, கோஷ்டியாருக்கு ஈரவாடை தீர்த்தமானவுடன் திருமண்காப்பு வைபவம் நடக்கும். அர்ச்சகர், ஸ்வாமி மேல் மூச்சுக் காற்றுப் படாதபடி திருப்பரிவட்டத்தால் வாய் மூக்கு முதலியவைகளைக் கட்டி மறைத்துக் கொண்டு பரிசாரகர் கைவிளக்கு ஸமர்ப்பிக்க சாத்துப்படி ஸ்வாமி கண்ணாடி காட்ட அர்ச்சகர் திருமண்காப்பு ஸமர்ப்பிப்பர். அப்போது ஸ்வாமிக்கு உயர்ந்த திவ்யதேசங்களிலிருந்து வந்திருந்த பட்டுப் பவித்திரங்களும் ஸகல எம்பெருமான்களுடைய அபயஹஸ்தாதி பஹுமானங்களும் ஆகும். பிறகு ஆதிகேசவப்பெருமாளிடமிருந்து திருமாலை ப்ரஸாதமாக வரும். எல்லாம் ஸமர்ப்பித்தான பின்பு இனிப்பு அமுது செய்து கோஷ்டியாருக்கு விநியோகமாகும்.

திருமண்காப்பு ஸமர்ப்பிக்கும் போது ஸ்ரீ சைலேசேத்யாதி தனியன் ஸேவிக்கப்பட்டு உடனே திருப்பாவை ஸேவையாகும். பின்பு முதல் உத்ஸவம் முதலாயிரம் தொடங்கி ஐந்தாம் உத்ஸவம் முதலாயிரச் சாற்று ஆகும். இவ்விதம் பத்து நாட்களிலும் முதலாயிரம், பெரிய திருமொழி ஆகிய திவ்விய பிரபந்தங்கள் ஸேவிக்கப் பெற்று, வீதியில் இயற்பா ஸேவையாகித் தினமும் ராத்திரி வேளையில் கண்ணாடியறை மண்டபத்தில் திருவாய்மொழி ஸேவையாகி நாலாயிர திவ்ய பிரபந்தமும் குறைவின்றி முடிக்கப்பெறும்.

### நித்யவிபூதி லீலாவிபூதி

தினமும் மாலை திருப்பாவைசாற்று மறைக்குப் பின்பு கைப்பலகையில் மல்லிகை யரும்புகளாலான கொண்டையும் கிளிமாலையும் சாத்திக்கொண்டு 'பாண்டு' வாத்தியங்கள் முழங்க ஸ்வாமி பதினாறு கால் மண்டபத்தில் பத்தி உலாத்தலாகி நடுவில் ஊஞ்சலும் கண்டருளிப் பின்பு உயரமான நான்கு கால் மண்டபத்துக்கு எழுந்தருளுவர். அங்கு நித்யவிபூதி லீலா விபூதி மங்களாசாஸனம் நடக்கும். முதலில் தெற்கே திரும்பி பூலோக வைகுண்டமான திருவரங்கம் நோக்கி மங்களாசாஸனம் செய்வர். அப்போது ஸ்ரீமத் பரமஹம்ஸ யதிராஜ ஜீயர் சுவாமிகளும் அவருடைய சீடரும் "துளங்கு நீண்முடி" என்ற பாசுரத்தை உரக்க ஸேவித்து "உலகமளந்த பொன்னடியே அடைந்துய்ந்தேன்" என்று முடித்து மற்றும் பல ச்லோகங்களையும் புராண வசனங்களையும் ஸேவித்து முடித்து மரியாதை பெறுவர், பின்பு வடக்குதிசை நோக்கி மதுரை

துவாரகை அயோத்தி சாளக்கிராமம் பதிரிகாச்சிரமம் முதலிய வடநாட்டுத் திருப்பதிகளுக்கு மங்களாசாஸனமாகும். ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிச்செய்த ஆர்த்திப் பிரபந்தத்திலிருந்து "சாருவாக மத நீறுசெய்து சமணச் செடிக்கனல் கொளுத்தியே" என்று தொடங்கும் பாசுரத்தை ஸேவித்து "வாது செய்த எதிராசனார் பெருவீரர் நாளும் மிகவாழியே" என்று பலவாகிய நீச மதங்களை யெல்லாம் வாதில் வென்று வெற்றி வாகை சூடிய எதிராசரை ஜீயர் சுவாமிகள் வாழ்த்தி மங்களாசாஸனம் செய்வர். மேலும் ஸ்ரீமந் நாராயண பரத்வ ப்ரகாசகமான வேத உபநிஷத் வாக்கியங்களையும் புராண ச்லோகங்களையும் சொல்லிப் போற்றுவர். இவ்விதம் மாலையில் இரண்டு திசைகளிலும் கண்டருளும் நித்யவிபூதி லீலாவிபூதி வைபவத்தைத் தினமும் பல்லாயிரக்கணக்கில் பக்தர்கள் கண்டு மகிழ்வர்.

### கூரேச விஜயம்

சித்திரை விழாவில் 6 ஆம் திருநாள் கூரேச விஜயம் நடைபெறும். ஸ்ரீவைஷ்ணவதர்சனத்துக்காகத் தம்முடைய தர்சனத்தை (கண்களை) இழந்த தியாக சீலரான கூரத்தாழ்வானுடைய வைபவத்தை விளக்கும் வகையில் இவ்வுத்ஸவம் நடைபெறும். கூரத்தாழ்வான் காஷாயம்' திரிதண்டம் சாத்திக்கொண்டு பல்லக்கில் எழுந்தருள ஸ்வாமி எம்பெருமானார் வெள்ளையாடைகளைச் சாத்திக்கொண்டு குதிரை வாகனத்தில் பொழுது விடியுமுன்பே மேற்கேயுள்ள டில்லி தோட்டத்திற்கு எழுந்தருளுவது கண்ணீர் மலியக் கண்கொள்ளாக் காட்சியாகும், ஸ்ரீமந்நாராயணனே முழுமுதற் கடவுள்; அவனே மோக்ஷம் தரவல்லவன் என்பதை விளக்கும் வகையில் நடைபெறும் இவ்விழாவில் ஸ்ரீ எதிராஜ ஜீயர் சுவாமிகள் ஸ்வாமி திரு முன்பே கூரேச விஜயம் வாசித்துப் பின்பு கோஷ்டி தீர்த்தமாகி மாலை மரியாதைகளுடனும் சத்திரசாமரங்களுடனும் மடத்துக்கு எழுந்தருளிக் கைங்கர்யபரர்களைக் கௌரவிப்பர்.

### திருமந்திரார்த்தம்

ஆசாரியரான திருக்கோட்டியூர் நம்பிகளின் ஆணையையும்மீறி அனைத்துலகமும் வாழும்படி திருமந்திரார்த்தத்தை உபதேசித்த எம்பெருமானாருடைய வைபவம் விளங்கும்படி 8-ஆம் திருநாள் காலையில் நூற்றுக்கால் மண்டபத்தின் மேலே பெரிய மேடையில் சேஷவாகனத்தில் ஸ்வாமி எம்பெருமானார் எழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீ எதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் பரிவாரங்களோடு எழுந்தருளித் திருமாலை திருப்பரிவட்டம் போர்வையாகிப் பஞ்ச முத்திரை பெற்றுத் திருமந்திரார்த்தத்தை வாசித்துத் தீர்த்தம் கோஷ்டியாருக்கு ஆனவுடன் ஸ்வாமி காலை புறப்பாடு கண்டருளுவர். ஜீயர் ஸ்வாமியும் மரியாதை பெற்று மடத்துக்கு எழுந்தருளி வெற்றிலை பாக்கு விநியோகிப்பர்.

### ஏகாந்த ஸேவை

தினமும் கண்ணாடி அறை மண்டபத்தில் திருவாய்மொழி ஸேவையாகிக் கோஷ்டியாருக்குத் தீர்த்த ப்ரஸாதங்கள் ஆனவுடன் ஸ்வாமி கைப்பலகையில் நிதானமாக எழுந்தருளுவர். பலிபீடம் த்வஜஸ்தம்பம் ஆகிய இடங்களில் எழுந்தருளும்போது சங்கராதி மதங்களையும், மத்வ மதத்தையும் கண்டித்து விசிஷ்டாத்வைத மதத்தை நிர்த்தாரணம் பண்ணின வைபவங்களையொட்டிய எச்சரிகைகள் முழங்க அழகாக எழுந்தருளுவர். நல்ல நாதசுர இசையோடு படியேற்றம் கண்டருளுவர். ஒவ்வொரு படியிலும் தெற்கிலும் வடக்கிலும் திரும்பி கற்பூர ஹாரத்தி பெறுவது பரம போக்கியமாகும். படியேற்றமாகி மிகவும் வேகமாக உள்ளே யெழுந்தருளி

உட்பிரகாரத்தில் ஒவ்வொரு ஸந்நிதியிலும் பஹுமானமாகி மஞ்சத்திற்கு எழுந்தருளும் முன்பு ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளிடமிருந்து மாலை சடாரிபஹுமானமாகும். அப்போது புண்டரீகாக்ஷனை பெருமானுடைய திருக்கண்களின் அழகை வருணித்து எம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யத்தில் அருளிய வாசகங்களாலே பெருமாள் மங்களாசாஸனம் செய்யப் பெறுவர். பின்பு ஸ்வாமி ஸந்நிதிக்குள் மணிக்கதவு தாண்டியெழுந்தருளி அடியார்களை நோக்கி அருள் பொழியும்போது 'அப்பனுக்குச் சங்காழி அளித்துகந்திட்ட தேவா" என்று எச்சரிகை கூறி முடிப்பர். உடனே திருக்காப்பு சாத்தப்பெறும்.

**சாற்று மறை**

சித்திரையில் செய்ய திருவாதிரையில் ஸ்வாமி காலை தங்கப் பல்லக்கில் புறப்பாடு கண்டருளி வாகன மண்டபம் எழுந்தருளியவுடன் சாத்துப்படிகளைந்து, வெறும் திருமேனியுடன் அப்போது அவதரித்த திருக்குழந்தை போன்று கைப்பலகையில் அவதார ஸ்தலமான உள் மண்டபத்துக்கு எழுந்தருளிப் புஷ்ப ஊஞ்சலில் சங்கில் பாலமுது செய்வர்.

பின்பு ஸ்தபன மண்டபத்தில் உத்துங்கமான மேடையில் திருமஞ்சன வேதிகையிலெழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீயதிராஜ ஜீயர் சுவாமிகளால் தொடங்கப் பெற்று ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியார் பெரியமிடற்றோசையோடே எம்பெருமானார் திருவரங்கத்தில் பங்குனி உத்தரத் திருநாளிலே அருளிச்செய்த சரணாகதி கத்யம் ஸ்ரீரங்கத்யம் ஸ்ரீ வைகுண்டகத்யம் என்னும் கத்யத்ரயத்தையும் ஸேவிப்பர். அதன் பின் தயிர் பால் திருமஞ்சனமாகிச் சந்தனகாப்புத் திருமஞ்சனமும் கண்டருளி ஈரவாடை தீர்த்தமாகும் (எம்பெருமானார் சாத்திக்களைந்த காஷாயத்தாலேயே பிழியப்பட்டு எல்லோருக்கும் தீர்த்தமாகும்) பின் திருமண் காப்பு கண்டருளும் முன் திவ்விய தேசங்களின் பட்டுப் பவித்திரங்களைச் சாத்திக் கொள்வர். திருமண்காப்பு ஆனவுடன் ஸகல திவ்விய தேசத்து ப்ரஸாதங்களான அபய ஹஸ்தாதி சந்தனப் படிவங்களை ஸ்வாமி திருக்கண்களிலும் திருமுடியிலும் ஒத்தித் திருப்பக் குடையில் எழுந்தருளப் பண்ணுவர். அப்போது திருப்பாவை, யதிராஜ விம்சதி முதலியவைகள் ஸேவிக்கப்பெற்றுக் கண்ணுடியறைக்கு எழுந்தருளுவர். பின்பு ஸர்வாபரணங்களுடன் கைப்பலகையில் எழுந்தருளி இரவு சுமார் 12 மணிக்குமேல் பெரிய மங்களகிரியில் விசேஷித்துத் தயாரிக்கப்பெற்ற பெரிய சாத்துமறை மாலைகளைச் சாத்திக்கொண்டு இருமருங்கிலும் பச்சை வர்ணக் கிளிகளும் மாலையை அலங்கரிக்க 16 சாண் பெரிய குடைகளைகளோடு வெளிவீதி உள்வீதிப்ரதக்ஷிணங்களைக் கண்டருளி, மறுநாள் காலை அவதார ஸ்தல மண்டபத்துக்கு எழுந்தருளுவர். இரவு புறப்பாடு ஸ்வாமி மக்கள் வெள்ளத்தில் நீந்திச் செல்வது போலே இருக்கும். கோஷடியார்-ஸ்வாமிகள் இரவெல்லாம் கண்விழித்து ஸ்ரீராமாநுசநூற்றந்தாதியைச் ஸேவித்து வருவர்கள். பின்னே தொடர்ந்து வேதபாராயணமும் நடைபெறும்.

நூற்றுக்கால் மண்டபத்தில் திருவாய்மொழி பத்தாம் பத்து ஸேவையாகிச் சாற்று மறையாகும். அப்போது ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் மரியாதையும் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான ஸகல திவ்விய தேசங்களிலிருந்தும் வந்துள்ள மரியாதைகளும் ஸ்வாமிக்கு ஸமர்ப்பிக்கப்படும். உடனே ஸ்ரீ மணவாள மாமுனிகள் உபரத்தினமாலையில் ஸ்வாமி விஷயமாக அருளிச்செய்துள்ள திருநாள் பாட்டுக்களையும் மற்றும் வழக்கமான வாழி திருநாமங்களையும் இரண்டு முறை கோஷ்டியார் ஸேவித்து "ஸ்ரீமாந் இளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே" என்று வாழ்த்தி முடிப்பர்.

**கந்தபொடி உற்சவம்**

தீர்த்த ப்ரஸாதங்கள் விநியோகமானவுடன் எம்பெருமானருக்கு மங்களார்த்தமாகவும், கண்ணெச்சிலாகிய த்ருஷ்டி நீங்கவும் கந்தபொடி என்னும் வாசனைப் பொடியைத் திருமேனியில் ஸமர்ப்பித்தவுடன் மங்களகிரியிலேயே உள்மாடவீதி

ப்ரதக்ஷணமாக எழுந்தருளி, கோபுரவாயி லில் அனைத்து திவ்ய தேசங்களையும் மங் களாசாஸனம் செய்யும் கிரமத்தில் மும் முறை மண்டபப் பிரதக்ஷணமாகி உள்ளே படியேறி மணிக்கதவுக்குள் எழுந்தருளி நம்மாழ்வார் முதலியவர்களின் பஹு மானங்களைப் பெற்று ஆண்டாள் சந்நி திக்கு எழுந்தருளுவர். பின் பெரிய மாலை முதலியவைகளை யெல்லாம் களைந்து வெறுந் திருமேனியோடு விச்ராந்தியாக எழுந்தருளியிருப்பர். அன்று ஆண்டாள் ஸந்நிதிமுன்பே வேதச்சாற்று ஆகும். அந்த ஒருநாள் மட்டுமே வேதபாராயண கோஷ்டியாருக்கு முதலியாண்டான் ஸாதிக்கப்பெறும். திருத்தேர். சாற்று மறை, கந்தப்பொடி ஆகிய உத்ஸவங் களில் பல்லாயிரக்கணக்கில் பக்தர்கள் கூடி 'எதிராசா எதிராசா' என்று விளித்து வழிபடும் காட்சியைக் காணக்கண் பல கோடி வேண்டும். பின்பு ஸ்ரீ எதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் தர்மகர்த்தாக்கள் உபய காரர்கள் ஆகியவர்களுக்கு மரியாதையாகி உத்ஸவம் மங்களகரமாக முடிவுபெறும்.

**உத்ஸவங்களும் கோஷ்டி வைபவங்களும்**

சித்திரைத் திருவாதிரையில் ஸ்வாமி சாற்றுமறைக்குப்பின் அனந்தஸரஸ் என்னும் புண்ணிய தீர்த்தத்தில் தெப் போற்சவம் நடைபெறும். வைகாசியில் நம்மாழ்வார் உத்ஸவமும், முதல் திரு நக்ஷத்திரம் என்ற முறையில் திருவா திரைத் திருநாளில் சத கலச திருமஞ்சன மும் நடைபெறும். ஆனி ஆடியில் கோடை யுற்சவமும். வசந்த உற்சவமும் பெரியாழ் வார் உற்சவமும், ஸ்ரீ ஆண்டாள் உற்சவ மும் மிக விசேடமானவை. ஆவணியில் பவித்ரோத்ஸவம் மிகவும் வைதிக முறை யில் நடைபெறும். வேத பாராயணம் முழுவதும் நடக்கும்- திவ்விய பிரபந்த ஸேவைகளும் ஸ்ரீபாஷ்ய படனமும் மற் றும் ஸ்ரீ ராமாயணம் ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஸ்ரீ பாகவதம் போன்ற புனிதக்ரந்தங்கள் வாசிக்கப்பெறும். புரட்டாசியில் ஸ்ரீ எதி ராஜ நாதவல்லித்தாயார் நவராத்திரி உத் ஸவமும், ஐப்பசியில் முதலாழ்வார்கள், பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீமணவாள மா முனிகள் உத்ஸவங்களும் மிகவும் விசேட மாக நடைபெறும். ஸ்ரீமணவாள மாமுனி கள் உத்ஸவத்தின்போது நாலாயிர திவ்விய பிரபந்த ஸேவை மிகவும் நிதான மாகவும் பரம போக்யமாகவுமிருக்கும். கார்த்திகையில் திருமங்கையாழ்வார் உற் சவமும் திருப்பாணாழ்வார் சாற்றுமறையும் மிக விசேஷம் வாய்ந்தவை, மார்கழியில் ஆண்டாள் நீராட்ட உத்ஸவமும், தொண் டரடிப் பொடிகள் சாற்றுமறையும் தின மும் மணவிருந்துடன் சிறப்புவாய்ந்தவை. தை மாதத்தில் குரு புஷ்ய உத்ஸவமும் திருமழிசையாழ்வார் சாற்றுமறையும், கூரத்தாழ்வான் சாற்றுமறையும், மாசி யில் மகவுத்ஸவம், குலசேகரர் சாற்று மறையும் திருக்கச்சிநம்பிகள் உத்ஸவமும் முக்கியமானவை. பங்குனியில் பங்குனி உத்தர உத்ஸவமும் கத்யத்ரய கோஷ்டியும் மிகச் சிறப்பு வாய்ந்தவை. எம்பெருமா னார் தாயார் ஸந்நிதிக்குள்ளேயே திவ்விய தம்பதிகளின் சேர்த்தியிலே–திருவடி வாரங்களிலே விண்ணப்பிப்பதுபோல் எழுந்தருளியிருந்து கத்யத்ரயம் ஸேவிக் கப்பெறும். சித்திரையில் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் கண்டருளும் பிரம்மோற்சவம் மிகவும் சிறப்புவாய்ந்தது. இப்படியாக, நாளும் மலிவிழாவளமும் சிறக்கும் ஸ்ரீபெரும்பூதூரில் வேத அத்யாபக கோஷ்டியினர் சதுஸ் சாஸ்த்திர வித்வான் களாகவும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதிகாரி களாகவும் ரகஸ்ய க்ரந்தங்களில் நிஷ்ணு தர்களாகவும் விளங்கிக் கைங்கர்யங்களைச் செய்துவந்தார்கள் என்ற பெருமைமிக்க வாசகங்களோடு அடியேன் தலைக் கட்டுகிறேன்.

"வாழி எதிராசன் வாழி எதிராசன்
வாழி எதிராசனென வாழ்த்துவார்—
வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார்
தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை"

# அருளிச் செயலும் அருளாளனும்

ஜகதாசார்ய ஸிம்ஹாஸனுதிபதி மஹாமஹிமோபாத்யாய மஹாவித்வான்
ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

தேவப்பெருமாளையும் திவ்ய ப்ரபந்தத்தையும் பற்றி ஒரு வியாஸம் மலரில் வெளியிட வேணுமென்று விரும்பியிருந்தார், சபையின் காரியதரிசியான ஸ்ரீமான் உ. வே. C. பார்த்தசாரதி ஐயங்கார் ஸ்வாமி. தேவப் பெருமாளுடைய வைபவம் பற்றியும், அருளிச்செயல் கோஷ்டி வ்யவஹாரங்கள் பற்றியும் பல முறையும் பலபாஷைகளிலும் எழுதி வெளியிட்டிருக்கிறேன். அவற்றின் சாரமாக இக்கட்டுரையைக் கொண்மின்.

திருவல்லிக்கேணிக்கு ப்ரஹ்மோத்ஸவ ஸேவார்த்தமாகப் பலகால் (இளமைப் பருவத்தில்) விடைகொண்டதுண்டு. வேத திவ்ய ப்ரபந்த கோஷ்டியின் அநுபவம் "நெஞ்சுள்ளும் நீங்காவே." வேத வேதாந்த வர்த்தினீ ஸபைக்குப் பலகால் பரீக்ஷ்யனுகவும் பரீக்ஷகனுகவும் இருந்ததுண்டு. அக்காலத்தில் கைங்கர்ய நிரந்தரர்களாயிருந்த ஆவி. ந. ஸ்வாமி, வை.மு. கோ. ஸ்வாமி போன்ற பல பெரியோர்களுடன் நெருங்கிப்பழகியிருக்கிறேன். தற்போது ஜ்ஞான சில வயோவ்ருத்தராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமான் உ. வே. தேசூர் ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமி பரமஸ்நிக்தர்.

பலகாலம் அத்யாபக ஸபையின் காரியதரிசியாக விளங்கிய ஸ்ரீமான் உ.வே. காவல் கழனி அனந்தாசார்ய ஸ்வாமி அடியேனுக்குப் பரமாப்தர். அவருக்குப் பிறகு அப்பொறுப்பை ஏற்று மிகச் சிறந்த முறையில் அதை நிறைவேற்றி வரும் அடியேன் மூலம் பலமுறை வேதவேதாந்த வர்த்தினி பரிசுகள் வாங்கின ஸ்ரீமான் உ. வே. C. பார்த்தசாரதி ஐயங்கார் ஸ்வாமியும் மற்ற அங்கத்தினர்களும் பல ஆண்டுகள் தொண்டு பூண்ட முதமுண்ண அருளுமாறு அஞ்சுவையமுதம் அன்றளித்தானைத் திருவல்லிக்கேணி நின்றானை இறைஞ்சுகிறேன்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய வவர்களுரைத்தவைகள் தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பஞ்சாயுததரனை எம்பெருமான் பஞ்ச ப்ரகார விசிஷ்டனுக சாஸ்த்ரங்களில் கூறப்படுகிறுன். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்கள் என்னுமிவை பஞ்ச ப்ரகாரங்களென்று ப்ரஸித்தம். ப்ரமேயங்களில் தலையான எம்பெருமான் தன்னை இங்ஙனே ஐந்து வகையாக வகுத்துக் கொண்டது போல் ப்ரமாணங்களில் தலையான வேதமும் இவ்வைந்து ப்ரகாரங்களுக்குச் சேரத் தன்னையும் ஐந்தாக வகுத்துக் கொண்டது. இதனை விவரிப்போம்.

எம்பெருமான் நலமந்த மில்லதோர் நாடாம் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை பரத்வம் எனப்படும். திருப்

பாற்கடலில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகத் தானே வகுப்புண்டு நிற்கும் நிலை வ்யூஹம் எனப்படும். காகுத்தனாகவும், கண்ணனாகவும், கவின் மிகு குறளனாகவும்........நாட்டில் பிறந்து காத்தளித்த நிலை விபவாகாரத்துட்சேரும். கரந்தெங்கும் பரந்துளன் என்று யாவரினுள்ளும் யாவற்றினுள்ளும் பொலிந்து நிற்கும் நிலை அந்தர்யாமித்வம் எனப்படும். கோயில்களிலும் இல்லங்களிலும் தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவமாய் நிற்கும் நிலை அர்ச்சாவதாரம் எனப்படும்.

பரமனான பகவானுடைய பஞ்ச ப்ரகாரங்களைக் கண்டோம். இனி பரம ப்ரமாணமான பழமறையின் பஞ்ச ப்ரகாரங்களைக் காண்போம்.

யச்ச கிஞ்சித் ஜகத் யஸ்மிந்
த்ருச்யதே ச்ரூயதே பிவா
அந்தர் பஹிஸ்ச தத்ஸர்வம்
வ்யாப்ய நாராயண: ஸ்தித;

போன்றவற்றில் அந்தர்யாமித்வம் வேதத்தில் பேசப்பட்டுள்ளது.

பிதாபுத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ
நா வேதவிந் மநுதே தம் ப்ருஹந்தம்

போன்ற பல வேதவாக்கியங்கள் எம்பெருமான் பிறந்துலகம் காத்தளிப்பதைப் பேசுகின்றன. ஆயினும் வேதம் பரத்வத்தையே பரக்கப் பேசுவதென்பதை விசதவாக் சிகாமணிகளான ஸ்ரீ மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகொண்டு மூதலிப்போம். ஆசார்ய ஹ்ருதய வ்யாக்யானத்தில் (சூர்ணை 70) "...க்ஷயந்த மஸ்ய ரஜஸ: பராகே' 'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்' தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய: யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந், ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சித: இத்யாதிகளாலே பல விடங்களிலும் ஈச்வரனுடைய பராவஸ்த்தையை ப்ரதிபாதிக்கையாலே பரத்வத்திலே நோக்காய்" (2) அப்பெருமானுடைய வியூகநிலையில் குணம் முதலியவற்றைப் பேசுவதற்காக வேதமே ஸ்ரீ பாஞ்சராத்ரமாக வடிவெடுத்ததாகையாலே பகவானுடைய வ்யூஹாவஸ்தைக்குச் சேர்ந்த ப்ரமாணநிலை ஸ்ரீபாஞ்சராத்ரம் (3) எம்பெருமானுடைய அந்தர்யாமித்வமானது அக்னி, வருணன், இந்திரன் முதலான தேவதைகள் பக்கலுள்ளது. அவ்வோ தேவதைகளைக் குறித்து நாம்செய்யும் கருமங்கள் அந்தர்யாமியான எம்பெருமானைச் சேருகின்றன என்பது வேதாந்திகளின் கொள்கை. ஆகவே எம்பெருமானுடைய அந்தர்யாமித்வம் கர்மாநுஷ்டானத்திற்கு உரியதென்று தேறிற்று. அப்படிப்பட்ட கர்மகலாபங்களை விவரிக்க மநுஸ்மிருதி முதலான தரும சாஸ்த்ரங்களாக அந்த வேதமே அவதரித்த படியாலே, அந்தர்யாமித்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை ஸ்மிருதிகள். (4) அப்பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசுவதற்காக அந்தவேதமே ஸ்ரீராமாயணம், மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஆவிர்ப்பவித்ததாகையாலே எம்பெருமானுடைய விபவத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை இதிஹாஸ புராணங்கள். (5) விபவாவதாரங்களால் ரக்ஷித்தருளுமெம்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸுலபனாக அர்ச்சாவதாரமான வளவில் அதன் பலவகைப் பெருமையைப் பேசுவதற்காக அந்த வேதமே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக் குறுப்பாகத் தமிழ் வடிவாய்க்கொண்டு ஆழ்வார்கள் பக்கலிலே திருவவதரித்ததாகையாலே அர்ச்சைக்குச்சேர்ந்த ப்ரமாணநிலை – திவ்யப்ரபந்தம். ஸ்ரீ ராமாயண பாராயணம் செய்பவர்கள் யாவரும் "வேத வேத்யேபரே பும்ஸி ஜாதே தசர

தாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்து வருவது நிர்விவாதம். வேத ப்ரதிபாத்யனை பரம புருஷன் சக்ரவர்த்தித் திருமகனுய் அவதரித்த வளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீ வால்மீகி பகவானிடத்தில் நின்றும் ஸ்ரீ ராமாயணமாகத் திருவவதரித்த தென்று இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதைக்கொண்டு நம்முடைய பூர்வாசார்யர்கள் நிர்வஹித்த கட்டளையை நாம் கீழே விவரித்தோம். ப்ராமாணிகர்கள் இதில் ஸந்தேஹிக்கவோ ஆக்ஷேபிக்கவோ இடமில்லை. பராத்பரனை எம்பெருமானுடைய பரத்வப் பெருமைகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டுமானுல் வேதத்தைக்கொண்டு தெரிந்து கொள்ள வேண்டும். அப்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையில் விசேஷங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமானுல் பாஞ்சராத்ரத்தைக் கொண்டு தெரிந்து கொள்ளவேண்டும் விபவாவதார வ்ருத்தாந்தங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமானுல் இதிஹாச புராணங்களைக் கொண்டு தெரிந்து கொள்ளவேண்டும். அந்தர்யாம்யாராதநரூப கர்மகலாபங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமானுல் மநுஸ்ம்ருதி முதலிய தர்ம சாஸ்த்ரங்களைக்கொண்டு தெரிந்துகொள்ள வேண்டும். அர்ச்சாவதாரப் பெருமைகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமானுல் ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளாகிய திவ்யப்ரபந்தங்களைக்கொண்டே தெரிந்து கொள்ளவேண்டும். ஆகவே திவ்ய ப்ரபந்தங்கள் அர்ச்சாவதார வேதமென்று குலாவப்பட்டு வருகின்றன. உண்மையில், ராம கிருஷ்ணுதியவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களான நமக்குத் தஞ்சமான கோயில், திருமலை, பெருமாள் கோயில் முதலான திவ்ய தேசங்களின் [நூற்றெட்டுத் திருப்பதிகளின்] அநுபவம் நமக்குத் திவ்யப்ரபந்தங்களாலல்லது வேறென்றினுலும் ஸாத்யமன்றே. ஆழ்வார்களோ திவ்ய ஸூரிகள். அவர்கள் பாடின நூல்களோ திவ்யப்ரபந்தங்கள். அப்பிரபந்தங்களுக்கு விஷயமோ திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாக அமைந்த அமைப்பு அற்புதமென்பதை யாரறிவார்?

ஆழ்வார் திவ்ய ப்ரபந்தம் அருளிச் செய்யாதிருந்தால் விஷ்ணுவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்கள் அந்தோ ! அழகிழந்து கிடக்குமே என்று கம்பர் தமது சடகோபரந்தாதியில்,

''அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த
வரும்பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல்
நிலத்தேவர்களும்
தந்தம் விழாவுமழகுமென்னும்
தமிழார்கவியின்
பந்தம் விழாவொழுகும் குருகூர்
வந்தபண்ணவனே''

என்கிற செய்யுளினுல் கல்வெட்டாகக் கூறினுர்.

நூற்றுக்கணக்கான திவ்ய தேசங்கள் திகழ்ந்தாலும் "கோயில் திருமலை, பெருமாள் கோயில்" என்று மூன்று திவ்ய தேசங்கள் மிக முக்கியமாகக் குலாவப்படுகின்றன. ஸ்ரீரங்கம், திருவேங்கடமலை, ஸ்ரீகாஞ்சி என்னுமிவையே கோயில் திருமலை, பெருமாள் கோயில் என்று ஸம்ப்ரதாய முறையில் வழங்கப்படுகின்றன.

ஸகல திவ்யதேசங்களுக்குள்ளும் இம்மூன்று திவ்ய தேசங்களுக்கு விசேஷமான ஏற்றம் எதனுலுண்டாயிற்றென்னில்: நம்மாழ்வார் தம்முடைய முதற்

பிரபந்தமான திருவிருத்தத்தில் இம் மூன்று திவ்ய தேசங்களை மட்டுமே மங்களாசாஸனம் செய்தருளினபடியாலே யென்று பெரியோர் கூறுவர். "பொருநீர்த் திருவரங்கா வருளாய்" (28) என்று ஸ்ரீரங்கத்தையும், "பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே" (60) என்று திருவேங்கட மலையையும், 'விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது" (26) என்று ஸ்ரீகாஞ்சியையும் மங்களாசாஸனம் செய்திருப்பது காணத்தக்கது. இம்மூன்று திவ்ய தேசங்கள் தவிர வேறொரு திவ்ய தேசம் ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் போற்றப்பட்டிலாமையினாலே ஆழ்வார் திருவுள்ளத்தினால் இம்மூன்று திவ்ய தேசங்களுக்கே முக்கியத்துவம் கொள்ளப்பட்டதென்று கொண்டு ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்கள் இவற்றுக்கே தலைமைகொடுத்து வழங்கி வருகின்றார்கள்.

மேலே குறித்த மூன்று தலங்களுக்குள்ளும் ஸ்ரீகாஞ்சிபுரிக்கே மிகவும் ப்ராதான்யம் ப்ரஸித்தி பெற்றுள்ளது. அதற்கும் காரணம் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியே. நம்மாழ்வார் முதற்பிரபந்தத்தின் முதற்பாட்டிலும் சரமப்ரபந்தமான திருவாய்மொழியின் முதற்பாட்டிலும் தேவப்பெருமாளையேயன்றோபோற்றியுள்ளார். திருவிருத்தத்தின் முதற்பாட்டில் "இமையோர் தலைவா! மெய்ந்நின்று கேட்டருளாய்" என்றார். தேவாதிராஜன் என்னும் திருநாமத்தையே உட்கொண்டு, இமையோர் தலைவா! என்றது; திருவாய்மொழியின் முதற்பாட்டில் "அமரர்களதிபதி" யென்றதும் தேவப்பெருமாளைத் திருவுள்ளத்திற்கொண்டே: ப்ரணதார்த்திஹரனென்ற திருநாமத்தையுட்கொண்டு "துயரறு சுடரடி" யென்றுமருளிச் செய்தது. "ப்ரதம சதகேவீக்ஷ்ய வரதம்" என்று வேதாந்தவாசிரியர் வகுத்திருப்பதும் இந்த நிர்வாஹத்தை நிலைநாட்டித் தரும்.

இத்தலத்தைப் பெருமாள் கோயிலென்று வழங்கி வருவது கொண்டும் இதன் ப்ராதான்யத்தையுணரலாம். உலகில் எல்லா திவ்ய தேசங்களுமே பெருமாள் கோயிலாயிருக்க, இதனை மட்டும் பெருமாள்கோயிலென அநாதிகாலமாக வழங்கிவருவது குறிக்கொள்ளத்தக்கது. சாரீரக மீமாம்ஸை யென்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் பல பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. இதர பாஷ்யங்களை சங்கர பாஷ்யமென்றும் மத்வபாஷ்யமென்றும் நீலகண்ட பாஷ்யமென்றும் சங்கரகர்த்தாக்களின் பெயரையிட்டு வ்யவஹரித்து வருகிறார்கள்.

ஸ்வாமி யருளிச்செய்த பாஷ்யத்தை மாத்திரம் ராமாநுஜ பாஷ்யமென்னாமல் ஸ்ரீபாஷ்யமென்றே உலகமெல்லாம் வழங்கி வருகின்றது. அதுபோலவேயாம் இத்தலத்தை மாத்திரம் பெருமாள் கோயிலென்பது.

இத்தலத்தெம்பெருமானுக்குத் தேவராஜன், தேவாதிராஜன் போன்ற பரத்வஸூசகமான திருநாமங்கள் பல இருந்தாலும் அருளாளன், பேரருளாளன் போன்ற திருநாமங்களே நெஞ்சை நீர்ப்பண்டமாக்குவன. ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகட்குத் திவ்ய ப்ரபந்தம் என்கிற திருநாமத்துடன் 'அருளிச்செயல் என்கிற வ்யபதேசம் பூர்வாசார்யர்களின் காலத்தில் ஏற்பட்டது. அருளாளன் அருளிச்செயலில் ஈடுபட்டுள்ளவாற்றை இனி விவரிக்கப் புகுகின்றேன்.

திவ்யப்ரபந்த ஸேவை தொடங்கும் போது இங்கு முதலில் திருப்பல்லாண்டு ஸேவிப்பதன் காரணத்தைப் பெரியோர் ஸாதிக்கக் கேட்டதுண்டு. அதாவது நம்மாழ்வார் ஒரு பதிகத்திற்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகையில் "உருகா

நிற்பர் நீராயே'' என்றருளிச் செய்தார். இது ஆழ்வார்களனைவருடைய ஸ்ரீஸூக்தியின் பொதுவான தன்மையாகவே கொள்ளப்படும். இரும்புபோல் வலியநெஞ்சினரையும் உருக்கும் பெருமை வாய்ந்த அருளிச்செயல் ஸர்வபூத ஸுஹ்ருத்தான அருளாழியம்மானை உருக்காதோ? எனவே அப்பெருமான் பரிக்ரஹித்த அர்ச்சைத் திருமேனிக்குக் காப்பிடவே திருப்பல்லாண்டு தொடங்குவது என்பது ரஸவத்தரமானதே. கிருஷ்ணனுயிருந்து குழலூதுகையில் இசையில் மயங்கிய சேதநாசேதநங்களில் தானும் ஒருவனுயினன் என்பதை ஸ்ரீபராசரபட்டர் தமது ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் (உத்தரசதக. 72) "த்வம் தேஷு அந்யதமோ பபூவித'' என்று காட்டியருளுகிருர். குழலுக்குக் குழைந்தவன் குழலின் மலியச் சொன்ன குலவு தமிழ்ப் பாசுரங்களில் ஈடுபட்டுருகிநிற்பதில் வியப்பொன்றுமில்லை.

சாதாரணமாக திவ்ய தேசங்களில் காலைத் திருவாராதனத்தில் பெருமாள் திருப்பாவை திருச்செவி சாத்தியருளுவது வழக்கம். ஆனுல் தேவப்பெருமாள் அருளிச்செயல் முழுவதும் அடைவே (ப்ரதிதினமும் காலைத் திருவாராதனத்தில் ஐம்பது ஐம்பது பாசுரங்களாக) திருச்செவி சாத்தியருளுகிருர். இவ்வாருக வருஷத்தில் நான்கைந்து ஆவ்ருத்தி ப்ராப்தமாகும்.

ரஸிகாக்ரேஸரனை பேரருளாளன் அருளிச்செயல் கோஷ்டிக்கு ஏற்றம் அருளியுள்ளவிதத்தையும் சிறிது தெரிவிக்கிறேன். வைகாசி மாதத்தில் நடைபெறும் வஸந்தோத்ஸவத்தில் கோஷ்டிக்குச் சாத்துப்படியும் வஸந்தமும் விநியோகம் செய்வது வழக்கம். பெருமாள் ஸன்னிதி வீதி யெழுந்தருளித் திரும்புகையில் திருவடி ஸன்னிதி வாசலில் திவ்ய ப்ரபந்த கோஷ்டி தொடங்கும் போது தான் அவை விநியோகம் செய்வது நாளைக்கும் வழக்கம். வஸந்தோத்ஸவ தீர்த்தவாரியன்று மாடவீதிப் புறப்பாடாகையால் அருளிச்செயல் கோஷ்டி தொடக்கத்தையொட்டியே இவற்றின் விநியோகம் நிகழும். ஸ்ரீஜயந்திக்கு மறுநாள் கண்ணன் திருவீதிப் புறப்பாட்டில் எண்ணெய்க் காப்பு விநியோகமும் இயல் கோஷ்டி தொடங்கும் போதுதான் ஏற்பட்டுள்ளது.

மார்கழித் திங்களில் ஆண்டாள் உத்ஸவம் நாலு மாடவீதிப் புறப்பாடு பத்துநாளுண்டு. ஆண்டாள் தேவதேவ திவ்ய மஹிஷியான பெருமைக்குச் சேரப் பீதாம்பரத்தினுல் அவகுண்டனங் கொண்டே மாடவீதி எழுந்தருள்வது. ஸன்னிதி வீதியின் கோடியில் திருவடி ஸன்னிதி யருகில் இயல் கோஷ்டி தொடக்கம். இயல் தொடங்கும் போது "பிடாத்தை விழவிட்டு அத்யாபகர்கட்கு ஸர்வஸ்வதானம் செய்வது'' என்கிற முறையிலே இயலுக்கு மரியாதையாக அவகுண்டனத்தைக் களைந்துவிடுவது என்பது ஸேவிக்கலாகும்.

———

# அருளிச்செயலும் அண்ணங்கராரியரும்

ஸ்ரீ உ. வே. கு. அ. அக்காரக்கனி அனந்தாழ்வான்.

திருவல்லிக்கேணி நின்ற கருணையங் கடலை வணங்கி வழிபட்டுக் கருங்கடலைக் காணச் சென்றேன். கடற்கரையில் காலில் ஏதோ ஒன்று குத்தியது. குனிந்து எடுத்துப் பார்த்தேன். கிளிஞ்சல்தான் அது. உடனே மனக்கடலில் நினைவலைகள் பொங்கி எழுந்தன. "கடலே! விலைமதிப்பில்லாத இந்தக் கிளிஞ்சல் போன்றவற்றை ஆயிரக் கணக்காக அலைக்கைகளால் வீசியெறிகின்ருய். ஆனல் விலைமதிக்கவொண்ணுத வெண் முத்துக்களை உனக்குள்ளே... உள்ளே.... உள்ளே பாதுகாத்துப் போற்றிக் கொள்கிருய்!"—இவ்வாறு நினைக்கையில் மற்ருென்று நினைவில் நிழலாடியது. ஸத்ஸம்ப்ரதாயம் என்னும் ஸாகரம் வையமெல்லாம் விலையாகத் தக்கதொரு நன்முத்தைத் தனக்கென வைத்துக் கொள்ளாது ஸம்ஸாரத்துள்ளோர் பயன் கொள்ளுமாறு (ஏறக்குறைய ஒரு நூருண்டு) நல்கியிருந்தது. அன்ருே! ஆஹா! "இனம் இனத்தோடு சேரும்! என்பது மெய்யாகி விட்டதே! ஆம் ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி என்னும் அந்த முத்து "முத்தே மணி மாணிக்கமே" என்று போற்றப்பெறும் முகுந்தனுரைச் சேர்ந்து விட்டது.

ஸ்ரீ ஸ்வாமியை முத்தென்ரு குறிப்பிட்டேன்? வைரமாகக் கொள்ளுதல் மிகவும் ஏற்கும். பட்டை தீட்டப்பட்டு ஒளிரும் ஒரு பெருவைரம். ஸ்ரீ ஸ்வாமியின் ப்ரதிபை பஹுமுகமானதால் வைரம் என்றே ஸ்வாமியைக் கொள்ளலாம். உபய வேதபாரங்கதராகவும், உபயபாஷா ப்ரவீணராயும், ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ரஹஸ்ய க்ரந்த தத்வ்யாக்யான கூடார்த்த தத்வஜ்ஞராகவும், லேகந பாஷண சதுரராகவும், ஸகல பூர்வாசார்ய ஸமுதாயாவதார பூதராகவும், ஸௌசீல்ய நிதியாகவும்......எழுந்தருளியிருந்த நம் ஸ்வாமியின் பெருமை அடியேன் சிறிய ஞானத்தன் சொல்லுந் நீர்த்தன்று. ஆயினும் பெரியோர் தம் நிய மனத்தையே பற்ருசாகக் கொண்டு திவ்ய ப்ரபந்தத்தில் ஸ்வாமியின் ஈடுபாடு பற்றியும் அந்த அருளிச்செயல் தன்னை அவர்க்கு நன்கு காட்டிக் கொடுத்த திறம் பற்றியும் ஒரு சிறிது அநுபவித்து ஸத்தை பெறவெண்ணி எழுதத் தொடங்குகின்றேன்.

பெரிய திருமொழி (5.8.7) வியாக்கியானத்தில் "ஓதுவாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்கு முன் தந்த அந்தணனொருவன் என்றவிடத்து" முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்துப் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதிகரித்துப்போது போக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே" என்று வ்யாக்யான சக்ரவர்த்தியாகிய பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்தருள்கிருர். ஜகதாசார்யரான நம்பிள்ளைக்கு அப்பேராசிரியர் இட்டுள்ள அருமொழிகள் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநுதிபதியான நம் ஸ்வாமி திறத்தும் பொருந்துவனவே. ஆம்! ஆசார்யர்களுடைய காலத்தில், கண்ணனெம்பெருமானுக்கு உபாத்யாயராக விருந்த ஸாந்தீபினி முனிக்கு ஒப்புமை கூற நம்பிள்ளை தக்கவராயிருந்தார்; நம் காலத்தில் நம்பிள்ளைக்கு நம் ஸ்வாமி ஒப்பாகும் தகுதி பெறுகிருர்.

### வல்லரென வல்லவர்

திவ்ய ப்ரபந்தத்தை அதன் வியாக்கியானங்களுடன் வாசோ விதேயமாகக் கொண்டவர் நம் ஸ்வாமி. பாசுரத்தின் தொடக்கத்தைச் சொல்லி முழுமையாகச் சொல்லப் பணித்தாலும் திசைமுகனுகாது சொல்பவர் சிலரே. (திசைமுகன்-ஒன்றும் தோன்ருது திசை தோறும் நோக்குமவன் எனக் கொள்க) ஓர் உண்மை நிகழ்ச்சி அடியேன் கேட்டதுண்டு. புகழுநல்லொருவனென்கோவில் பரீக்ஷை. "பாலென்கோ சொல்லப்பா" என்கிருர் பரீக்ஷகர். விடையிறுக்கிருன் வித்யார்த்தி: "பாலெங்கோ நூலெங்கோ வாத்தியார் எங்கோ நான் எங்கோ"—கதைநம்மை எங்கோகொண்டு போய்விடும். போதும் இந்த வ்யதிரேக த்ருஷ்டாந்தம். நம் ஸ்வாமி கொடுத்த பரீக்ஷை அதி விலக்ஷணமானது. திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினி ஸபையில் பரீக்ஷை. பெரிய வித்வான்கள் பரீக்ஷகர்கள். நம் ஸ்வாமி இளைஞர். விடையிறுக்க இளையாத இளைஞர். எதிரே சூர்க்கத்தியை வைத்து விட்டு ப்ரதிக்ஞைசெய்கிருர். "உடனுக்குடன் விடையிறுக்கத் தவறினல் இக் கத்தியால் என் நாவை அறுத்துக்கொள்ளக் கடவேன்"—என்று கத்தி நாவைத் தீட்டிக் கொண்டது. ஆனல் கேள்விகளைத் தொடர்ந்து ஸ்வாமியின் விடைகள் வந்ததும்—பாவம் அந்தக் கத்தி—தன்னுடைய கூர்மையை ஸ்வாமியின் கூர்த்த மதிக்குக் காணிக்கையாக்கிவிட்டுத் தோல்விக்கு வெட்கி முகங் காட்டாதே மறைந்து கிடந்தது. இதுதான் ஸ்வாமியின் புத்திக்குத் தோற்ற கத்தியின் கதை. சில கேள்விகளைத்தான் பார்ப்போமே. "தொழுது முப்போதும்" என்னும் பாசுரத்தை எழுதிக் காட்டுமாறு பரீக்ஷகர் கூறவும், அவர்தம் கருத்தையுணர்ந்து அப்பாசுரத்தின் குறிப்பிட்ட பகுதியை மட்டும் எழுதிக் காட்டுகிருர் ஸ்வாமி. "பார்க்கடல் வண்ணனுக்கே" என்று. அருளிச்செயலில் பலவிடங்களில் பாற்கடல் வருகிறது. ("பாற்கடலும் வேங்கடமும்" முதலியன) க்ஷீரஸமுத்திரம் என்னும் பொருளில் அவ்வாறு வரும். ஆனல் ப்ரக்ருத பாசுரத்தில் "பார் சூழ்ந்த கடல் போலேயிருக்கிற வடிவை..." என்று வியாக்கியானமாதலால் 'பார்க்கடல்' என்று எழுதிக் காட்டினர் ஸ்வாமி. மற்ருெரு கேள்வி. எம்பெருமானுடைய கழல்களுக்குக் கமலத்தை ஆழ்வார்கள் ஒப்பாக்குவதுண்டு. ஆனல் கமலபந்து (கதிரவன்) உவமையாக்கப்பட்டிருக்கும் பாசுரத்தைக் கூற முடியுமா என்று பரீக்ஷகர் கேட்க ஸ்வாமி, "சொல்ல மாட்டேன்" என்ருர். "சொல்லமாட்டேன் அடியேன் உன் துளங்கு சோதித் திருப்பாதம், எல்லையில் சீர் இளஞாயிறு இரண்டுபோல் என்னுள்ளவா" (திருவாய்மொழி (8-5-5) என்ற பாசுரம் தக்க விடையன்ருே.

திருவல்லிக்கேணி வர்த்தினியில் நடந்த இவ்வகையான பரீக்ஷைகள் அநேகம், அநேகம்.

### கவியின் பொருள் தெரியப் பாரினில் சொன்னர்

திருவாய்மொழியை ஈன்ற முதல் தாய் சடகோபன்; வளர்த்த இதத் தாய் இராமாநுசன். மூன்ருவதாக ஒரு புதுத் தாயையும் பெற்றது திருவாய்மொழி. திருவாய்மொழி என்றது நாலாயிரத்துக்கும் உபலக்ஷணமாகக் கொள்க. அருளிச்செயலுக்குப் பெருமை சேர்த்தவர் நம் ஸ்வாமி. பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை முதலானேர்தம் வியாக்கியானங்கள் உள. ஆயினும் அவை பேரறிஞர்கட்கே நிலமாகக் கூடியன. எனவே அவற்றை ஆதாரமாகக் கொண்டு ஸ்வாமி நல்கிய "திவ்யார்த்த தீபிகை" என்னும்

உரையாவர்க்கும் ஒருங்கே இன்பம் பயக்குமதாய் விளங்குவது என்பது அறிஞர் கருத்து. "செந்தமிழ்ச் செல்வர்" என்னும் விருது இதுபற்றியே நம் ஸ்வாமியை வந்தடைந்தது. ஸ்வாமி அருளிச்செயலை அகிலமெங்கும் பரப்பியதை ஒரு கட்டளைக் கலித்துறைச் செய்யுளாக்கி விவரிக்க விழைகின்றேன்.

''பேரிதழ் நூறுடைப் பங்கயமாம்
திருவாய்மொழியைச்
சேரனம் நாத நல் யாமுனராகுவர்
செப்பிலதன்
சாரங்கொள் தாமது வாய் வண்டு
மாமுனி சால்புடையோன்
சீரிளஞாயிறண்ணங்கர்தாம்
காற்றென்றியம்புவனே''

(அண்ணங்கர் அருளந்தாதி 3)

இதன் கருத்துச் சுருக்கம் வருமாறு: தாமரை ''நூற்றிதழ்கொள் அரவிந்தம்' எனப்பெறும். திருவாய்மொழியும் நூறு பதிகங்களாகிய இதழ்களைக் கொண்டதொரு பங்கய நறுமலரே. அரவிந்தத்தை அன்னங்கள் அடைதல் இயல்பேயன்றோ! பரமஹம்ஸர்களான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் போன்றோரை அன்னமென்பர் ஆன்றோர். அவர்கள் திருவாய்மொழியில் ஈடுபட்டது அனைவரும் அறிந்ததே. தாமரை எனின் வண்டு சேராதோ என்னில் கேண்மின். விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் வண்டாகக் கொண்டாடப்படுவர். வரவரமுனி சதகத்தில் மேலும் வண்டு ஸாரத்தைக் கிரகிக்கும் தன்மைத்து. திருவாய்மொழியின் ஸாரமாகத் திருவாய்மொழி நூற்றந்தாதி அருளிச்செய்தமையால் வண்டென்னப் பொருத்தம் மிகவுண்டு. செங்கமலம் வெங்கதிரோற்கல்லால் அலராதே! இத் திருவாய்மொழித் தாமரையை அலர்த்திய அஞ்சுடரோன் யாவன் என்னில், "ராமாநுஜ திவாகரரே" என்னலாம். மலரை அலர்த்துவதாவது உரைகள் ஏற்பட்டு உட்பொருள் விளக்கம் ஏற்படுவதைக் குறிக்கும். "எதிராசர் பேரருளால்'' என்றது திருவாய்மொழியின் ஆறாயிரப்படி வியாக்கியானத்துக்கு மட்டுமன்றி மற்ற வியாக்கியானங்களுக்கும் பொருந்தும். இனி சுவாமியின் தொண்டைக் கேண்மினோ "திசிதிசி நிரபேக்ஷஸ்தாவகீநம் விவ்ருண்வந் பரிமளமயமந்யோ பாந்தவோ கந்தவாஹ:" என்றான் பண்டிதராஜன். மலரின் மணத்தைப் பரப்பும் காற்று. நம் ஸ்வாமியும் அருளிச்செயலின் புகழை வையகமெங்கும் பரப்பியுள்ளார். தமிழிலும் வடமொழியிலும் (வடமொழியில் பாதிக்குமேல்) ஸ்வாமி தாமே உரை வரைந்துள்ளார். இவ் விருமொழி யறியாத பலரும் உய்ய வேண்டி ஹிந்தி பாஷையில் ஸ்ரீமான் உ.வே. தி.அ. அக்காரக் கனி ஸம்பத் குமாராசாரியர் ஸ்வாமி மூலமும், தெலுங்கில் ஸ்ரீமான்கள் உ. வே. N. பக்தவத்ஸலமையங்கார் ஸ்வாமி, மற்றும் உ. வே. (Bapatla) திருவேங்கடராமாநுஜாசார்யஸ்வாமி மூலமும் மொழிபெயர்ப்பு செய்வித்து வெளியிட்டுள்ளார். ஸ்ரீமான் உ.வே. S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி (திருவாய்மொழி முழுமையாக) எழுதியுள்ளார். ஸ்வாமியின் தீபிகையை அடியொற்றியதே யது. எனவே உலகமெங்கும் அருளிச்செயல் மணம் கமழ வழி வகுத்தவர் நம் ஸ்வாமியாகிறார்.

திருப்பாவைக்குப் பலவுரைகள் தந்து உரைகடந்த புகழ் எய்தி நிற்பவர் நம் ஸ்வாமி. திருப்பாவைக்குத் தீபிகையுரை, திருப்பாவை நறுமணம், சங்கத் தமிழ் மாலை முப்பது, திருப்பாவை ஜீயர் என்று பற்பல வகைகளால் அமுது வழங்கியவர் ஸ்வாமி. இதைத்தான் ஸ்வாமி பற்றிய எழுகூற்றிருக்கையில்,

"... ... ... முக்கோல்
முனிவன் போற்றிடு நாலா யிரத்துள்
தனிச்சீர் பெற்றொளிர் ஐயாறதன்
பொருள்
ஐயந்திரிபற நானில முணர்கென
முந்நீர் வருநல லமுதாய்
வழங்கினை''

என்று குறிப்பிட்டேன் அடியேன். இவ்வாறு பல்வகையாலும் அருளிச்செயலைப் பரப்பியவர் ஸ்வாமி.

**கல்வி வாய்க்கப் பெற்றார்**

திருவாய்மொழி (1–10–11) "தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே" என்றவிடத்து ஈடு "இதுக்குப் பலமாகக் கைங்கர்யத்தை இதுதானே தரும்" என்று. தேவப்பெருமாளுக்கு அருளிச்செயல் கைங்கர்யம் செய்வதையே ஜீவாதாரமாகக்கொண்டவர் ஸ்வாமி. முற்ற மூத்துக் கோல் துணையாக்கொண்ட காலத்தும் தேவப்பெருமாள் இயல் கோஷ்டியை விட்டவரல்லர். வானுலகம் தெளிந்தே ஏறும் வரை வரம் தரும் மாமணி வண்ணனுக்குத் தொண்டுபூண்டமுதமுண்டவர். வெளியூர்களில் (உபந்யாஸ, உத்ஸவ ஸேவைகளை முன்னிட்டு) எழுந்தருளியிருப்பினும் தேவப்பெருமாள் புறப்பாடென்றால்—அது ஸாதாரண பஞ்சபர்வப் புறப்பாடாகத்தான் இருக்கட்டுமே—தவறாது கோஷ்டியை அலங்கரித்து மீண்டு எழுந்தருள்வர். திருப்பல்லாண்டு, திருமொழி தொடக்கங்கள் என்றால் ஒரு தனி உத்ஸாஹம். ஸ்வாமி "ஸ்ரீசைலேச தயாபாத்ரம்" என்று கம்பீரமாகத் தொடங்கும்போது அந்த ஸ்வர வைகரியில் - யாவரும் ஈடுபடுவர். வேணுகானத்தில் ஈடுபட்டவர்களுள் குழலூதிய கண்ணனும் ஒருவனாயிருந்தான் என்று ஸ்ரீபராசர பட்டர் ஸாதித்தது போல ஸ்ரீ ஸ்வாமி தாமும் அதில் ஈடுபட்டு விடுவார் எனின் அது மிகையாகாது. வெளியூர்க்குப் பெருமாள் எழுந்தருளும் சித்ரா பௌர்ணமி போன்ற உத்ஸவங்களிலும் தவறாது அந்வயித்தவர் நம் ஸ்வாமி. இவ்வாண்டும் தேவப்பெருமாளுடைய ப்ரஹ்மோத்ஸவத்தில் சிற்றஞ் சிறுகாலே நீராடிப் பன்னிரு திருநாமம் மின்னிட எழுந்தருளிக் கோஷ்டியை அலங்கரித்தது வாசாமகோசரம்.

**அசுரரை அவித்தார்; அமரை அளித்தார்.**

அருளிச் செயலுக்கு உரை எழுதுவதிலும் உபந்யாஸங்கள் செய்வதிலும் மட்டுமன்றி அவ்வப்போது உலகில் எழும் அசுரப் பூண்டு போன்ற தீய கருத்துக்களைக் களைந்தொழிப்பதிலும் முன்னிற்பவர் ஸ்வாமி. அருளிச்செயல் மீது காற்றடிக்கப் பொறாதவர் ஸ்வாமி எனலாம். சில நிகழ்ச்சிகளை மட்டும் குறிப்பிடுகின்றேன். மதுரையில் (நம்முடைய தென்மதுரையே தான்) பெருமாள் ஸன்னிதியில் ஸ்ரீஸ்வாமியின் உபந்யாஸம். சிறிய திருமடலை அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போருகிறார் ஸ்வாமி. "காரார் புரவியேழ் பூண்ட .........தொன்றுண்டே" என்பதை விவரிக்கிறார். சூரிய மண்டலத்தைப் பிளந்து கொண்டு சென்று பரமபதத்தையடைந்து அங்கு ஆராவமுதத்தை அநுபவிப்பதாகச் சொல்வது வெறுங்கட்டுக்கதை - என்பது விவரிக்கப்படுகிறது. அதாவது அந்வாருஹ்ய வாதம் என்பதை விவரிக்கிறார். அர்ச்சாவதாரத்தின் ஏற்றத்தை இசைக்கப் புகுந்த ஆழ்வார் மோக்ஷ புருஷார்த்தத்தைச் சிறிது தாழ்த்திப் பேசுகிறார் என்று இதனை உணரப்பெறாத சிலர் "ஆழ்வார்கள் மோக்ஷமில்லை என்று நாஸ்திகவாதம் செய்கிறார்கள்" என்று தூஷிக்கப் புக, உடனே அவர்களை வேதத்தில் "கோஹிதத் வேத யத்ய முஷ்மின் லோகே அஸ்தி வா ந வேதி" என்று (பரலோகம் என்று ஒன்று உண்டோ

இல்லையோ, யார் கண்டார்) வேதம் கோஷிப்பதை எடுத்துக் காட்டி அது போல்தான் ஆழ்வார் பாசுரமும் என்று நன்கு தெளிவாக்கினர். மற்றொன்றுங் கேண்மின். புன்மையர் தம் பொய்யுரைகளை மாய்க்கவே 'த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்' என்னும் நூலையும் ஸாதித்தார். இவை யெல்லாம் விரிப்பிற் பெருகும். 'வரலாற்றில் பிறந்த வைணவம்" என்னும் அபத்துச் சுவடிக்கும் உடனே தக்க மறுப்பு வெளியிட்டார்.

**உள்ளத்திருத்துவோம் பாடத்திருத்தமே :**

பாட பேதம் என்பது புகாத சாஸ்த்ரமே இல்லை எனலாம். அருளிச் செயலிலும் அபத்த பாடங்கள் மல்கிய காலத்து பொருத்தமான விளக்கங்களுடன் சுத்த பாடத்தைக் காட்டியருளியவர் நம்ஸ்வாமி. ஸ்வாமி பல தடவை ஸாதித்ததுண்டு— "நான் தேவப்பெருமாள் (புறப்பாடுகளில்) இயல் கோஷ்டியை இழந்தது கிடையாது. அக் கோஷ்டியை ஸேவித்ததும் கிடையாது" என்று. இதில் வியப்பொன்றுமில்லை. இது முரண்பாடன்று. கோஷ்டிக்குத் தாமதமாக வந்தால்தானே கோஷ்டியை ஸேவிக்க வேண்டி வரும். தொடக்கத்திற்கே தாம் எழுந்தருள்வதைச் சமத்காரமாக ஸ்வாமி குறிப்பிட்டவாறு இது, அது போல ஸ்வாமி கோஷ்டியை இழந்ததில்லை. கோஷ்டியில் ஸ்வாமிகளைக் (கண்ணால்) ஸேவித்ததுமில்லை" என்றும் சொல்லலாம் என்று அடியேன் கருதுவதுண்டு. எற்றுக்கெனின்

"கூட்டங்கள் தோறும் குருகைப்
பிரான் குணம் கூறுமன்பர்
ஈட்டங்கள் தோறும் இருக்கப் பெற்
றேம் இருந்தெம் முடைய
நாட்டங்கள் தோறும் புனல் வந்து
நாலப் பெற்றேம்"

என்று சடகோபரந்தாதியிற் கண்டபடியே ஆழ்வார்கள் ஈரச்சொல்லில் ஈடுபட்டுக் கண்ணீர் பெருக நிற்பதால் அக்கண்ணீர் கோஷ்டியை ஸேவிக்க விடாதன்றே ? அர்த்தாநுஸந்தானம் நிகழ்ந்து வந்ததால் தான் ஸ்வாமி பல பாடங்களைத் தெளிவாக்கமுடிந்தது என்பதற்காகவே இதைக் குறிப்பிடுகிறேன். ஸ்வாமி காட்டும் பாடத்திருத்தங்களுள் சிலவே கேண்மின். கண்ணன் ஆனையொன்றைக் காத்தான் மற்றோரானையை மாய்த்தான் நம் ஸ்வாமியோ ஒரு பாசுரத்தில் 'ச்' என்னும் எழுத்தைச் சேர்த்தார். (சேர்த்தார் என்பதும் தவறு. இருந்த பாடத்தை உணர்த்தினர் என்க). மற்றொரு பாசுரத்தில் தவறுதலாக ஓதப்பட்டுவந்த 'ச்' என்னும் எழுத்தை நீக்கினர். விளக்குகிறேன் இதனை. சிறிய திருமடலில் "செங்குறிஞ்சித்தாரார்" என்ற விடத்து ஸ்வாமியின் தீபிகை யுரையை எடுத்துக் காட்டுதும்,

"செங்குறிஞ்சித்தாரார்" என்ற வாக்கியத்தில் 'நறுமாலைச் சாத்தற்கு', என்று பாட மோதவேண்டியதை விட்டு 'நறுமாலை சாத்தற்கு' என்று தப்பான பாடம் ஓதி வந்தனராகையால் இவ்வாக்கியத்தின் பொருளை உள்ளபடி அறியாதொழிந்தனர் பலர். 'சாஸ்தா' என்ற வடசொல் 'சாத்தன்' எனத் திரிந்து கிடக்கிறதென்பதை யறியாமல் 'செங்குறிஞ்சித்தாரார் நறுமாலை சாத்திக் கொள்ளுகிறவனுக்கு' என்று கற்றறிந்த பல பெரியோர்களும் பொருள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அங்ஙனன்று; செங்குறிஞ்சித்தாரார் நறுமாலையையுடைய, (சாத்தற்கு) சாஸ்தா என்று ப்ரஸித்தமான தேவதாந்தரத்திற்கு என்று உண்மைப்பொருள் உணர்க. சாத்தன்+கு சாத்தற்கு, இவ்வகைப் பொருளில் மாலைச்சாத்தற்கு" என்றே பாட மோதவேண்டும். அமர கோசத்தில் ஸர்வஜ்ஞஸ்ஸுகதோ புத்த: என்று தொடங்கி, முநீந்த்ர: ஸ்ரீகநச்சாஸ்தா॥ என்று புத்த தேவதைக்குப் பெயர்கள் படிக்கப்பட்டுள்ளமை காண்க."

திருப்பாவையில் 'வையத்து வாழ்வீர்காள்' என்னும் இரண்டாம் பாசுரத்தில்

'தீக்குறளைச் சென்றோதோம்' என்று தவ ருன பாடத்தைப் பலரும் புகுத்தி, திருப் பாவைக்கு மாசு கற்பிக்கையில் 'குறளை' என்ற சொல்லை விளக்கி, 'குறளை சென் றோதோம்' என்ற பிழையற்ற பாடத்தை உணர்த்தியவர் ஸ்வாமி.

திருமாலையில் ஓரிடம் காட்டுதும். பெண்ணுலாஞ் சடையினனும்'' என்னும் (44) பாசுரத்தில் ''கண்ணறுவுன்னை'' என்றும் ''கண்ணுரு வுன்னை'' என்றும் பாடங்கள் வழங்கும், ஸ்வாமி இங்கு ஆராய்ச்சி செய்து ''கண்ணருய்'' என் பதே பிழையற்ற பாடம் என்று காட்டு கிருர். கருணையற்றவன் என்னும் பொருளதான கண்ணறை என்னும் சொல் விளியேற்கையில் 'கண்ணருய்' என்ருகும் என்று விவரணமும் விபுல மாகச் செய்துள்ளார்.

பெரிய திருமொழியில் ஓரிடம் காழிச் சீராம விண்ணகரப்பதிகத்தில் இரண் டாம் பாசுரத்தில் ஆராய்ச்சி செய்து, ஒரெழுத்தினல் நாலெழுத்து வீண்'' என்று கட்டுரையொன்று வரைந்துள்ளார். அதா வது ''தொல்குருகு சினையென்னச் சூழ்ந் தியங்க எங்கும்'' என்ற பாடம் வழங்கி வருகிறது. இங்கு 'எங்கும்' என்னும் பதம் இருக்க வேண்டுமாயின் 'சினையென்ன' என்றிருத்தல் கூடாது. 'சினையென' என்றே வரவேண்டும் என்று காட்டி யுள்ளார்.

ஸ்வாமி ஸேவிக்கும் அழகே தனி. ''சீதக் கடல் உள் அமுதன்ன தேவகி'' ''ஆவி உள் . . குளிர'' என்று முகந்து கொண்டருளிச்செய்வது வழக்கம்.

அன்ருட வாழ்விலும் அருளிச்செயல் மணம் சுவாமியின் திருவாக்கிலிருந்து வரும். வார்த்தைகள் எல்லாம் அருளிச் செயல் மயமாகவே இருக்கும். ஆப்தர் கட்கு எழுதுகையில் ''ஒரு நாள் காண வாராயே'' என்பது போன்ற அருளிச் செயல் சந்தைகள் காணப்படும், ''அருளிச் செயலில் டைமன் (Diamond) உண்டு, சொல் பார்க்கலாம்'' என்பர். ''துளங்கு நீண் முடி . . . தொண்டைமன்னவன்'' என்று கூறினல் பூரிப்பர் ஸ்வாமிக்கு மிக வும் ஆப்தராயிருந்த ஒரு ஸ்வாமி தம் தேவியாரை இழந்த போது ஸ்வாமி அவர்க்கு ஆறுதலாக ஒரே ஒரு வரி (அரு ளிச்செயல் சந்தை தான்) ஸாதித்தார். ''யாமுற்றதுற்ருயோ'' என்பது தான் அது.

இவ்வாறு அருளிச்செயலே ஊணுக உயர்மூச்சாக எழுந்தருளியிருந்த ஸ்வாமி திருநாமமும் கைங்கர்யங்களும் அருளிச் செயல் உள்ள வரை நிலைத்து நிற்கும் என்பதில் ஐய மொன்றில்லை.

''பாலப் பருவத் தேமுதலாப்
பார்புக ழேடு படர்ந்ததுவாம்
சாலப் பணியாந் தேன்கொண்டு
சகமே போற்ற மிளிர்ந்ததுவாம்
சீலப் பெருஞ்சீர் அண்ணங்கர்
சீமா னெனப்பேர் பெற்றதுவாம்
காலக் கனலில் கருகாமல்
கடிமா மலரெஞ் சென்னியதே.

(கருத்துச் சுருக்கம்) ஸ்ரீஸ்வாமியை ஒரு மலராக உருவகித்துள்ளேன் இதில். மலர் ஏடுகள் (இதழ்கள்) உடையதா யிருக்கும், ஸ்ரீஸ்வாமி ஸ்ரீராமாநுஜன், (தெலுங்கு, தமிழ்) வைதிக மனோஹரா (இந்தி, வடமொழி) ஆகிய இதழ்களை (சஞ்சிகைகளை) உடையராயிருந்தார், மல ரில் மது இருக்கும். ஸ்வாமியிடம் கைங் கர்யம் என்னும் தேன் திகழ்ந்தது. காலக் கனலில் கருகாத ஸ்ரீமான் உ. வே. அண் ணங்க ராசாரியர் ஸ்வாமி என்னும் மலர் அருளிச்செயல் என்னும் மணம் வீசுவ தாய் எமது சென்னிக்கு அணியாயிடுக.]

குறிப்பு:—ஆசார்யச்ரேஷ்டரை மலராக உருவகித்ததற்கேற்ப அம்மலரை அநுபவிக்கும் இக்கட்டுரை அறுகால சிறுவண்டாக (ஆறு பகுதிகளாக) அமைந்துள்ளது.

ஆழ்வார்கள் வாழி!
அருளிச்செயல் வாழி!!
தாழ்வாதுமில் குரவர்தாம் வாழி!!!

# கீதா ஸாரம்

ஸ்ரீ உ. வே. வாகமருதவர்ஷி வேளுக்குடி வரதாசாரியர்ஸ்வாமி

''ஸர்வோப நிஷதோ காவ: தோக்தா கோபால நந்தந:
பார்த்தோ வத்ஸ: ஸுதீ: போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத்''.

**சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்**
**ஆயன் துவரைக் கோனாய் நின்றமாயன் அன்று**
**ஓதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்**
**ஏதிலராம் மெய்ஞ்ஞானமில்.**

(1) (2) (3) தத்வவிவேக, (4) நித்யத்யா நித்யத்வ, (5) நியந்த்ருத்வ, (6) ஸௌலப்ய (7) ஸாம்ய, (8) (9) அஹங்கார இந்த்ரிய தோஷபல, (10) மந: ப்ராதந்ய, (11) கரண நியமந, (12) ஸுக்ருதி பேத, (13) தேவாஸுரவிபாக, (14) விபூதியோக, (15] விச்வரூப தர்சந, (16) ஸாங்க பக்தி, (17) (18) ப்ரபத்தித்வை வித்யாதிகளாலே அன்றோதிய கீதாஸமம்'' என்று கீதா ஸாரம் பற்பல ப்ரமாணங்களில் உக்தம்.

''அஜாயமாந: பஹுதா விஜாயதே'' என்கிறபடியே கர்ம வச்யனன்றிக்கே க்ருபா பரவசனாய் எம்பெருமான் பல படிகளாக அவதரிக்கிறான் என்பர் நம் பெரியோர். ''அஜாயமாந: பஹுதா'' என்று வேதமும், ''பஹூநிமே ஜந்மாநி'' என்று வேத்யனும், ''சன்மம் பல பல செய்து'' என்று வைதிகாக்ரேஸரரும், ''பகவதவதாரம் அஸங்க்யேயம்''என்றிறே அறுதியிட்டது.

''பகவதவதாரங்களுள், ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம் பரமப்ரதாநம். மண்மிசை யோநிகள் தோறும் பிறந்து ...... மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா உலகோர்க்கு ஒரு சேமவைப்பாக கீதா சாஸ்த்ரத்தை அருளிச்செய்தது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தின் தனிச் சிறப்பாகும்.

ஸ்ரீ ராமாவதாரத்தில் ''மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம்'', ஸக்ருதேவ ப்ரபந்நாய ...... அபயம் ததாமி'' இத்யாதியான சிற்சில வாக்யங்கள் காணக் கிடைத்தவை யாயினும், பரம வேதாந்த ஸாரார்த்த கர்ப்பிதமானதோர் திவ்ய சாஸ்த்ரமாம் கீதை அவதரித்தது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்திலே யிறே.

''பாரத: பஞ்சமோவேத: என்றும். ''மஹத்வாத் பாரவத்வாச்ச மஹா பாரதம் உச்யதே'' என்றும், ''கோஹ்யந்யோ புவி மைத்ரேய மஹா பாரத க்ருத்பவேத்'' என்றும், விஷய கௌரவத்தாலும், ப்ரபந்த கௌரவத்தாலும் வக்த்ரு கௌரவத்தாலும் பரம ப்ரமாணமாகும் பாரதம். ஸ்ரீவேதவ்யாச[பகவான் ஸம்ஸாரிகளுக்குக் கொடுத்த மஹா பாரதம் ஸம்ஸார விமோசகமிறே—வங்கக் கடல் கடைந்து அமரர்க்கு அமுதீந்தான் ஆயர் கொழுந்து. அது பந்தமாயிற்று.

''ஸம்யக் ந்யாய கலாபேந மஹதா
பாரதேந ச |
உபப்ருஹ்மித வேதாய நமோ வ்யாஸாய
விஷ்ணவே !!

என்று அருளிச்செய்தார் ச்ருத ப்ரகாசிகா பட்டர். இப்படியாயிறே ஸ்ரீமத் மஹா பாரத வைபவமிருப்பது. அம் மஹா பாரதமே, கோது, அஸாரம் என்னும்படி யாய்த்து ஸ்ரீ கீதை.

தக்ஷவேபௌருஷம் ஸூக்தம் தர்ம
சாஸ்த்ரேஷு மாருவம்|
பாரதே பகவத் கீதா புராணேஷு ச
வைஷ்ணவம்||

என்னக் கடவதிறே.

"கீதாஸு கீதா கர்த்தவ்யா கிமந்யு:
சாஸ்த்ர ஸங்க்ரஹ:
யாஸ்வயம் பத்மநாபஸ்ய முகபத்மாத்
விநிஸ் ஸ்ருதா"

என்றித்யாதிகளிலே கீதா வைபவம் ஸுப்ரஸித்தம்.

நாராயணுவதாரமான ஸ்ரீ வ்யாஸர் தம்முடைய சாரீரகத்தில் "ஸ்ம்ருதே: ச" (1·2·6) என்றும்- "ஸ்மரந்திச" (4.1.10) என்றும் கீதையை ஸம்வாதி ப்ரமாண மாகக் காட்டியருளினுரிறே.

"பார்த்தம் ப்ரபந்நம் உத்திச்ய சாஸ்த்ராவதரணம் க்ருதம்" என்று கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் அருளிச்செய்தார். "உத்திச்ய" என்றது "வ்யாஜீ க்ருத்ய" என்றபடி. "அறிவினுல் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறி யெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத் தொரு மூர்த்தி" என்ற ஆழ்வார் திரு வாக்கை யொற்றியிறே ஆளவந்தார் அருளிச்செய்தது. நாட்டார் அந்நபாநாதி கள் எல்லாவற்றுலும் கார்யம் உடைய ராய் இருப்பர். அறிவொன்றிலும் ஆய்த்து குறைவுபட அறியாதது. சாஸ்த்ரார்த்த ஜ்ஞாநம் இல்லாமையே யன்று—அறிவில் லாமையைப் பற்றிக் குறைவும் இன்றிக்கே இருக்கும் ஸம்ஸாரிகள் படும் அநர்த்தத் தைக் கண்டு ஆற்றுமையாலும் மிக்க க்ருபையாலுமிறே பகவான் கீதோபதேசம் பண்ணினுன், இவன் உபதேசத்துக்கு ஆச்ரித வ்யாமோஹமும் ஒரு காரண மாகும். "அர்ஜுனனுக்கு தூத்ய ஸாரத் யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்யுபதேசம் பண்ணிற்றும் இவனுக்காக" என்றிறே பிள்ளை உலகாரியன் திருவாக்கு. "மால் என்கோ" என்றருளிச் செய்தார் ஆழ்வார் அவ்விடத்து நம்பிள்ளை ஈட்டு திவ்ய ஸூக்திகள் அவச்யாநுஸந்தேயங்கள்.

"உபநிஷதம் உதாராம் உத்வமந்
பாண்டவார்த்தம்|
சரண முபகதாந் நஸ்த்ராயதே
சார்ங்கதந்வா||"

என்றிறே தாத்பர்ய சந்த்ரிகா."

ஆக அகல்ஞாலத்தவரறியக் கணக் கறு நலத்தனன் அந்தமில் ஆதி அம் பகவன் உபதேசித்தது கீதா சாஸ்த்ரம் என்றதாயிற்று.

இனி கீதா ப்ரமேய ஸாரத்தை அநு பவிப்போமாக. கீதையில் இது அஸாரம், இது ஸாரம் என்று கூறவியலுமா ? இயலாது. கீதையே ஸாரமாகும்.

ஸார சாஸ்த்ரமான கீதா சாஸ்த்ரத் தில் பலபல ஸாரார்த்தங்கள். அவற்றுள் ஒன்றினை அநுபவிப்போம் ஈங்கு.

"மாயன் அன்றோதிய வாக்கு" என்று திருமழிசைப் பிரானும்,

"வார்த்தை யறிபவர்" என்று நம்மாழ் வாரும்,

"திருவரங்கர் தாம் பணித்த மெய் மைப் பெருவார்த்தை" என்று ஆண்டா ளும், "தே து சரமம் வாக்யம் ஸ்மரந் ஸாரதே" என்று ஸ்ரீ பராசரபட்டரும் அநுபவித்த வார்த்தையை ஈங்கு அநு பவிப்போம். ஸாரோத்தாரம் என்றிறே இது தன்னைப் பெரியோர் அநுபவித்துள் ளார்கள்.

"ஸர்வதர்மாந் பர்த்யஜ்ய மாமேகம்
சரணம் வ்ரஜ|
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச||"

"தர்ம ஸம்ஸ்த்தாபநம் பண்ணப் பிறந்தவன், தானே இந்த ச்லோகத்தில்

ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று [என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் தானே" என்கிறது.

பரதத்துவமும் பரமப்ராப்யமுமான வன் ஸ்ரீமந் நாராயணனே என்று ஸகல வைதிக ஸம்மதம். ஆயினும் ஹிதாம் சத்திலிறே விசாரம் உள்ளது. கர்மம், ஜ்ஞானம், பக்தி, ப்ரபத்தி இத்யாதிகளாக தர்மாந்தரங்கள் பலவாறாக சாஸ்த்ர ஸம்ப்ரதாய ஸித்தங்களாகையால், அதிலேயிறே நிஷ்கர்ஷம் தேவைப்படுகிறது—அதனை நிஷ்கர்ஷிக்கும் ச்லோகமே யிது: சரமச்லோகம் எனப்படுகிறது. "இனி இதுக்கு அவ்வருகில்லையென்னும் படியான சரமோபாயத்தை யருளிச் செய்கையாலே சரமச்லோகம் என்று இதுக்குப் பேராயிருக்கிறது" என்றிறே ஸ்ரீமந் லோக தேசிகன் திவ்ய ஸூக்தி-ரஹஸ்யதம உபாயத்தை ச்ரோதவ்ய சேஷமில்லாதபடி உபதேச பர்யவஸாநமாக சரமச்லோகத்தால் ஸகல லோக ரக்ஷார்த்தமாக அருளிச்செய்கிறான் கீதாசார்யன் என்றபடி.

"யே ச வேதவிதோ விப்ரா: யே ச
அத்யாத்ம விதோ ஜநா :|
தேவ தந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம்
தர்மம் ஸநாதநம் ||"

என்றும்,

"ராமோ விக்ரஹவாந் தர்ம:"

என்றுமிறே ப்ரமாண கதி இருப்பது.

ஆழ்வார் திருவாய்மொழியில் ஸ்ரீமந் நாராயணனே உபாயம் என்று முதற் பத்தாலும், அவனே ப்ராப்யன் என்று இரண்டாம் பத்தாலும், அவன் திவ்ய மங்கள விசிஷ்டன் என்று மூன்றாம் பத்தாலும் அறுதியிட்டு மேலே நான்காம் பத்தான ஒரு பத்தாலே மற்றை ப்ராப்யங்கள் ப்ராப்யாபாஸங்கள், உண்மையாக ப்ராப்யங்கள் அல்ல என்று மூதலித்து, மேலிட்டு ஆறு பத்துக்களாலே, பகவானைத் தவிர மற்ற உபாயங்கள் ப்ராபகாபாஸங்களே என்று மூதலிக்கிறார்.

"ஷட் பி: ஸ்வாம் பஞ்சமாத்யை: அந்தரகதிதாம் ஆசசக்ஷே முநீந்த்ர:" என்ற ஸார வாக்யம் இங்கே அநுஸந்தேயம். "ஸர்வ தர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வ காமாஞ்ச ஸாக்ஷராந்| லோகவிக்ராந்த சரணௌ சரணம் தே வ்ரஜம் விபோ||" என்றிறே புராண நிஷ்கர்ஷம்.

கீதா சரம ஸ்லோகமே கீதாஸாரம். அவனே ஸாக்ஷாத் தர்மம் என்பதே கீதா ஸாரார்த்தம். "உன் தன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்றிறே ஆண்டாள் அறுதியிட்டது; "ஸாதநமும் சரண நெறியன்று உனக்கு" என்றிறே தூதனும் நாதனுமான ஸ்ரீ பார்த்தஸாரதி கீதாசார்யன் அர்ஜுநனுக் கறுதியிட்டான்.

சரமச்லோகத்தில் பூர்வார்த்தத்தில் "மாம்" என்று தன்னுடைய ஸௌலப்யத்தை வெளியிட்டான். இது ஆச்ரயண ஸௌகர்யாபாதகமான குணமாகும். "வ்ரஜ" என்று ஆச்ரயண விதாயகமிறே பூர்வார்த்தம்.

நம்மாழ்வாரும் "கடிசேர் துழாய் முடிக் கண்ணன் கழல்கள் நினைமினோ" (4.1 3) என்று "மாம்" இன் அர்த்தத்தை யருளிச்செய்தார்.

சரமச்லோகத்தில் உத்தரார்த்தத்தில் "அஹம்" என்று தன்னுடைய பரத்வத்தை வெளியிட்டான். இது ஆச்ரித கார்யாபாதகமான குணமாகும். "மோக்ஷயிஷ்யாமி" என்றிறே மேலில் வார்த்தை. அவனுக்கு எளிமையில்லையேல் நாம் அவனை ஆச்ரயிக்க முடியாது. அவனுக்கு மேன்மையில்லையேல் நம் கார்யம் அவன் செய்து தலைக்கட்டவியலாது. காருணி

கனிறே ஆச்ரயணீயன். சக்தனிறே கார்ய கரன். ஸமர்த்த காருணிக விஷயமிறே பகவத் விஷயம்.

தேர்மன்னர்க்காய் அன்று தேரூர்ந் தானாகிலும், தார்மன்னர் தங்கள் தலை மேலானிறே. இதிலே பராவர ஸப்தார்த்தம். "கையும் உழவு கோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், ஸேநா தூளி தூஸரித மான திருக்குழலும், தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரதி யான தான்" என்றான். "மாம்" என்று நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்த இவனை "சரணம்" என்றதே கொண்டு நித்ய ஸூரி பரிஷத்துக்கு ஆளாக்குகிற ஸர்வ சக்தித்வத்தை "அஹம்" என்று காட்டு கிறான் என்பர் நம்பெரியோர். "சேயன் மிகப் பெரியன் அணியன் சிறியன் மாயன்" என்றாரிறே திருமழிசைப்பிரா னும். "மாம்" என்ற ஸௌலப்யமும், "அஹம்" என்ற பரத்வமும் ஸ்ரீமத்வத் தாலே யாகிறது. ஆகையால் "மாம்" என்கிறவிடத்தில் ஸ்ரீமானே கூறப்பட் டான் என்பர் பெரியோர்.

"மாதவ: பக்தவத்ஸல:" என்றும், "ஸ்ரீகர்ப: பரமேச்வர:" என்றும் பரத்வ ஸௌலப்ய நிதாநம் ஸ்ரீமத்வம் என்று காட்டப்பட்டது.

"திருவுடையடிகள்", "திருமகளார் தனிக்கேள்வன்", "பெருமையுடைய பிரான்" என்று ஸ்வாமித்வமும், "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என் னன்பேயோ", "திருவின் மணாளன் என்னுடைச் சூழலுளானே" என்று ஸௌலப்யமும், அவற்றின் அடியான ஸ்ரிய: பதித்வமும் கூறப்பட்டதிறே—ஆக, சரமச்லோகத்தில் கூறப்பட்ட பகவான் ஸ்ரீமந் நாராயணனே — "ஏஷநாராயண: ஸ்ரீமான் ஆகதோ மதுராம் புரீம்" என்று நின்றதிறே.

உத்தரார்த்தத்தில் "அஹம்" என்று குறைவு ஒன்றுமில்லாத கோவிந்தனை தன்னையும் "த்வா" என்று அறிவு ஒன்று மில்லாத இவனையும் நிர்தேசித்தால் ஒரு மேட்டுக்கு ஒரு பள்ளம் நேராமிறே.

"குணதுங்கதயா தவ ரங்கபதே ப்ருச நிம் நமிமம் ஜநம் உந்நமய" என்றருளிச் செய்தார். ஸ்ரீ பராசரபட்டர் "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்ற பிறகு "மாம்" என்றான். அது தர்ம நிவர்த்தக வேஷம். ஸர்வ பாபேப்யோ மோக்ஷ யிஷ்யாமி" என்றதற்கு முன்னே "அஹம்" என்றான். இது அதர்ம நிவர்த்தகமான வேஷம். "மாம்" என்று இவன் கால் தன் தலையில் படும்படி கூறினான். "அஹம்" என்று தன் கால் அவன் தலையில் படும்படி கூறு கிறான்.

"மாம்" என்று கையும் உழவுகோலு மான வேஷம்.

"அஹம்" என்று கையும் திருவாழி யாலுமான வேஷம்.

"எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவானிறே. பாப நிவ்ருத்தி யான விரோதி நிவ்ருத்தி சொன்னது இஷ்ட ப்ராப்திக்கும் உபலக்ஷணம் என்று சொல்லுவார்கள். அநிஷ்டம் தொலைந்த வாறே ஸேது பங்தஸ்ரோத: ப்ரஸ்ருதி ந்யாயத்தாலே இஷ்ட ப்ராப்தி தன்னடை யாம் என்றும் கூறுவர். ப்ரபந்நனுக்கு பாப நிவ்ருத்தியில் பக்தனைக் காட்டிலும் ஏற்றம் உள்ளதாகையால் அது தனித் துக் கூறப்பட்டது என்றும் சொல்லுவர்- பக்தி ப்ராரப்த வ்யதிரிக்தாக நாசிநீ ப்ரபத்தி ப்ராரப்த ஸ்யாபி நாசிநீ என்றிறே சாஸ்த்ர நிஷ்கர்ஷமிருப்பது.

"முத்தனார் முகுந்தனார் புகுந்து நம் முள் மேவினார், எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே" என்று இவ் வளவில் கூறப்பட்டது.

இதுவே கீதாஸாரம்.

கீதாசார்யனும் ஸ்ரீ பார்த்தஸாரதி திரு உள்ளம் உகக்கும்படியாகத் தொன்று தொட்டு அருளிச்செயல் சேவை கோஷ் டியை நடத்திவரும் இந்த ஸபை வர்த்த தாம் அபிவர்த்ததாம் ஸ்ரீ பார்த்தஸாரதி நிரவதிக அநுக்ரஹ விசேஷணம் என்று மங்களாஸாஸனம் செய்து அமைகிறேன்.

# திருமங்கை மன்னனும் - மணவாள மாமுனிகளும்

ஸ்ரீ உ. வே. வித்வான் வித்யா பூஷணம் திருநாங்கூர் P. B. அண்ணங்கராசார்யு ஸ்வாமி.

எம்பெருமானார் இவ்வுலகில் நிலை நாட்டியருளிய விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தின் குரு பரம்பரையில் பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கை மன்னன் முடிவாக ஆழ்வார்கள் பதின்மரும், பெரிய பெருமாள் தொடங்கி மணவாள மாமுனிகள் வரை ஆசாரியர்கள் பதினெண்மரும் பிரசித்தமானவர்கள். திருமங்கை மன்னன் திருவரங்கம் திருப்பதியில் மணிமண்டப கோபுர ப்ராகாராதி கைங்கர்யங்களைச் செய்தார். நம்பெருமாள் திருவுள்ளமுகந்து திருமங்கை மன்னனை, "உமக்கு விருப்பமான வரம் கேளும் தருகிறோம்" என்றார். அவரும், "தேவரீர் மார்கசீர்ஷ (மார்கழி) சுக்ல ஏகாதசி முதல் பத்து தினங்கள் வேத விண்ணப்பத்தைத் திருச்செவி சாத்தியருளும்போது நம்மாழ்வாரின் திருவாய்மொழியையும் வேத ஸாம்யம் கொடுத்துத் திருச்செவி சாத்தியருளியும் ஆழ்வார் திருவடிதொழவும் அனுக்ரஹிக்கவேணும்" என்று வரம் வேண்டினார். நம்பெருமாளும் "அப்படியே ஆகுக" என்று வரம்கொடுத்தருளினார். திருமங்கை மன்னனும் திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரைத் திருவரங்கத்துக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து அவ்வேதாத்யயனத் திருநாளில் வேதத்தோடு கூடத் திருவாய்மொழியையும் விண்ணப்பிக்கச் செய்தும், திருநாள் முடிவில் ஆழ்வார் திருவடி தொழச் செய்தும், மீண்டும் ஆழ்வாரை ஸ்வஸ்தானத்தில் எழுந்தருளப் பண்ணி விட்டுத் திரும்பினார். நம் பெருமாளும் இத்திருநாளின் பூர்த்யங்கமாகத் தை அமாவாஸ்யை யன்று திருமஞ்சனக் காவேரியில் தாம் கொண்டருளின மஞ்சள் குளி உத்ஸவத்தைத் திருமங்கை மன்னனுக்குப் பகுமானமாக அளித்து, நீர் இவ்வுத்ஸவத்தைக் கொண்டாடிக் கொள்ளும்" என்று நியமித்தார். அவரும் மஹா பிரஸாதம் என்று அந்நியமனத்தை ஏற்று தம்மோடொத்த திருமாலடிபார்களுடன் இவ்வுத்ஸவத்தைக் கொண்டாடிக்கொண்டார். இப்போது அர்ச்சாவதாரத்திலும் பிரதி வருஷம் தை அமாவாஸ்யையின்று திருமங்கை மன்னன் தமது அவதார ஸ்தலத்திற்கு அருகில் உள்ள திருநாங்கூர் திவ்யதேசத்தில் பெருகும் காவேரியின் பிரிவான மணிகர்ணிகையில் இம்மஞ்சள் குளி உத்ஸவத்தைக் கொண்டாடிக்கொள்கிறார். அந்தச் சமயம் திருநாங்கூர் திவ்ய தேச எம்பெருமான்கள் பதினொருவரையும் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் செய்ய எம்பெருமான்கள் ஆழ்வாருக்குத் திருமாலை, பரிவட்டம், ஸ்ரீ சடாரி, பகுமானம் செய்கிறார்கள். பகுமானம் பெற்று மிகக் கம்பீரமாகச்சேவை சாதிக்கும் திருமங்கை மன்னனை மணவாள மாமுனிகள் சேவித்து அவ்வடிவழகில் ஈடுபட்டு வடிவழகு சூர்ணையை அனுசந்தித்துக் கொண்டு மங்களாசாஸனம் செய்தருளுகிறார். மாமுனிகள் அனுசந்தித்தருளிய திருமங்கை மன்னன் வடிவழகு சூர்ணையை அனுபவிப்போம் இப்போது:

**அணைத்தவேலும், தொழுதகையும் அழுந்திய திருநாமமும். ஓம் என்ற வாயும், உயர்ந்த மூக்கும், குளிர்ந்த முகமும், பரந்த விழியும், பதிந்த நெற்றியும், நெறித்த புருவமும், சுருண்ட குழலும், வடிந்த காதும், அசைந்த**

காது காப்பும், தாழ்ந்த செவியும், சரிந்த கழுத்தும், அகன்ற மார்பும், திரண்ட தோளும், நெளித்த முதுகும், குவித்த இடையும், அல்லிக் கயிறும், அழுந்திய சீராவும், தூக்கிய கருங் கோவையும், தொங்கலும், தனிமாலையும், தளிருமிளிருமாய் நிற்கிற நிலையும், சாத்திய திருத்தண்டையும், சதிரான வீரக்கழலும், தஞ்சமான தாளிணையும், குந்தியிட்ட கணைக் காலும், குளிரவைத்த திருவடி மலரும், வாய்த்த மணங்கொல்லையும், வயலாலி மணவாளனும், வாடினேன் வாடி வாழ்வித்தருளிய நீலக் கலிகன்றி மருவலர்தம் உடல் துணிய வாள்வீசும் பரகாலன் மங்கை மன்னனை வடிவே.

''உறை கழித்த வாளையொத்த விழிமடந்தை மாதர்மேல்
உருக வைத்த மனமொழித்து இவ்வுலகளந்த நம்பிமேல்
குறையை வைத்து மடலெடுத்த குறையலாளி திருமணங்
கொல்லை தன்னில் வழிபறித்த குற்றமற்ற செங்கையான்
மறையுரைத்த மந்திரத்தை மாலுரைக்க வவன்முனே
மடியொடுக்கி மனமடக்கி வாய்புதைத்து வொன்றலார்
கறைகுளித்த வேலணைத்து நின்றவிந்த நிலைமை என்
கண்ணை விட்ட கன்றிடாது கலியனுணை ஆணையே.

''காதும் சொரிமுத்தும், கையும், கதிர்வேலும்
தாது புனை தாளிணையும், தனிச்சிலம்பும்,—நீதிபுனை
தென்னாலி நாடன் திருவழகைப்போல
என்னுணை ஒப்பாரில்லையே.

வேலணைத்த மார்பும் விளங்கு திருவெட்டெழுத்தை
மாலுரைக்கத் தாழ்த்த வலச்செவியும்—தாளிணைத்
தண்டையும் வீரக்கழலும் தார்க்கலியன் நன்முகமும்
கண்டு களிக்கும் என் கண்''

இதுவோ திருவரசு, இதுவோ திருமணங்கொல்லை
இதுவோ எழிலாலி என்னுமூர்—இதுவோதான்
வெட்டும் கலியன் வெருட்டி நெடுமாலை
எட்டெழுத்தும் பறித்த விடம்.

ஸ்ரீமதாலி ஸ்ரீநகரீ நாதாய கலிவைரிணே।
சதுஷ் கவிப்ரதாநாய பரகாலாய மங்களம்॥

———



ஸ்ரீமான் உ. வே. C. நரஸிம்மாசாரியர், அட்வகேட் (1938—1943)



திரு. C. ராஜரத்னம் பிள்ளை (1938—39)





ஸ்ரீ உ. வே. T. A. வரதாசாரியர் (1953—1958)



நம் கோஷ்டியில் அன்வயித்த



திருமலை திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி (1982)





ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமி

அஷ்டகோத்ரம் வேத வாத்தியார் ஸ்ரீ உ. வே. வேங்கடாசாரியர் ஸ்வாமி (தம் சிஷ்யர்களுடன் உத்தமாச்ரமத்தில்) ஸ்ரீரங்கம் ராமசாமி ஐயங்காரைக் காணலாம்.





ஸ்ரீ உ. வே. திருமலை நல்லான் ராமகிருஷ்ண ஐயங்கார் இயற்றிய "ஆழ்வார்கள் கண்ட அல்லிக்கேணி" வெளியீட்டு விழா [வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸேவை ஸாதிப்பதைக் காணலாம]



திருவல்லிக்கேணியில் ஸ்ரீ உ. வே. முதலியாண்டான் ஸ்வாமிகள் (1960)

ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமிக்கு வரவேற்பு (1968)



கனமிகு மாநில ஆளுநர் பவநகர் மகாராஜாவுக்கு வரவேற்பு (தர்மகர்த்தா வெ. மு ரங்கநாதம் செட்டியாரும் கோஷ்டி செயலாளர் புரிசை கோபாலாசாரியரும் (1950)

முதல் அமைச்சர் காமராஜ் நாடார் அவர்களுக்கு வரவேற்பு (1956)



ஸ்ரீ உ. வே. T. A. வரதாசாரியா ஸ்வாமி ஷஷ்டி அப்தபூர்த்தி கோஷ்டி (1958)

உ. வே. காஞ்சி P. B. A. ஸ்வாமி காலக்ஷேபம் (தர்மகர்த்தா C. S. பார்த்தசாரதி ஐயங்காரையும், பழைய கார்யதரிசி காவல்கழனி அனந்தாசாரியரையும் காணலாம்). 1964



அமைச்சர் K. வேங்கடஸ்வாமி நாயுடு அவர்களுக்கு வரவேற்பு (1960)



மத்திய அரசு அமைச்சர் அவர்களுக்கு வரவேற்பு (1965)

முதல் அமைச்சர் M. பக்தவத்ஸலம் அவர்களுக்கு வரவேற்பு (1968)

கனமிகு மாநில ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி அவர்களுக்கு வரவேற்பு (1977)



ஸ்ரீமத் பரமஹம்ஸ த்ரிதண்டி ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமி (வைகுண்டவாசி)





ஸ்ரீமத் பரமஹம்ஸ த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமிக்கு வரவேற்பு.



ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமிக்கு வரவேற்பு (1982)



தேசூர் ஸ்ரீனிவாஸவரதாசாரியர் (அத்யாபகர்)
ஷஷ்டி அப்தபூர்த்திக்கு ஸந்நிதி மரியாதை



**ஸ்ரீ உ. வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி**
**ஸ்ரீனிவாஸ வரதாசாரியர் ஸ்வாமி** (அத்யாபகர்)

1933 முதல். தொடக்கதாரர் 1953. விச்வரூபம் ஸுப்ரபாதம் முதற்கொண்டு கைங்கர்யத்தை விடாது பழுத்த ஸேவை புரிபவர். உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதி இவைகளை நம் ஸந்நிதியில் கல்வெட்டில் பொறித்தவர். மிக்க ஆர்வத்துடனும் ஊக்கத்துடனும் அன்வயித்தவர் (சமீபத்தில் வைகுண்டவாசி ஆனார்)

தேசூர் ஸ்ரீனிவாஸவரதாசாரியர் (அத்யாபகர்) எழுதிய
தேவப் பெருமாளும்' ஸ்ரீ ராமாநுஜ தரிசனமும்.
என்ற நூல் வெளியீட்டு விழா
காஞ்சி P.B. அண்ணஸ்வாமி தலைமை வகித்தார்.



ஸ்ரீ உபயவேதாந்தவித்வான் ஒழப்பாக்கம் ரங்கஸ்வாமி ஐயங்கார் (பிரபல ஜோதிடர்) 1969 முதல் வேதபாராயணம் (சமீபத்தில் வைகுண்டவாசியானார்)



ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸம்ப்ரோக்ஷணத்தில் யாகசாலையில் வேதாத்யாபக கோஷ்டி (1975)





ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸம்ப்ரோக்ஷணத்தில் வேதபாராயண கோஷ்டி (1975)



1982 கோஷ்டியின் சிறப்புவிழா நடத்துவதை முன்னிட்டு அத்யாபகர்களின் பொதுக்கூட்டம்



ஸ்ரீ உ. வே. அநந்தேரி கந்தாடை
ஸ்ரீனிவாஸாசாரியர்
தலைவர் அத்யாபகம், வேதபாராயணம்
1934 முதல் தொடர்ந்து 50 வருடம்
மிக்க ஊக்கத்துடன் கைங்கர்யம் புரிபவர்.
தொடக்கதாரர் 1941.



ஸ்ரீ. உ. வே. அகரம் கிருஷ்ணமாசாரியர்
(காந்தூர் ஸ்வாமி)
1945 முதல் கைங்கர்யம். தொடக்கதாரர் 1965





ஸ்ரீ. உ. வே. குவளை ராமானுஜாசாரியர்,
அத்யாபகம், வேதபாராயணம்.
1945 முதல். தொடக்கதாரர் 1948.



ஸ்ரீ. உ. வே. A. ராமானுஜாசாரியர் ஸ்வாமி
(அத்திசோழமங்கலம்)
1962 முதல் (தொடக்கதாரர் 1974)



ஸ்ரீ. உ. வே. திருமலை, விஞ்சிமூர் நரஸிம்மாசாரியர்
1964 முதல் (தொடக்கதாரர் 1983)



ஸ்ரீ. உ. வே. V, R. வரதநாராயண ஐயங்கார்
1959 முதல் 1974 வரை: மறுபடி 1983.
தொடக்கதாரர் 1983.





ஸ்ரீ. உ. வே. கீழானூர் K. R. வேங்கடகிருஷ்ணன்
1945 முதல் வேதபாராயணம்



ஸ்ரீ. உ. வே. திருச்சேறை S. ராமானுஜாசாரியர்
(1969 முதல்)

# ஆழ்வார்களின் திவ்யதேசாநுபவம்

ஸ்ரீ உ, வே. திருநாங்கூர் P. B. K. ஸ்ரீநிவாஸாசாரியார்
(ஸ்ரீராமாநுஜ மிஷன் பொதுச்செயலாளர்)

பகவத் குணாநுபவத்தில் ஆழ்ந்து ஆழ்ந்து நிற்பவர்கள் ஆழ்வார்கள் எனப் படுவர். அவ்வநுபவத்தால் உண்டான ஆநந்தம் மிகுதியாக அதன் போக்குவீடாக பகவத் ப்ரேரணையால் அவர்கள் நினைவின்றியே இலக்கணம் பொருந்திய பாசுரங்களாக வெளிப்பட்டது. அப் பாசுரங்கள் திவ்யப்பிரபந்தம் என வழங் கப்படுகின்றன. ஆழ்வார்கள் திவ்ய ஸூரிகள் எனப்படுகின்றனர். அவர்களுள் சிலர் இருந்த இடத்திலிருந்தே யோக ஸாக்ஷாத்காரத்தால்—ஞானக் கண்ணால் அந்தந்த ஸ்தலங்களையும், அவற்றின் சிறப்புக்களையும் கண்டனுபவித்துப் பாசுரங்களை வெளிப்படுத்தினர். நம்மாழ்வார் அத்தகையர். சிலர் அந்தந்த ஸ்தலங்கள் தோறும் நேரில் சென்று அவற்றின் சிறப் புக்களை நேரில்கண்டு அனுபவித்துப் பாசுரங்களை வெளிப்படுத்தினர். திருமங்கை யாழ்வார் அத்தகையர். வடக்கே இமயத்தில் திருப்பிரிதி தொடங்கித் தெற்கே மஹேந்திர மலைச்சாரலில் திருக்குறுங்குடி வரை எண்பதுக்கும் மேற்பட்ட ஸ்தலங் களை நேரில் கண்டு அனுபவித்தார். அந்த ஸ்தலங்கள் எல்லாம் திவ்ய தேசங்கள் என வழங்கப்படுகின்றன. ஆகவே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு திவ்ய ஸூரிகள். திவ்யப் பரபந்தம், திவ்ய தேசம் என்ற மூன்று திவ்யம் முக்கியமானவை.

ஆழ்வார்களில் கடைசியான திரு மங்கையாழ்வார் தாம் நேரில் கண்ட அந்தந்தத் திவ்ய தேசங்களில் முந்திய ஆழ் வார்கள் பாடியருளிய திவ்யப் பிரபந்தங் களை, முக்கியமாக நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை, பகவத் கைங்கர்யம் புரிபவர்கள் கைங்கர்ய காலங்களில் அநு ஸந்தானம் செய்து வருவதைக் கண்டு அதை ஆங்காங்கே வெளிப்படையாகவும் குறிப்பாகவும் காட்டியுள்ளார். காஞ்சியில் அட்டபுயகர திவ்ய தேசப்பதிகத்தில் 'செந் தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர் கொல்' (பெரிய திருமொழி 2-8-2) என்று அருளியிருப்பதைக் காணலாம். அதேபோல் திருக்கோவலூரில் "ஆங்கரும் பிக் கண்ணீர் சோர்ந்தன்புகூரும் அடியவர் கட்காரமுத மானன்தன்னை" (பெ. தி. 2.10.4) என்றும், திருநறையூரில் "செம் மொழிவாய் நால்வேத வாணர் வாழும் திருநறையூர், மணிமாடச் செங்கண் மாலை" (பெ. தி. 6. 6.10) என்றும், தேரழுந் தூரில் "செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் திசைமுகனை யனையவர்கள் செம்மைமிக்க அந்தணர்தமாகுதியின் புகையார் செல்வத் தணியழுந்தூர் நின் றுகந்த அமரர்கோவே" (பெ. தி. 7.8.7) என்றும், சிறுபுலியூரில் குறிப்பாக "கிளி மடவார் செவ்வாய் மொழி பயிலும் சிறு புலியூர்" (பெ.தி. 7.9.8) என்றும், "கோவை யின் தமிழ் பாடுவார் குடமாடுவார்........ ஆறங்கம் வல்லவர் தொழும் தேவ தேவ பிரான் கோட்டி யூரானே" (பெ.தி.9.10.9.) என்றும் திவ்ய தேசங்களில்தான் கண் டநுபவித்த செந்தமிழ் திவ்ய ப்ரபந்தாநு ஸந்தானத்தை வெளிப்படுத்தியுள்ளார். பெரியாழ்வாரும் திருக்கோட்டியூர் பதிகத் தில், "குருந்தமொன் றொசித்தானொடும் சென்று கூடியாடி விழாச்செய்து திருந்து நான்மறையோர் இராப்பகல் ஏத்திவாழ்

திருக்கோட்டியூர்" (பெரியாழ் திரு. 4.4.7) என்று திருந்து நான்மறை என்று நம்மாழ்வாரின் நால்வேத ஸாரமான நாலு திவ்யப் பிரபந்தங்களைக் குறிப்பாக உணர்த்தியுள்ளார். குலசேகரப் பெருமானும், திருவரங்கப் பகுதியில், "அமரர்கள் தம் தலைவனை அந்தமிழின்பப் பாவினை அவ் வடமொழியைப் பற்றற்றுர்கள் பயிலரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் கோவினை" (பெருமாள் திரு. 1-4) என்று பற்றற்ற நான்மறையோரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் உபய வேதத்தையும் திருவரங்கத்தில் பயில்கின்றனர் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். உபய வேதம் என்பது வடமொழி நூல் வேதமும் நம்மாழ்வார் அருளிய செந்தமிழ் நால் வேதமும் மற்ற ஆழ்வார்கள் திவ்யப்ரபந்தமும் ஆகும். பகவத் ஆராதன காலத்தில் அலங்காராஸனத்தில் செவிக்கின்பம்தரும் இனிய ஸ்தோத்ரங்களால் எம்பெருமானை இன்புறச்செய்ய வேண்டும் என்பது பாஞ்சராத்ரம் முதலான ஆகமங்களில் கூறப்பட்டது. வேத விண்ணப்பத்தோடு ஆழ்வார்களின் திவ்ய ப்ரபந்தங்களையும் வேதார்த்த விவரணமாய் வேத துல்யமாய் வேதியர்கள் ஏற்று அநுசந்தித்தனர், இது பகவானுக்கு அபிமதமாய் அமைந்தது. மற்ற மதங்களில் தமிழ் ப்ரபந்தங்களுக்கு இந்தச் சிறப்பு ஏற்படவில்லை. வேதார்த்த விவரண மல்லாததோடு வேதவிருத்தார்த்தத்தைக்கூறு முகத்தால் வேதியர் அதைக் கைக்கொள்ளவில்லை. ஆகவே விஷ்ணு கோவில்களில் தான் "வேதபாராயணகாரர்கள், திவ்யப்ரபந்த அத்யாபகர்கள்" என்று கைங்கர்யம் புரிபவர்கள் உண்டாயினர். அவர்கள் வேத மோதும் அந்தணர்களாகவே அமைந்தனர். பகவதாராதன அங்கமாய் அதில் அடங்கினதாய் அதைச் செய்யத் தகுதியுடையவர்களான அந்தணர்களே திவ்ய ப்ரபந்தத்தையும் கோவில்களில் அநுஸந்திப்பது யுக்தம் என்று அனைவரும் அதை ஏற்றுக்கொண்டனர்.

திருமங்கையாழ்வார் மேலும் அந்தந்தத் திவ்ய தேசங்களை அநுபவிக்கும் போது அங்குத் தமக்கு முன்பு அநுபவித்த ஆழ்வார்களின் பாசுரங்களையும், சரித்திரங்களையும் தெரிந்து கருத்தில் கொண்டு தம் பாசுரங்களில் அவற்றைக் குறிப்பிட்டுள்ளார். திருவல்லிக்கேணிப் பதிகத்தில் "வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை" என்னும் இரண்டாம் பாசுரத்தில் "ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே". என்று பெண்களைப்பிரதானமாக வருணித்திருப்பது முந்திய ஆழ்வாரான பேயாழ்வார் "எந்தை ஒருவல்லித் தாமரையாள் ஒன்றிய சீர் மார்பன் திருவல்லிக்கேணியான்" என்று பிராட்டி பிராதான்யமான ஊர் திருவல்லிக்கேணி என்று அநுஸந்தித்திருப்பதைக் கருத்தில் கொண்டே. இதை இங்கு "ஒப்பவரில்லா.......... பிராட்டி பரிகரமேயாயிற்று, "நாநயோர் ஸித்யதே பரம்" என்று அவள் விபூதியும் ஈச்வர விபூதியுமாய் இரண்டு கூறுயிறே இருப்பது. மயிலாப்பூர் என்று படை வீட்டுக்குப் பேர்" என்ற பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் விளக்குகிறது.

திருவல்லிக்கேணியில் ஸ்ரீ பேயாழ்வாரால் திருத்திப் பணி கொள்ளப்பட்ட திருமழிசைப்பிரான் இங்குப் பார்த்தசாரதிக்கு முன்பே வந்து உலகமளந்த சிரமம் தீர, கடற்கரையில் குளிர்ந்த காற்று வீச ஐந்தலை வாய் நாகத்தணையில் சயனித்துக் கொண்டிருக்கும் வேதவல்லி நாயகனை மங்நாதன் எம்பெருமானை அனுசந்தித்தார், "தாளால் உலகமளந்த அசைவே கொல்" என்று. அதைக் கருத்தில் கொண்டு திருமங்கையாழ்வார் இரண்டாம் பாசுரத்தில் "வேதத்தை.......... என்னையாளுடையப்பனை" என்று அநுஸந்தித்தார். முதல் பாசுரத்தில் முன்னும் பின்னும் க்ருஷ்ணவதார சரிதமே அநு

பவிக்கப்படுகிறபடியால் "புரமெரி செய்த சிவனுறு துயர்களை தேவை"[8] என்பதுவும் க்ருஷ்ணவதார சரிதாமாகவே அநுபவிக்கலாம். வ்யாக்யானத்தில் பிதாவான பிரமனின் தலையையறுத்துப் பாதகியான ருத்ரனின் கையில் ஒட்டிக்கொண்ட அம் மண்டையோட்டில் இரந்துண்ணும் எளிவரவைத் தன் திருமார்பில் வாச நீரை அதில் அக்ஷயம் என்று வார்த்து அம் மண்டையோடு அவன் கையில் நின்றும் விழுந்து போகச்செய்து நீக்கின வ்ருத்தாந்தம் குறிக்கப்பட்டுள்ளது. க்ருஷ்ணவதாரத்தில் பாணாஸுர யுத்தத்தின் போது தன் அடியானை பாணனுக்கு உதவியாகப் பரிவாரத்துடன் வந்த ருத்ரன் பயந்து ஓடும்படியைக் கண்டு கண்ணன் இரக்கத்தோடு பாணனைக் காத்து ருத்ரனின் எளிவரவைப் போக்கினான். இந்தச் சரித்திரத்தைப் பேயாழ்வார் திருமழிசைப்பிரானுக்குக் குறிப்பிட்டு அவரைத் திருத்தினர். பேயாழ்வார் பாணாஸுர யுத்த சரிதத்தை "மகனொருவர்க் கல்லாத மாமேனி மாயன் ............வாணன் தோள் செற்றான் கழலே நிறைசெய்து என் நெஞ்சே நினை", என்று அநுஸந்தித்தார். அவரே "அலரெடுத்த உந்தியான் ஆன—பத்மநாபனை—எம்பெருமான், மாமலரான் வார் சடையான் என்றிவர்கட்கு எண்ணத் தானுமோ? இமை" சிறிது ஆராய்ந்து பார் என்று 97-வது பாசுரத்தில் அருளினர். இதைக் கைக்கொண்ட திருமழிசைப் பிரான் தமது திருச்சந்தவிருத்தப் பிரபந்தத்தில் "குந்தமோடு சூலம் வேல்கள்".... ........அந்த வந்த ஆகுலம் அமரரே அறிவரே"; வண்டுலாவு கோதை மாதர்...... வாணனுக்கு இரங்கினான் எம்மாயனே (70, 71வது பாசுரம்) என்றருளிச்செய்தார். ஆகவே "சிவனுறு துயர்களை தேவை" என்று திருமங்கையாழ்வார் பாணாஸுர யுத்தத்தின்போது சிவனுக்கு ஏற்பட்ட தோல்வியாலான துயரைப் போக்கினதைக் குறிப்பிட்டார் என்னலாம். விரிவிற்கஞ்சி இவ்வளவோடு அமைகிறேன்.

---

# அமுதமொழி

ஸ்ரீ உ. வே. அஷ்டகோத்ரம் V. S. வேங்கடாசாரியர்

ஆர்வசன பூஷணத்தின் ஆழ்பொருள் எல்லாம் அறிவார்? என்று உபதேச ரத்தினமாலையில் ஸ்வாமி மணவாள மாமுனிகள் கேட்டருளுகிறுர். இந்தப் பாசுரத்தின் உயிர்நிலை என்னவெனில், ஆர் அது சொல் நேரில் அனுட்டிப்பார்? என்பதாகும்.

ஸ்ரீ ராமாயணத்தில் முனிவர் கேட்ட முதல் கேள்வி, "கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச் சவீர்யவாந்?" என்பது. சந்திரனுக்குக் கலைகள் பதினாறுக, ஸ்ரீ ராமபிரான் திருக்குணங்கள் பதினாறுக முனிவர் கேட்டமையால் ஸ்ரீ ராமசந்திரன் என்ற திருநாமம் அமைந்தது. சத்யம், அன்பு, பரிவு மூன்றும் நிரம்பியுள்ளது ஸ்ரீ ராமாவதாரம். மேலே காட்டியுள்ள ஸ்ரீ வசநபூஷண சாஸ்திரம் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும், கிருபையும், சிரிப்பும், உகப்பும், உபகார ஸ்ம்ருதியும் நடக்க வேணும்" (சூர்ணை 365) என்று சொல்கிறது.

இந்த ஐந்து தத்வங்களும் ஸ்ரீ ராமபிரான் ஒருவரிடமே பூர்ணமாக நிரம்பியுள்ளன. சாமானியர்களும் விசேஷாதிகாரிகளும்கூட அனுஷ்டிக்க முடியாத இக்குணங்களை அனுஷ்டித்துக் காட்டியது சக்ரவர்த்தி திருமகன் ஒருவனுக்கே உள்ள ஏற்றமாகும். ஆனதுபற்றியே "படிகொண்ட கீர்த்தி இராமாயணமென்னும் பத்திவெள்ளம் குடிகொண்ட கோயில் இராமானுசன் குணம் கூறும்" என்று பாடிப் பரவுகிறுர், அமுதனுர்.

ஸ்ரீ ராமாவதாரத்தில் காகாஸுர விருத்தாந்தத்தில் பொறையைக் காணலாம். க்ருபையை "மரணாந்தாநிவைராணி" நிரூபிக்கும். இங்கே ஈடு வருமாறு: "இவன் ஜீவிக்கிறநாளிலே நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிவது காண் என்றிருந்தோம். அது அந்நாளில் பெற்றிலோம். நாம் தேடியிருந்தது முந்துறமுன்னம் ஸித்திக்கப்பெற்றோமிறே. நீர் இருய்த்திருந்தாராகில், குடல் துடக்குடையாரிலே ஒருவன் செய்யும் அத்தனையன்றோ நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய. நீர் பின்னைக்கடக்க நில்லீர் என்றுரிறே" வனவாஸத்தின் உகப்பை "இஹ வத்ஸ்யாமி ஸௌமித்ரே ஸார்த்த மேதேந பக்ஷிணு" என்றருளிச்செய்தார். "ஐயர்கோற் கீழே வர்த்திக்க வேண்டுமென்று பார்த்தோம். நடுவிலாய்ச்சிக்கு ப்ரியமில்லாமையாலே போந்தோம். இனி மேலுள்ள நாள் இவர் சிறகின் கீழே வர்த்திக்கப் பாராநின்றோமென்றுனிறே" (ஈடு 10.8.6). உபகார ஸ்மிருதிக்குரிய இடம், "அபிஷச்ய ச லங்காயாம்". மகுடாபிஷேகம் பெற்ற விபீஷணும்வான் மகிழ்ந்தான் என்று சொல்லாமல் பெருமாள் க்ருத க்ருத்யராளுர்" என்று ஏற்றம் பொலிய "விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்றுன் வால்மீகி முனிவனும். இப்படிப்பட்ட குணபூர்த்தியைச் சாமானியனும் அனுஷ்டிக்கத்தக்கது எனச் சொல்லும் ஸ்ரீவசநபூஷண சாஸ்த்ரம் எவ்வளவு அருமைப்பாடு உடையது என்பதை மணவாள மாமுனி ஏழு பாசுரங்களால் நமக்கு உணர்த்தியருளினுர். "ஆர் வசன பூடணத்தின் ஆழ்பொருள் எல்லாம் அறிவார்? ஆர் அது சொல் நேரில்

அனுட்டிப்பார்?—ஓர் ஒருவர் உண்டாகில் அத்தனை காண் உள்ளமே எல்லார்க்கும் அண்டாத தன்றே அது!"

"தெரித்து எழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது" என்ற அருளிச் செயலையொற்றி, "முன்னவராம் தம் குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம்' முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்'' என்று பணித்தருளினார் ஸ்வாமி இங்கு, குற்றம் செய்தவர்களிடத்தில் சிரிப்பு காட்டவேணும் என்று நடுவில்—அதாவது முன்னம் இரண்டு, பின் இரண்டு என்று விட்டுச் சிரிப்பை நடுவில் வைத்த அருமைப்பாட்டை மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியாலே அனுபவிக்கலாம். "அத்ருஷ்ட விரோதமாக இவர்களால் செய்யலாவதொன்றில்லையிறே. பாருஷ்யாதி முகத்தாலே க்யாதி லாபாதி த்ருஷ்ட விரோதங்களிறே இவர்களால் செய்யலாகாது. அப்படிச் சிலவற்றைச் செய்தால் தங்களோபாதி நாமும் இவற்றிலே சபலராய் இவற்றினுடைய ஹாநியைப்பற்ற நெஞ்சாறல் பட்டுத்தளர்வு தோமென்றிருந்தார்களன்றே. இவர்களின் அறிவிலித்தன மிருந்தபடி என் என்று பண்ணும் ஹஸம்" என்பதாகும்.

இன்று பல இடங்களிலும் நாலுபேர் கூடிக் கைங்கர்யம் (பணி) செய்பவர்களைப் பரிஹாஸம் செய்வதைக் காண்கிறோம். சிரிப்பதுவும், கேலி பேசுவதும் அவர்களது குணநலமாகக் காணக்கிடைக்கிறது. பொறுமையே இதற்குரிய காரணமாகும். "நான் உஷாராக இருந்தேனுல் எம்பெருமானும் என்னிடமிருந்து தப்பமுடியாது" என்கிருள் அஸூயை தேவி :

மயிதத்தா வதா நாயாம் விச்வதோஷாப ஹாரிணு நசக்ய மீச்வரேணுபி நிரவத்யே நவர்த்திதும்.
—ஸங்கல்ப ஸூர்யோதயம்.

இப்படிப்பட்ட உலகில் கைங்கர்யமே போதுபோக்காகக் கொண்டுள்ள வ்யக்தி விசேஷங்களைப் பல திவ்ய தேசங்களில் இன்னும் காணமுடிகிறது. அதற்கு ஸ்ரீவசந பூஷண சாஸ்த்ரமும் மாமுனிகளின் வார்த்தைகளுமே உயிர்நிலையாவன.

ஸ்ரீ வைஷ்ணவ உலகில் இவ்விருவரைக் குறிப்பிட்டுச்சொல்வான் ஏனென்னில், "அந்தகன் சிறுவன்" திருவல்லிக்கேணிப் பாசுரத்தில் (2-3-6) ஒரு ஐதிஹ்யம் சொல்லப்படுகிறது. ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராயிருக்க, தாரஸ்தனை க்ருஷ்ணன் பேரைச்சொல்லுவான் என் என்று எம்பாரைக் கேட்க, "அறிந்தோமே முன்பே சில ஸூரு ஸூரு கேட்டு வைத்தாள் போலே காணும். "மஹாத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவான் ஹரித்"என்று. இது தன்னைப் பட்டரைக்கேட்க, பர்த்தாவின் கையைப் பிடித்துப் போகாநின்றுலும் இடறிஞல்"அம்மே"என்னக்கடவது காண் என்றருளிச்செய்தார். அதாயிருக்கச் செய்தே விசைப்பு கிடந்தபடி காணும். இதே மாதிரி அத்தனை ஆசார்யர்களும் ஆழ்வார்களும் துணை நின்றுலும், ஸம்ஸாரிகளுக்கு ஊன்றுகோலாகச் சொல்லி உறுதியளிப்பது இவர்கள் இருவரே. இவர்களையே தஞ்சமாகப் பற்ற வேண்டும்.

இப்படி எழுதுவதற்குத் தக்க சான்றுகள் உள. விரிவுக்கு அஞ்சி ஒன்றிரண்டு எழுதி முடிக்கிறேன். ஸ்ரீவசனபூஷண சாஸ்திரத்தில் முதல்முதலில் எடுத்துச் சொன்ன சூர்ணையில் ஸ்ரீ ராமாயணமே எடுத்துக்காட்டாக உள்ளது. அசைவிலா வேத மதனுள் அனைத்தையும் வசன பூடண வழியாலருளிய மறையவர் சிகாமணி உலகாரியன்.

அதற்கு வ்யாக்யான மருளிய மணவாள மாமுனிகளின் மேதா விலாசம் கற்பனைக்கு எட்டாத மஹத்வமாகும். பல ஸம்ஹிதைகளிலிருந்தும், புராணங்களிலிருந்தும், அருமைப்பட்டிருக்கும் பல க்ரந்தங்களிலிருந்தும், ஸ்வாமி உதாஹரித்தருளியிருப்பது, நமது பாக்கியமாகும்.

இதோடுமட்டுமல்லாமல் ஸ்வாமி நாடெங்கும் சஞ்சரித்தது, திக்விஜயம் செய்தது, மடத்தில் தீயிட்டவரை க்ஷமா விஷயமாக்கியது, எறும்பியப்பா பெரிய ஜீயரை ஸேவித்து, ஸப்த கோத்ர வ்யவஸ்தை செய்தருளியது, திருவநத்தாழ்வானை ஸேவை ஸாதித்தது, ப்ரதிவாதி பயங்கர அண்ணா திருமலையில் திருமஞ்சனம் ஸமர்ப்பித்த சமயம் அழகிய மணவாள மாமுனி வைபவமான ஐதிஹ்யத்தை அருளிச்செய்தபடியாலே பரிமள த்ரவ்யங்கள் வாஸனை விஞ்சித், திருமஞ்சன வாஸனை அதிகமாயிருக்கிறபடி கண்டு அப்பன் உகந்தது, இப்படியாக அடுக்கிக் கொண்டே போகலாமாகிலும் ஆறு விஷயம் குறிப்பிட்டு, ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயை நிர்வஹித்த பாங்கினைக் காலமெல்லாம் உணரும்படியாய் இருப்பதைக் காணலாம் எனக் கட்டுரையை நிறைவு செய்கிறேன் அடியேன்.

"அநந்தரம் ஆசார்ய ஹ்ருதயத்திற்கு வ்யாக்யாநஞ் செய்தருளத் திருவுள்ளமாய் திருமேனியில் தௌர்ப்பல்யத்தையும் பாராமல் திருவணையிலே சாய்ந்தருளினபடியே திருக்கழுத்து நோவத்திருவெழுத்துச் சாத்தியருளும்படியைக் கந்தாடையண்ணன் கண்டு 'தேவரீர் இப்படி ஏதுக்காக ப்ரயாஸப்படுகிறீர்?'' என்ன, ஜீயரும் 'உம்முடைய புத்ர பௌத்ராதிகளுக்காகப் படுகிறேன்'' என்றருளிச்செய்தார். அக்காலத்திலே திருமலை நம்பி திருவம்சஸ்தரான ஏட்டூர் சிங்கராசார்யர் ஜீயருடைய அப்ரதிம ப்ரபாவத்தைக் கேட்டுப் பெருமையும் நாணும் தவிர்ந்து ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களை முன்னிட்டு அநந்யசரணராய் அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்க, அவரையும் க்ருபை செய்தருளி, அதன் மூலமாக வந்த த்ரவ்யத்தையும் ஆழ்வார் திருக்கோபுர கைங்கர்யத்துக்குத் திருநகரிக்குப் போகவிட்டருளினார். அக்கைங்கர்யம், சிறிது குறைவாக இருக்க, பின்பு ஜீயர் நாயனார் அக்குறையைத் தீர்த்தருளிச் சிகர பர்யந்தமாக நிறைவேற்றியருளினர். பின்பு போளிபாக்கம் நாயனாரை அழைப்பித்தருளி அவர் மூலமாக, ஸப்த கோத்ர நிபந்தனை செய்தருளி, அதில் இந்த ஏட்டூர் சிங்கராசார்யரையும் கூட்டிக் கொண்டு அஷ்ட கோத்ர ஸங்க்யையாயிரும் என்று நியமித்தருளினர்.

---

# அருளிச்செயல் ஏற்றம்

ஸ்ரீ உ. வே. அகரம் K. S. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயுல்வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஸம்ஸாரி சேதனர்கள் தங்களது ஆத்மாவை வெய்யிலில் உலர்த்தி' தேகத்தை நிழலில் வைத்துத் தங்கள் ஸ்வரூபத்தையும், ஈச்வர ஸ்வரூபத்தையும் மறந்து, ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து, துக்கமான ஸம்ஸாரக் கடலிலே விழுந்து நோவுபட, பரம காருணிகனான ஸர்வேச்வரன், இவர்களை ஸஜாதீயரைக் கொண்டு திருத்த வேண்டுமென்று நினைத்து, வேத வேதாந்தங்களின் உட்கருத்துக்களைத் திராவிட பாஷையில் பாசுரமடியாக வெளியிடும்படி பராங்குச பரகாலாதி ஆழ்வார்களைத் தன்னிர்ஹேதுக க்ருபையாலே அவதரிப்பித்து மயர்வறமதி நலம் அருளினன். இவர்களுள் அக்ரேஸரரானவர் நம்மாழ்வார். இவருக்கு வேதம் தமிழ் செய்த மாறன் என்கிற பெயரும் உண்டு. "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ, வையமோ நும் நிலையிடம்", என்கிறபடியே இவர் அவ்வுலகத்தவரோ, இவ்வுலகத்தவரோ என்று சங்கிக்கும்படியாயிருக்கிறது இவரது வைபவம். இவர் நாதமுனிகளுக்கு நாலாயிரமும் தன் நிர்ஹேதுக க்ருபையாலே ப்ரகாசிப்பித்தருளினர்.

பகவத் ஸ்வரூப ரூப விபூதிகளை விசத, விசததர, விசததமமாக அனுபவித்து, அங்கே உள்ளடங்காமல் வழிந்து புறப்பட்ட சொல்லாயிற்று இப்பிரபந்தங்கள். தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன் மாலைகள் என்றன்றோ இவைகளுக்குச் சிறப்பு! இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்களும், மற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்த ப்ரபந்தங்களும் உட்கருத்துக்களில் ஐககண்ட்யம் பெற்றுள்ளன.

வைதிக மதத்திற்கு வேத வேதாந்தங்கள், வேத ஸாரபூதமான பகவத்கீதை, ப்ரம்மஸூத்ரம், இவை முக்கிய ப்ரமாணங்கள். ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள், இவைகளுக்கு உபப்ரம்ஹணங்கள். இவைகளின் உட்கருத்துக்களை அனுஸரித்தே அருளிச்செயல்கள் அவதரித்துள்ளன. அவையாவன : தத்வஹித புருஷார்த்தங்கள்

அசேஷசித்—அசித்வஸ்து சேஷிநே
சேஷ சாயிநே
நிர்மலாநந்த கல்யாணநிதயே
விஷ்ணவே நம.
(வேதாந்த ஸங்க்ரஹம்)

சித்வஸ்துக்களென்ன, அசித்வஸ்துக்களென்ன இவைகளுக்கெல்லாம் சேஷியாயிருப்பவன். சேஷசாயியாயிருக்கிறான். அவன் நிர்மலன், அனந்தன், அளவற்ற கல்யாண குணங்களுடையவன், அவன் தான் பரதேவதை. அவன் பேயர் விஷ்ணு. (அவனுக்கு நாராயணன், பகவான், புருஷோத்தமன் என்கிற பெயர்களுமுண்டு). அவனைப் பக்தியால் பெறலாம். அவனே நமக்கு உபாயம், உபேயம், அவனை நமஸ்கரிக்கிறேன்.

ஜீவாத்மா சேஷபூதன், பரமாத்மா சேஷி, கைங்கர்யம் புருஷார்த்தம், எம்பெருமான் க்ருபை நிர்ஹேதுகம். நம்

தர்சனத்திற்கு ப்ரதான ப்ரதி தந்த்ரம் சரீராத்ம பாவம். பரமாத்மாவிற்கு ஜகத் சரீரம். அவன் ஜீவாத்மாவிற்குள் அந்தர்யாமியாக இருக்கிறான். இந்த தத்வங்களை ஸ்பஷ்டமாக ப்ரகாசப்படுத்தியிருக்கிறார்கள் ஆழ்வார்கள். வேதங்களாலும், வேத வேதாந்தங்கள் அறிந்தவர்களுக்குள் அக்ரேஸரர்களான வால்மீகி பகவான் பராசரர், வியாஸர் இவர்களுடைய திவ்ய ஸூக்திகளாலும், இவர்களைப் பின்பற்றிய ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திகளாலும் நாம் சம்சய விபர்யயமின்றித் தத்வஹித புருஷார்த்தங்களை அறியலாம்.

வேத ரஹஸ்யமான ரஹஸ்ய த்ரயத்தைப் பகவான்தானே அருளிச் செய்தான். உபநிஷத் ஸாரமான கீதையையும் அவனே அருளிச்செய்தான். "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம்" என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்கிறார். மந்த்ரம் என்று பகவானுக்கு ஒரு திருநாமம். (ஸஹஸ்ரநாமம்) "தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம்.' என்று கீதாசார்யன் வசனம். சாஸ்த்ரம் என்றால் வேதம். வேதம் முதல் ப்ரமாணம். எல்லோரும் சாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட வேண்டும். முமுக்ஷுவான சேதனனுக்கு ரஹஸ்யத்ரய ஜ்ஞானம், அர்த்த பஞ்சக ஜ்ஞானம், தத்வத்ரய ஜ்ஞானம் உண்டாக வேண்டும். இவைகள் அருளிச்செயலில் ப்ரகாசப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆசார்ய பரம்பரா ப்ராப்தங்களான அர்த்த விசேஷங்களெல்லாவற்றையும் லோகாசார்யன் ஸ்ரீவசன பூஷண பங்க்தியில் அறுதியிட்டருளுகிறார். இந்த ப்ரபந்தம் நம் தர்சனத்திற்கு இன்றியமையாதது.

வேதத்தில் ஆராதன ரூபமான கர்மமும், ஆராத்ய ரூபமான ப்ரம்மமும் ப்ரதிபாத்யம். தேவதாந்தரங்களை உத்தேசித்துப் பண்ணும் கர்மம் பகவதாராதன ரூபமாகத் தலைக்கட்டும். (அவரவர் விதி வழியடைய நின்றனரே) "மத்கர்மக்ருத்" என்கிறதற்கு வேதாத்யயநாதிஸர்வாணி கர்மாணிமத் ஆராதன ரூபேணய: கரோதி ஸ: மத்கர்ம க்ருத் என்று எம்பெருமானார் பாஷ்யம் அருளிச்செய்கிறார். எல்லா யஜ்ஞமும் பகவதாராதன ரூபம். பகவத் கைங்கர்யம். ஆகையால் கர்மம் கைங்கர்யத்தில் புகும் என்று பணிப்பது நம் தர்சனத்திற்கு ஒரு தனிச் சிறப்பு.

"அநந்தாவை வேதா:", என்கிறபடி வேதம் அளவில்லாதது. நம் போல்வார்க்கு வேத வேதார்த்தங்கள் பண்ணுவது மிகவும் கஷ்டம். 'ஆரணஸாரம்', சுடர் மிகு சுருதி' என்றே ஆழ்வார்கள் ஸ்ரீ ஸூக்திகள்.

இதிகாஸ புராணங்கள் ஸார அஸார மிச்ரம்; சதுரர்க்கொழிய மற்றவர்களுக்குத் தாத்பர்யாம்சம் அறிய முடியாது. புராணகர்த்தாக்களின் குணங்களையனுசரித்தே புராணங்கள் அவதரித்தன.

ஸகல வேதஸாரமான ரஹஸ்ய த்ரயம் அதிஸங்க்ரஹம், உபதேச கம்யார்த்தங்கள் இதில் அடங்கியிருக்கின்றன.

உபநிஷத்ஸாரமான கீதை தத்வபரம். அத்யாயங்களில் சொல்லப்படுகிற பல அர்த்தங்களுக்கு அந்யோந்ய விரோதம் வராமல் வேதாந்தங்களில் சஞ்சரித்து நம் தர்சனத்திற்கு அபிமதமான அர்த்தங்களை நிர்ணயம் பண்ண வேண்டும். இது நம் போல்வார்க்கு அரிது.

அருளிச் செயலோ, நாலாயிர திவ்ய ப்ரபந்தம் என்று ஒரளவு பட்டு வழங்கப்பட்டு வருகிறது. மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் வேத வேதாந்தார்த்தங்களை ஸங்க்ரஹித்து.

சேதனர்கள் ஸுலபமாகப் பருகும்படிக்கு ப்ரபந்தீகரித்தருளினர்கள். சாஸ்த்ரங்களைக் காட்டிலும் உபதேசாத்மகமாயிருக்கையாலும் வேதாந்தார்த்தங்களை அந்யாபதேசத்தால் மறைத்துச் சொல்லுகையாலும், அருளிச்செயலுக்கு ஏற்றமுண்டு. மேலும் பரம்பரா ப்ராப்தமான அர்த்தங்களைப் பின்புள்ளார்க்கு உபயோகப்படும்படி, பூர்வாசாரியர்கள் இவைகளுக்கு விஸ்தாரமான வியாக்யானங்கள் வெளியிட்டருளியிருக்கிறார்கள்.

"ஸத்யம், ஸத்யம், புனஸ் ஸத்யம்" என்கிறபடியே த்ராவிட வேதமான அருளிச்செயலும் சாஸ்த்ரந்தான்.

ஸ்ம்ஸ்க்ருத வேதங்களுக்கு லக்ஷணங்கள் அமைந்திருக்கிறாப் போல, தமிழ் வேதத்திற்கும் எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, நிரை யாப்பு... முதலிய லக்ஷணங்கள் அமைந்திருக்கின்றன.

ஸம்ஸ்க்ருத வேதம் கல்லும் மண்ணும் கலந்த கட்டிப் பொன். தமிழ் வேதம் பணிப் பொன். வேதமானது அத்யேதாக்களின் பேதத்தாலும், லோக பேதத்தாலும் பஹுவிதம். அதில் த்ராவிட வேதமும் ஒருவிதம். ஸம்ஸ்க்ருதம் த்ராவிடம் என்கிற பிரிவு ருகாதி பேதம் போலே; செந்திறத்த தமிழ் என்கையாலே ஆகஸ்த்யமும அநாதி. வடமொழி மறை என்பது தென்மொழி மறையை நினைத்திறே. ஓதுவார் ஒத்தெல்லாம் எவ்வுலகத் தெவ்வெவையும், என்கையாலே வேதம் பஹுவிதம் என்று சொல்வதில் குறையில்லை. வேதங்கள் வாச்யத்தை யடைந்து நிலைநில்லாமையாலே மீளும். யதோவாசோ நிவர்த்தந்தே. அருளிச்செயலிலே வாச்யம் வாசகத்தை விட்டுப் போகாது.

ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு ஸர்வாதிகாரத்வம் கிடையாது. திராவிட வேதத்திற்கு ஸர்வாதிகாரத்வம் உண்டு. இது இதற்கு ஒரு தனிச்சிறப்பு.

வேதத்திற்கு ஆரம்பத்திலும், முடிவிலும், ஓங்காரம் அநுஸந்திக்கப்படுகிறது. அதுபோல் அருளிச்செயல் அநுஸந்தானத்தில், திருப்பல்லாண்டு அநுஸந்திக்கப்படுகிறது.

"யத் வேதா தௌஸ்வரப்ரோக்த:" வேதத்திற்கு ஓம் என்னுமதுபோல்...... என்பன குறிப்பு. எம்பெருமானர் திருவாய்மொழி ஸூக்திகளைக் கொண்டு ஸூத்ர வாக்யங்களுக்கு அர்த்தங்களை நிர்ணயித்து ஒருங்கவிட்டருளுவர் என்று பூர்வர்கள் பணிப்பர். இதற்குக் காரணம் "வித்யச்ச"; நம்மாழ்வார் போல்வார் நினைவை சாஸ்த்ரங்கள்தான் பின் செல்லுவதாகப் பரமசார்யர் ஆளவந்தார் வசனமென்கை. தத்வதர்சியான நம்மாழ்வார் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் நான்கு. அவைகளில் திருவிருத்தம் ருக்வேதஸாரம், திருவாசிரியம் யஜுர் வேதஸாரம், பெரிய திருவந்தாதி அதர்வண வேத ஸாரம், திருவாய்மொழி ஸாம வேத ஸாரம் (தீர்க்க சரணகதி நீண்டத்வயம்).

சாந்தோக்யத்திற்கு உத்கீதம், ப்ரதானம்: அந்த உத்கீதந்தான் திருவாய்மொழியாக அவதரித்தது.

திருமங்கையாழ்வாரது ஆறு ப்ரபந்தங்களும் நம்மாழ்வார் ப்ரபந்தங்களுக்கு ஆறு அங்கங்கள். இவைகள் அர்ச்சாவதார ப்ராவண்யாதிகள். மூலமந்த்ர விவரணம். மற்ற ஆழ்வார்களுடைய ப்ரபந்தங்கள் உபப்பரம்ஹணங்கள். எல்லாம் தத்வத்ரய, ரஹஸ்யத்ரய சரணகதி விவரணங்கள்.

பீஷ்மாசார்யர் சரதல்பராய்க் கிடக்க அவரைக்கொண்டு நாட்டாருக்குத் தர்மங்களைச் சொல்லுவித்தாப் போலே, எம்

பெருமான் ஆழ்வார்களைக் கொண்டு தத்வ ஹித புருஷார்த்தங்களைச் சம்சயவிபர்யய மின்றி வெளியிட்டருளினான். (என்னாலும் தன்னைச் சொல்லிய சூழல் திருமாலவன்கவி யாது கற்றேன்).

ஆழ்வார்கள் பரத்வத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செயலில் அறுதியிட்டிருக்கிறார்கள். (உயர், திண், அணை, ஒன்று).

நாயமாத்மா ப்ரவசனேன லப்ய: நமேதயா நபஹு¬தா ச்ருதேந, யமேவைஷ வ்ருணுதே, தேந லப்ய:, தஸ்யைஷ ஆத்மா விஸ்ருணுதே தநும் ஸ்வாம் என்கிறபடி இந்த பரமாத்மா ச்ரவணத்தாலும், மனனத்தாலும், த்யானத்தாலும் அடையக் கூடியவனல்லன். அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலேதான், அவனை அறிய முடியும், அடைய முடியும். எவனை அந்த பரமாத்மா வரிக்கிறானோ அவனுக்குத் தன் திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டுகிறான். இது ஸ்வாதந்த்ரியத்தால் வரும் பாரதந்த்ரியம்.

வெறிதே அருள்செய்வர் செய்வார்கட்கு உகந்து. எம்மா பாவியற்கு விதிவாய்க்கின்றது; விதிவாய்க்கின்று காப்பாரார், என்னைத்தன் வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான், கோரமாதவம் செய்தனன்கொலறியேன், என் நன்றி செய்தேனா என் நெஞ்சில் திகழ்வதுவே; அருள்செய்வான் அமைகின்றான்; அது நமது விதிவகையே இறைவன் அத்யந்தபாரதந்த்ரியமுள்ளவன். மிகவும் ஸுலபன். நம்முடன் தாழநின்று பரிமாறுபவன்.

உணர்வில் உம்பர் ஒருவனை அவனதருளால் உறல்பொருட்டு என் உணர்வினுள்ளே இருத்தினேன் அதுவும் அவனது இன்னருளே.

பகவதநுபவ ப்ரீதிகாரித கைங்கர்யம் புருஷார்த்தம்: அதுவும் மிதுன கைங்கர்யம். (சென்றால் குடையாம், தொண்டே செய்து தொழுது வழியொழுக. உனக்கே நாம் ஆட்செய்வோம்.) என்கிறபடியே, கைங்கர்யந்தான் அநந்யப்ரயோஜனமாம்படி இருக்கவேண்டும். திருமந்த்ரத்தில் நம: கைங்கர்யத்தில் களையறுக்கிறது.

நாராயணனே நமக்கே பறை தருவான் என்கிற அத்யவஸாயம் வேண்டும். அவன்தான் பாற்கடல் துயின்ற பரமன். ஓங்கி உலகளந்த உத்தமன். ஊழி முதல்வன், முதல் தனி வித்து, தயரதன் பெற்ற மரதகமணித்தடம், மாயன், வடமதுரை மைந்தன், தூயோமாய் அவன் திருக்கோயிலுக்குச் சென்று வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க நம பூர்வ உத்தராகங்கள் மாய்ந்துபோம். கடங்கள் மேல் வினை முற்றவும் வேம்; இது மெய்.

விரையார் பொழில் வேங்கடவன் தான் நம் மதிளரங்கத்தம்மான். சேதனரை அடியார்க்கு ஆட்படுத்த விமலன்.

பகவத் கைங்கர்யத்தின் எல்லைநிலம் பாகவத கைங்கர்யம். ஆராதநாநாம் ஸர்வேஷாம் ததீயாராதநம் பரம். என்கிற படியே ஸகல வேத தாத்பர்யமான பாகவத சேஷத்வத்தை நெடுமாற்கடிமை, பயிலும் சுடரொளி, கண்சோர வெங்குருதி, தேட்டரும். நண்ணாத வாள்வுணர், மேம்பொருளுக்கு மேல்பாட்டுக்கள் இவற்றில் ஆழ்வார்கள் இதையே அறுதியிட்டிருக்கிறார்கள். நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை என்றன்றோ திருமங்கையாழ்வார் அறுதியிடுவது. பாகவத கைங்கர்யத்தின் எல்லைநிலம் ஆசார்ய கைங்கர்யம். அம்பொன் அரங்கற்கும், ஆவிக்கும் அந்தரங்கஸம்பந்தம் காட்டி, தடை

காட்டி, உம்பர்திவம் என்றும் வாழ்விற்குச்சேர்ந்த நெறிகாட்டுமவன் ஆசார்யன். "தேவுமற்றறியேன்" என்று மதுரகவிகள் அருளிச்செய்கிறார். "மதுரகவிகள் சொற்படியே நிலையாகப்பெற்றோம்" என்று ஆசார்யன் மணவாளமாமுனிகள் அறுதியிடுவது, ஆசார்யாபிமானமே நமக்கு உத்தாரகம். ஆசார்யன் நிழலிலே எப்போதும் நாம் இருக்கவேண்டும். இது ஸ்வரூபத்தை பல பர்யந்தமாக்கும். ஆசார்யன் நம் உஜ்ஜீவனத்துக்கு தத்வக்ஞானத்தை ப்ரகாசப்படுத்துகிறான். ஆசார்ய ஸம்பந்தம் மோக்ஷஹேது.

அருளிச்செயலில் அர்ச்சராதி மார்க்கத்தை "சூழ்விசும்பணிமுகிலில்" மிகவும் அழகாக ஆழ்வார் வருணிக்கிறார். இன்றும் அருளிச்செயலில் உபதேசபதிகங்கள் நமக்கு இன்றியமையாதவை. (நரகத்தை நகு நெஞ்சே).

ஐச்வர்யம் அஸ்திரம் (ஒருநாயகமாய்).

அருளிச்செயலின் உட்கருத்துக்கள், வேத வேதாந்தங்களின் உட்கருத்துக்களை அனுசரித்தே விளங்குவன. ஆகையால் அருளிச்செயல் மங்களமானவை என்பது ஸித்தம். நம்மையும் ஸாத்வீகர்களாக்கும்.

கறந்தபாலில் ஜலபாகம், அம்ருத பாகம் இரண்டும் ஒன்றிக்கிடக்கின்றன. அதுபோல அருளிச்செயல்கருத்துக்கள் வேதரஹஸ்யங்கள் இரண்டும் ஒன்றியிருக்கின்றன. ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கமுடியாது.

அடியார் குழாம், பொலிக பொலிக பொலிக. வேதம் வல்லார்கள் குழாங்கள் ஸம்ருத்தமாக வேண்டும், ஸம்ருத்தமாக வேண்டும், ஸம்ருத்தமாகவேண்டும்.

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

—